

## ஆசாரியஸ்வாமிகள்

# உபந்யாசங்கள்

கலைமகள் வெளியீடு

ஆசாரிய ஸ்வாமிகள்

# உபந்நியாசங்கள்

*1957—58*

2

கலைமகள் காரியாலயம்
சென்னை-4

# பதிப்புரை

பரம கருணு மூர்த்தியான நம் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் இந்த முறை (1957-1959) சென்னைக்கு விஜயம் செய்து, சென்னை வாசிகளெல்லாம் பலவகைப் பேறு பெறும்படி அருள் செய்த காலத்தில் மக்கள் நல் அறிவு பெறும்படி வேத சாஸ்திர சாரமான பல அரிய உபந்நியாசங்களையும் செய்தார்கள்.

அவைகளை அப்படியே ஆசாரியரவர்கள் ஆசி பெற்றுப் புத்தக உருவில் வெளியிடும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது.

முதல் பாகம் ஒன்று சென்ற ஒன்பது மாதத்துக்கு முன் வெளிவந்து, இரண்டு பதிப்புகள் விற்றுவிட்டன. மூன்றும் பதிப்பு அச்சாகி வருகிறது.

இது அவர்கள் பிரசங்கங்களின் 2 - ஆவது தொகுதி. மூன்ருவது தொகுதி ஒன்றும் விரைவில் வெளிவரும். இந்தப் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்ததற்குக் காரணமான ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத சந்த்ரமௌளீச்வரர் அருளை வாழ்த்துகிரேம்.

மயிலாப்பூர்,
மார்ச்சு, 1959.

பதிப்பாளர்

# பொருளடக்கம்

# ஆசார்யஸ்வாமிகள் உபந்நியாசங்கள்

## 2ம் பாகத்து சுத்தாசுத்த பத்ரிகை

| பக்கம் | வரி | அசுத்தம் | சுத்தம் |
|---|---|---|---|
| 11 | 19 | முகாலோபனம் | முகாலாபனம் |
| 11 | 25 | முகாலோபனம் | முகாலாபனம் |
| 48 | 11 | பேர் | பெயர் |
| 48 | 11 | பேர் | பெயர் |
| 48 | 12 | பேர் | பெயர் |
| 51 | 28 | தோர்பி: கரணம் | தோர்பி: கர்ணம் |
| 51 | 30 | கரணம் | கர்ணம் |
| 56 | 13 | நன்ருக | நீருக |
| 68 | 29 | வாய்வு | வாயு |
| 78 | 19 | பிந்திய | முந்திய |
| 79 | 19 | பேர் | பெயர் |
| 96 | 22 | வரிசையாக | எதிர் எதிராக |
| 101 | 32 | सूर्यकादिव | सूर्यकादिवत |
| 134 | 27 | திருநீற்றுப்புண்டிரம் | திருநீறு |
| 139 | 4 | ईशा | ईश |
| 139 | 4 | तित्तिरि | तित्तिरिः |
| 145 | 21 | சீதாள | சீதள |
| 146 | 31 | श्रुतीन | श्रुतीनां |
| 146 | 31 | शेकरतया | शेखरतया |
| 153 | 22 | கழுத்திலே | மற்றும் சிலர் கழுத்திலே |
| 155 | 2 | யோகஸம்ஜ்தம் | யோகஸம்ஞிதம் |
| 157 | 10 | வேதத்திற்குச் சரீரியாக | வேதத்திற்குப் பொருளாக |
| 166 | 24 | प्रवाळैरिव | पुरः प्रवाळैरिव |
| 178 | 6 | ன்றும் | என்றும் |
| 187 | 6 | தாமச | தமோ |
| 187 | 19 | தாமஸ | தமோ |
| 187 | 21 | தாமச | தமோ |



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும், ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும்.

# 1

# நீலமேக வண்ணன்

காளமேகம் என்று மகாவிஷ்ணுவைச் சொல்வதுண்டு. நீலமேக ச்யாமளன் என்றும் சொல்வதுண்டு. நீலோத்பல புஷ்பத்தைப் போல, நல்ல நீலவர்ண மேகத்தைப் போன்ற காந்தியுடைய மேனியான் மகாவிஷ்ணு. இந்த நீலமேக ச்யாமளனைத் தேவதைகள் எங்கே பார்த்தார்கள்? நல்ல நீருண்ட மேகத்தைப் பார்க்கும்போது அங்கே அவர்களுக்கு அவன் நினைவு வந்துவிடுகிறது. நல்ல நீலமேகத்தையே அவனுகப் பார்த்தார்கள்.

त्रिदशपरिषत् कालमेघं ददर्श ।

த்ரிதஶபரிஷத் காலமேகம் ததர்ஶ |

என்று ஒரு சுலோகத்தில் வருகிறது. த்ரிதசா: என்றுல் தேவதைகள். பரிஷத் - கூட்டம்.

தசை என்றுல் நிலைமை என்று அர்த்தம். நமக்கு நாலு தசை உண்டு. தசை என்பதைத்தான் பருவம் என்று தமிழில் சொல்கிருர்கள். பால்யம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்யம் என்பவை நான்கு பருவங்கள். பால்யம் என்றுல் குழந்தைப் பருவம்; அடுத்தது கௌமாரம் - இளமைப் பருவம்; யௌவனம் - நடுப்பருவம்; வார்த்தக்யம் என்பது கிழப்பருவம், விருத்தாப்பியம்; இப்படி நான்கு நிலைமை நமக்கெல்லாம். தேவலோகத்தில் உள்ளவர்களுக்கு மூன்று தசைகளே. நான்காவது தசை அவர்களுக்கு இல்லை. நரை வந்து, பல்லுப்போய் இருக்கும்படியான வார்த்தக்யம் என்பது அவர்களுக்குக் கிடையாது. அதனுல்தான் அவர்களுக்கு, त्रिदशाः மூன்று பருவத்தை உடையவர்கள் என்று பெயர். த்ரிதசர்களாகிய தேவதைகள் மகாவிஷ்ணுவினுடைய தரிசனத்திற்குப் போகிற காலத்தில் நீருண்ட

கருமையான நீலவர்ணத்தோடு கூடிய காளமேகத்தைப் பார்த்தார்களாம்.

सन्तापघ्नं सकलजगतां शार्ङ्गचापाभिरामं
लक्ष्मीविद्युल्लसितमतसीगुच्छसच्छायकायम् ।
वैकुण्ठाख्यं मुनिजनमनश्चातकानां शरण्यं
कारुण्यापं त्रिदशपरिषत् कालमेघं ददर्श ॥

ஸந்தாபக்நம் ஸகலஜகதாம் ஶார்ங்கசாபாபிராமம்
லக்ஷ்மீவித்யுல்லஸிதமதஸீகுச்சஸச்சாயகாயம் |
வைகுண்டாக்யம் முநிஜநமநஶ்சாதகாநாம் ஶரண்யம்
காருண்யாபம் த்ரிதஶபரிஷத் காலமேகம் ததர்ஶ ||

சகல லோகத்தினுடைய தாபத்தையும் போக்கக்கூடியவர் மகாவிஷ்ணு. அவருடைய தேக காந்தியோ நீருண்ட கார்மேகம் போன்றது. நீருண்ட காளமேகத்தையே அவராக இங்கே தேவதைகள் பார்த்தார்கள்.

மேகம் என்றால் அதற்கு என்ன என்ன அங்கங்கள் வேண்டுமோ அவை எல்லாம் இவரிடம் வேண்டாமா? மேகம் என்றால் வானவில் இருக்க வேண்டும். அதில் மின்னல் கொடி இருக்க வேண்டும். அதை எதிர்பார்த்திருக்கும்படியான சாதக பட்சி வேண்டும்.

மகாவிஷ்ணுவாகிய அந்த நீலமேகத்திற்கு வானவில் எது? மின்னல்கொடி எது? ஜனன தாபத்தைப் போக்கடிக்கும் அந்தக் காளமேகத்தை எதிர்பார்த்திருக்கும்படியான சாதக பட்சிகள் எவை?

सन्तापघ्नं सकलजगतां शार्ङ्गचापाभिरामम् ।

ஸந்தாபக்நம் ஸகலஜகதாம் ஶார்ங்கசாபாபிராமம் |

நல்ல காளமேகத்தினிடையே வில் ஒன்று விழுந்திருக்கும். அந்த வில் ஆச்சரியமான வர்ணங்களோடு இருக்கும். அதைத்தான் தமிழில் வானவில் என்கிறோம். சம்ஸ்கிருதத்தில் இந்திர தனுஸ் என்பார்கள்.

விஷ்ணுவினுடைய கையில் ரத்தினமயமான சார்ங்கம் இருக்கிறது. சார்ங்கத்தைக் கையில் வைத்திருப்பதனால்தான் சார்ங்கபாணி என்று ஒரு பெயர் அவருக்கு உண்டாயிற்று. சார்ங்கம் என்கிற சாபத்தை அவர் கையில் வைத்திருக்கிறார். மேகத்தில் உள்ள வானவில், சார்ங்கசாபமாகத் தோன்றுகிறது.

लक्ष्मीविद्युल्लसितमतसीगुच्छसच्छायकायम् ।

லக்ஷ்மீவித்யுல்லஸிதமதஸீகுச்சஸச்சாயகாயம் |

நீருண்ட நல்ல நீலமேகத்தினிடையே பளீர் பளீர் என்று மின்னும்படியான மின்னல்கொடி இருக்கிறது. வித்யுத் என்றால் மின்னல். அவருடைய மார்பிலே, மின்னல் கொடிபோல, சுவர்ண தேஜஸாகப் பிரகாசிக்கும் ஸாக்ஷாத் மகாலக்ஷ்மியாகிய மின்னல் இருக்கிறது.

அதஸீ என்றால் காயாம்பூ. குச்சம் என்றால் கொத்து. காயாம்பூவின் கொத்துக்குச் சமானமான காந்தியுள்ள சரீரத்தோடு கூடியவர் மகாவிஷ்ணு. அவர் மார்பிலே இருக்கும் மகாலக்ஷ்மியைப்போல இருக்கிறது காளமேகத்தின் இடையே பிரகாசிக்கும் மின்னல்.

वैकुण्ठाख्यं मुनिजनमनश्चातकानां शरण्यं
कारुण्यापं त्रिदशपरिषत् कालमेघं ददर्श ॥

வைகுண்டாக்யம் முனிஜநமநஶ்சாதகாநாம் ஶரண்யம்
காருண்யாபம் த்ரிதஶபரிஷத் காலமேகம் ததர்ஶ.

மகாவிஷ்ணு இருக்கும்படியான லோகத்திற்கும் வைகுண்டம் என்று பெயர். அவருக்கும் வைகுண்டன் என்ற பெயர் உண்டு.

वैकुण्ठो विष्टरश्रवाः ।
வைகுண்டோ விஷ்டரஶ்ரவா: |

என்று அமரத்தில் வருகிறது.

நம்முடைய கவிகள் தம் மகாகாவியங்களில் இரண்டு அபூர்வ பட்சிகளைச் சொல்வது வழக்கம். சாதகம் என்பது ஒரு பட்சி. சகோரம் என்பது ஒரு பட்சி. சகோரத்திற்கு ஆகாரம் சந்திரகிரணம். சந்திரன் இல்லாத அமாவாசையிலும் அதை அடுத்த இரண்டு மூன்று நாட்களிலும் அது பட்டினிதான்; சாந்திராயண விரதந்தான். மற்ற நாளில் அதுவும் பூர்ணமான சந்திரகிரணம் உள்ள தினங்களில் அதையே ஆகாரமாகச் சாப்பிடுவது சகோரம்.

பாலைவனங்களில் ஒட்டகம் அதிகமாக வாசம் செய்யும். சஹாரா பாலைவனம், ராஜஸ்தான் பாலைவனம் இப்படி இன்னும் சில இடங்கள் இருக்கின்றன. அங்கே தண்ணீர் எங்குமே கிடைக்காது: எட்டு மைல், பத்து மைல் தூரத்திற்கு ஒரு கிணறு இருக்கலாம். நம் பக்கங்களில் ஒரு பெரிய கோயில் கட்டுவதற்கு ஆகும் செலவைவிட இன்னும் அதிகமாகவே அங்கே ஒரு கிணறு வெட்டுவதற்கு ஆகும். கிணறு வெட்டினாலும் கொஞ்சம் ஜலந்தான் கிடைக்கும். பத்து லட்சம், ஐந்து லட்சம் என்று செலவழித்துப் பெரிய கிணறுகள் அங்கே வெட்டியிருக்கிறார்கள்; அங்கிருந்து ஜலத்தை எடுத்து ஒட்டகத்

தின் முதுகில் தோல்பையில் வைத்துக்கொண்டு வந்து ஊரெல்லாம் கொடுப்பார்கள். ஒரு குடத்திற்கு இவ்வளவு என்று காசு கொடுத்து வாங்கவேண்டும்.

ஒட்டகத்தின் சுபாவம், தண்ணீர் கிடைக்கிற ஓர் இடத்தில் நிறையத் தண்ணீரைக் குடித்துவிடும். அதற்கு நிறையத் தண்ணீரைத் தேக்கி வைத்துக்கொள்ளும்படியான குடல் இருக்கிறது. தண்ணீர் கிடைக்காத பாக்கி நாட்களில் இந்தத் தண்ணீரை உபயோகப்படுத்திக்கொள்ளும். ஒரு நாள் தண்ணீரை நிறையக் குடித்துவிட்டால் அப்புறம் அநேக நாட்கள் தண்ணீர் குடிக்க வேண்டாம். இது போன்றதுதான், சாதக பட்சி. அதனுடைய ஆகாரமே மழைத் திவலைதான். மழை பெய்யும் போது வாயைத் திறந்து ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு அந்த நீர்த் துளிகளைக் குடித்து அது ஜீவனம் பண்ணும். அப்புறம் மழை இல்லாத காலங்களில் ஆகாரம் இல்லை. கொஞ்சம் அதிக நாட்கள் மழை வராவிட்டால் அது 'மழை வராதா? மழை வராதா?' என்று ஏங்கிப் பார்த்துக்கொண்டிருக்குமாம். இப்படி மேகத்தைச் சொன்னால் உடனே சாதக பட்சியைச் சொல்வதும் இந்த நாட்டுக் கவிகளுடைய வழக்கம்.

சாதக பட்சி என்பது உண்டா, சகோர பட்சி என்பது உண்டா, வெறும் கதையா என்றால் எனக்குத் தெரியாது. இந்த இரண்டு பட்சிகள் இருப்பதாகச் சொல்லிக் காவியங்களில் கவிகள் வருணித்திருக்கிறார்கள்.

மழை பெய்யாதா, பெய்தால்தானே நமக்கு ஆகாரம் என்று ஏங்கியிருக்கிற சாதக பட்சி போல, கார்மேகவண்ணனது கருணைமழையை எதிர்பார்த்து இங்கே முனிஜனங்கள் சாதக பட்சிகளாக இருக்கிறார்கள்.

அநேகமாக மேகங்கள் ஒரே வெளுப்பாகத்தான் இருக்கும். சில சமயங்களில் சிறிது நீலநிறம் கலந்த வெண்மையாக இருக்கும். நிறைய நீரை உண்ட மேகங்கள் நல்ல கருநீலமாக - தோகை நிறமாக - பகவானுடைய மேனி வண்ணத்தை நினைப்பூட்டிக்கொண்டு இருக்கும். சில சமயத்தில்தான் அதைப் பார்க்க முடியும். நல்ல நீலமேகத்தைப் பார்த்தவுடன் நமக்கு அடுத்த இரண்டொரு நிமிஷத்திலேயே மழை வர்ஷமாகப் பொழிந்துவிடும் என்று தெரிகிறது. ஒரு குளிர்காற்று வெப்பத்தைத் தணித்துக்கொண்டு வீச ஆரம்பிக்கிறது. சகலப் பிராணிகளுக்கும் உள்ள தாபம் மேகத்தைக் கண்ட நிமிஷத்திலேயே தணிந்து போகிறது. இப்படி உள்ள அந்தக் கார்மேகத்தைச் சாதகபட்சிபோல முனிஜனங்கள் பார்த்துக்கொண் டிருக்

கிறார்களாம். ஜன்ம ஸாபல்யம் அடையச் செய்யும் இந்த நீலமேகத்தை - காளமேகத்தை - பகவானுடைய தரிசனத்திற்குப் போகிற த்ரிதசர்கள் பார்த்தார்கள். மழை இல்லாத ஊரில் நீருண்ட மேகம் வந்துவிட்டால், அதைப் பார்க்கிறவர்களுக்கு எப்படி இருக்கும்? சகல பிராணிகளுக்கும் அதைக் கண்ட மாத்திரத்திலே தாபம் தணிந்துவிடும்.

அந்த மாதிரி இந்த நீலமேகத்தைப் பார்த்தவுடன், கிட்டே என்ன இருக்கிறதென்று தெரியாது. அது எல்லாம் மறந்து போயிற்று. இருதய தாபம் தணிந்து அப்படியே குளிர்ந்து போயிற்று. எப்படிச் சாதக பட்சி மேகத்தைப் பார்த்து ஏங்கி நிற்குமோ அப்படி இவர்கள், 'உலகத்தில் இருக்கும் வேறு எந்தப் பொருளும் நம்மை ரக்ஷிக்கப் போகிறதில்லை. இந்த நீலமேகந்தான் ரக்ஷிக்கப் போகிறது' என்பதாக எண்ணி அப்படியே பார்த்துக்கொண் டிருக்கிறார்கள்.

सन्तापघ्नं सकलजगतां शार्ङ्गचापाभिरामं
लक्ष्मीविद्युल्लसितमतसीगुच्छसच्छायकायम् ।
वैकुण्ठाख्यं मुनिजनमनश्चातकानां शरण्यं
कारुण्यापं त्रिदशपरिषत् कालमेघं ददर्श ॥

ஸந்தாபக்நம் ஸகலஜகதாம் ஶார்ங்கசாபாபிராமம்
லக்ஷ்மீவித்யுல்லஸிதமதஸீகுச்சஸச்சாயகாயம் ।
வைகுண்டாக்யம் முநிஜநமநஶ்சாதகாநாம் ஶரண்யம்
காருண்யாபம் த்ரிதஶபரிஷத் காலமேகம் ததர்ஶ ॥

இப்படி இந்தச் சுலோகத்தில் மேகம், வானவில், மின்னல் கொடி, சாதகபட்சி இவை எல்லாவற்றையும் அழகாக மகா விஷ்ணு, அவர் கையிலுள்ள சார்ங்கம் என்ற வில், மார்பிலே மின்னல்போல் ஸ்வர்ணதேஜஸாக இருக்கும் ஸாக்ஷாத் மகாலக்ஷ்மி, மழையை எதிர்பார்த்து நிற்கும் சாதக பட்சிபோன்று அவரது கருணையை எதிர்பார்த்து நிற்கும் முனிஜனங்கள் இவைகளை எல்லாம் சொல்லி, இப்படிப்பட்ட காளமேகத்தைத் தேவர்கள் பார்த்தார்கள் என்று சொல்லி யிருக்கிறது.

அடுத்த சுலோகம்—

क्षीराम्भोधेर्जठरमभितो देहभासां प्ररोहैः
कालोन्मीलत्कुवलयदलाद्वैतमापादयन्तम् ।
आतन्वानं भुजगशयने कामपि क्षौमगौरे
निद्रामुद्रां निखिलजगतीरक्षणे जागरूकाम् ॥

க்ஷீராம்போதேர்ஜடரமபிதோ தேஹபாஸாம் ப்ரரோஹை:
காலோந்மீலத்குவலயதலாத்வைதமாபாதயந்தம் |
ஆதங்வாநம் புஜகஶயநே காமபி க்ஷேமகௌரே
நித்ராமுத்ராம் நிகிலஜகதீரக்ஷணே ஜாகரூகாம் ||

இவர் எங்கே இருக்கிருர்? 'क्षीराम्भोधेर्जठरे भुजगशयने - க்ஷீராம்போதேர்ஜடரே புஜகஶயநே.' க்ஷீரம் - பால். பாற்கடலுக்கு மத்தியிலே புஜங்கசயனத்தில் பள்ளிகொண் டிருக்கிருர். புஜங்க சயனம் என்பது பாம்பணை, பாம்புப் படுக்கை. ஆதிசேஷஞகிய படுக்கையின்மேல் சயனித்துக்கொண் டிருக்கிருர்.

பாற்கடல் ஒரே வெண்மை. ஆதிசேஷனும் அப்படித்தான். வெண்பட்டு மெத்தைபோல இருக்கிறது ஆதிசேஷன் சரீரம். அதன்மேல் படுத்திருக்கிருர். இவர் நிறம் எத்தகையது?

कालोन्मीलत्कुवलयदलाद्वैतमापादयन्तम् ।
காலோந்மீலத்குவலயதலாத்வைதமாபாதயந்தம் |

குவலயம் என்பது நீலோத்பல புஷ்பம். இந்தப் புஷ்பம் பகலெல்லாம் மூடியிருக்கும். சாயங்காலம் சந்திரமண்டலத்தைக் கண்டவுடன் மலரும். பகவான் கருங்குவளைப் புஷ்பம் போல, நீருண்ட மேகம்போல இருக்கிருர். ஒரே கருநீலம். அவர் படுத்திருக்கிற இடமும் மெத்தையும் ஒரே வெளுப்பு. வெளுப்புக்கு நடுவிலே நல்ல கருநீலம் நன்ருகப் பிரகாசிக்கிறது.

இவை இரண்டும் ஒன்றுக்கொன்று எவ்வளவு மாறுபட்டனவோ அப்படித்தான் அவர் இருக்கிற நிலேயும், அவரது தொழிலும்.

பெருமாளுக்கு என்ன உத்தியோகம்? ஜகத்தை எல்லாம் பரிபாலனம் பண்ணுகிற உத்தியோகம். பிரம்மா ஜகத் சிருஷ்டியையும், விஷ்ணு பரிபாலனத்தையும், ருத்திரன் சம்ஹாரத்தையும் ஏற்றுக்கொண்டார்கள். இவருக்கு லோகம் முழுக்க நிர்வாகம் பண்ணுகிற உத்தியோகம். பதினுன்கு லோகத்தையும் பரிபாலிக்கும்படியான காரியத்தை எடுத்துக்கொண் டிருக்கிறவர் கொஞ்சமாவது தூங்கலாமா? இவர் தொழிலோ பரிபாலிப்பது; ஆனுல் நிலேயோ, பாற்கடலின் மத்தியில் புஜங்க சயனத்தின்மேல் தூங்குவது.

निद्रामुद्रां निखिलजगतीरक्षणे जागरूकाम् ।
நித்ராமுத்ராம் நிகிலஜகதீரக்ஷணே ஜாகரூகாம் |

முத்திரை என்ருல் கையை ஒரு தினுசாகக் காட்டுவது. அவர் ஜகத்தை ரக்ஷிக்கவில்லே. அவருடைய நித்திரை இருக்

கிறதே, அதுவே கண்கொட்டாமல் உலகத்தை ரக்ஷிக்கிறது. ஜாகரூகாம் என்றால், கண் கொட்டாமல் பார்ப்பது. இவரும் கண் கொட்டுகிறதில்லை. ஒரே தூக்கம். நித்திரா முத்திரையினால் தூக்கத்துக்கும் கண் கொட்டாமல் உலகத்தை ரக்ஷிக்கும் அதிகாரத்தைக் கொடுத்துவிட்டார். தூக்கம் கண்கொட்டாமல் உலகத்தை எல்லாம் ரக்ஷிக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலான முத்திரை நித்திரா முத்திரை. இதற்கு மேலே தனி முத்திரை எதுவும் வேண்டியதில்லை.

அவரோ கருநீலம்; அவர் படுத்திருக்கும் பாம்பணையோ பாற்கடலோ சுத்த சத்துவமான ஒரே வெளுப்பு. அவர் தொழிலோ ஜகத்தையெல்லாம் ரக்ஷிப்பது. அவர் இருக்கும் நிலையோ ஒரே தூக்கம். இவை ஒன்றுக்கொன்று நேர் விரோதமாக இருக்கின்றன.

இதுதான் ஈசுவர சக்தி. இதற்குத்தான் மாயை என்று பெயர். மாயை என்றால் எவை ஒன்றோடொன்று சேராவோ அவற்றையெல்லாம் சேர்த்து வைப்பது.

अघटितघटनापटीयसी माया ।

அகடிதகடநாபடீயஸீ மாயா |

சேராததை முடித்து வைப்பது எதுவோ அதுதான் மாயை. எது இன்னதென்று சொல்ல முடியாததோ அதுதான் மாயை.

த்வைதம் என்றால் அது வேறே, இது வேறே என்ற கொள்கை. அத்வைதம், இரண்டும் ஒன்று என்பது. பாற்கடலும் நீலமேக காந்தியும் வேறு வேறு இல்லை, ஒன்றுதான். பாற்கடல், நீலமேக காந்தி என்னும் இரண்டும் த்வைதம் போல் இருந்தாலும் அத்வைதமாகப் போய்ப் பாற்கடல் முழுக்க நீலக் கடலாகப் போய்விட்டது.

क्षीराम्भोधेर्जठरमभितो देहभासां प्ररोहैः
कालोन्मीलत्कुवलयदलाद्वैतमापादयन्तम् ।
आतन्वानं भुजगशयने कामपि क्षौमगौरे
निद्रामुद्रां निखिलजगतीरक्षणे जागरूकाम् ॥

க்ஷீராம்போதேர்ஜடரமபிதோ தேஹபாஸாம் ப்ரரோஹை:
காலோந்மீலத்குவலயதலாத்வைதமாபாதயந்தம் |
ஆதந்வாநம் புஜகஶயநே காமபி க்ஷௌமகௌரே
நித்ராமுத்ராம் நிகிலஜகதீரக்ஷணே ஜாகரூகாம் ||

ஐம்பது வருஷத்திற்கு முந்தி இந்தச் சுலோகத்தை நான் சொன்னவுடனேயே முந்நூறு நானூறு பிராமணர்களுக்காவது

இந்தச் சுலோகம் எங்கே இருக்கிறது என்று தெரிந்துவிடும்: முக்கால்வாசிப் பேருக்குத் தெரிந்துவிடும். இப்போது பட்டணத்தில் கால்வாசிப் பேருக்குத் தெரியலாம். கிராமங்களிலே அதுகூடத் தெரியாது. இது எங்கே வருகிறது, யார் சொன்னார்கள் என்பதைக் கடைசியில் நானே சொல்லிவிடுகிறேன்.

தொழிலோ ஜகத்தைப் பரிபாலிப்பது. நிலையோ ஒரே தூக்கம். இப்படித் தூங்குகிறவர் என்ன காரியத்தைச் செய்யப் போகிறார் என்று நினைக்கலாமா? ஒரு காரியத்தைச் செய்வது என்று கண்ணை விழித்தார் என்றால் - ஆவிர்ப்பவித்தார் என்றால் - ஒரே க்ஷணத்தில் பல காரியங்களைச் செய்துவிடுவார். அது எப்படித் தெரியும்? அவர் சிம்ம வேஷத்தில் தெற்றுப்பற்கள் எல்லாம் தெரியும்படியாக வெளிப்பட்டபோது தெரிந்தது.

दंष्ट्रारोचिर्विशदभुवने रंहसा सिंहवेषे ।

தம்ஷ்ட்ராரோசிர்விஶதபுவநே ரம்ஹஸா ஸிம்ஹவேஷே |

தம்ஷ்ட்ரா என்றால் தெற்றுப் பல். ஒன்றைச் செய்வது என்று அவர் ஆவிர்ப்பவித்தார். ஒரு காரியத்தை மாத்திரம் அந்த ஒரு விநாடியில் செய்யவில்லை. நான்கு காரியங்களை ஒரே விநாடியில் ஸங்கல்பமாத்ரேண செய்துவிட்டார்.

प्रह्लादस्य व्यसनममितं दैत्यवर्गस्य दम्भं
स्तम्भं वक्षःस्थलमपि रिपोर्यौगपद्येन भेत्तुम् ।
बद्धश्रद्धे पुरुषवपुषा मिश्रिते विश्वदृष्टे
दंष्ट्रारोचिर्विशदभुवने रंहसा सिंहवेषे ॥

பிரஹ்லாதஸ்ய வ்யஸநம் அமிதம் தைத்யவர்கஸ்ய தம்பம்
ஸ்தம்பம் வக்ஷஸ்தலமபி ரிபோர்யௌகபத்யேந பேத்தும் |
பத்தஶ்ரத்தம் புருஷவபுஷா மிஶ்ரிதே விஶ்வத்ருஷ்டே
தம்ஷ்ட்ராரோசிர்விஶதபுவநே ரம்ஹஸா ஸிம்ஹவேஷே ||

இது அடுத்த சுலோகம். யௌகபத்யம் என்றால் ஒரே காலத்தில் செய்யும் தன்மை. இப்படித் தூங்கிக்கொண்டே இருப்பார். காரியம் செய்வது என்று கண்ணை விழித்தாரோ எல்லாவற்றையும் ஒரே கணத்தில் செய்துவிடுவார். ஒருத்தரும் அப்படிப் பண்ணமுடியாது. நான்கு பொருள்களை ஒரே க்ஷணத்தில் அடித்துப் பிளந்துவிட்டார். நாம் எல்லாரும் ஒரு சமயத்தில் ஒன்றைத்தான் பிளப்போம். அவர் நான்கையும் சேர்த்துப் பிளந்துவிட்டார்.

प्रह्लादस्य व्यसनं अमितम्

ப்ரஹ்லாதஸ்ய வ்யஸநம் அமிதம்

பிரஹ்லாதனுடைய வ்யஸனத்தை, அவன் இருதயத்தில் இருக்கும்படியான தாபத்தை, துக்கத்தைப் பிளந்தார். அது ஒன்று. வ்யஸனம் என்ருல் துக்கம். பிரஹ்லாதனுக்குத் துக்கம் என்ன? தன்னை அப்பா ஹிம்சிக்கிருரே என்ற துக்கம் இல்லை. 'நம்முடைய அப்பா இப்படிப் பகவத் துவேஷியாக இருக்கிருரே; இவருக்கு எப்படி மோக்ஷம் கிடைக்கும்?' என்று அவன் பட்டுக்கொண்டிருந்த வ்யஸனத்தை, இருதய தாபத்தை, ஒரே க்ஷணத்தில் போக்கினுர். அது மாத்திரமா?

## दैत्यवर्गस्य दम्भम्
### தைத்யவர்கஸ்ய தம்பம்

அசுரர்கள் எல்லாரும் நிறைய அக்கிரமங்கள் பண்ணிஞர்கள். பிரஹ்லாதனுடைய அப்பா, பிறருக்கு மிகவும் ஹிம்சை பண்ணிக்கொண் டிருந்தான். அதற்குக் காரணம் என்ன? 'நாம் என்ன பண்ணிஞல் என்ன? நம்மைக் கேட்பதற்கு யார் இருக்கிருர்கள்?' என்ற இறுமாப்பினுல்தான் அப்படிப் பண்ணினுன். அந்த அசுரக் கூட்டத்தினுடைய இறுமாப்பையும் அவர் பிளந்து தள்ளினுர். இது இரண்டாவது காரியம். அடுத்தது என்ன?

## स्तम्भम्
### ஸ்தம்பம்

தூண். 'இந்தத் தூணில் இருக்கிருர்' என்று பிரஹ்லாதன் சொன்னுன் அல்லவா? அந்தத் தூணையும் இரண்டாகப் பிளந்து கொண்டு வந்தார். இது மூன்ருவது காரியம். அப்புறம்?

## वक्षःस्थलमपि रिपोः
### வக்ஷஸ்தலமபி ரிபோ:

வக்ஷஸ்தலம் - மார்பு. இரணியகசிபுவின் மார்பையும் பிளந்து தள்ளிவிட்டார். இது நான்காவது காரியம். இந்த நான்கு காரியங்களையும் முதலில் ஒன்று, அப்புறம் ஒன்று என்று வரிசையாகவா செய்தார்? இல்லை. ஒரே க்ஷணத்தில் இந்த நான்கு காரியங்களையும் செய்துவிட்டார். இந்த நான்கும் பிளந்து போகும்படியாகச் செய்துவிட்டார்.

बद्धश्रद्धं पुरुषवपुषा मिश्रिते विश्वदृष्टे
दंष्ट्रारोचिर्विशदभुवने रंहसा सिंहवेषे ॥

பத்தஶ்ரத்தம் புருஷவபுஷா மிஶ்ரிதே விஶ்வத்ருஷ்டே
தம்ஷ்ட்ராரோசிர்விஶதபுவநே ரம்ஹஸா ஸிம்ஹவேஷே ||

பிரஹ்லாதனுடைய தாபம், அசுரர்களுடைய இறுமாப்பு, தூண், சத்துருவினுடைய மார்பு இந்த நான்கையும் ஒரே க்ஷணத்

தில் பிளந்தார். இந்த நான்கும் அவர் நரசிம்ம ஸ்வாமியாக ஆவிர்ப்பவித்த அந்த க்ஷணமே பிளந்து போய்விட்டன.

இன்னொரு கதை சொல்கிறேன். போஜன் என்பவர் ஒரு மகாராஜா. அவருடைய சபையில்தான் காளிதாசர் என்ற கவி இருந்தார். இப்போது நான் சொல்லப்போகிற கதையை அநேகமாக முக்கால்வாசிப் பேர் கேட்டிருப்பார்கள். இன்னும் ஐம்பது வருஷம் கழித்து இது ஒருத்தருக்காவது தெரியப் போகிறதோ இல்லையோ?

அந்தக் காலத்தில் நல்ல கவிதையாக யாராவது ஒருத்தர் எழுதிவிட்டால் போஜராஜன் அதை எழுதியவருக்கு ஓர் எழுத்துக்கு ஒரு லட்சம் என்று கொடுப்பானும்; அக்ஷர லக்ஷம் கொடுப்பான். அவனிடமிருந்து கவிகள் அப்படிச் சம்பாதித்தார்கள். போஜராஜனிடமிருந்து அப்படிப் பணத்தை வாங்கிக்கொண்டவர் காளிதாசர். இருவரும் ஒருத்தருக்கு ஒருத்தர் ஸ்நேகம்; பிரியம். அதிக ஸ்நேகம் வந்துவிட்டால் அதிக விரோதம் வந்துவிடும். அதிகப் பிரியம் வந்தால் அதிகத் துக்கம் வந்துவிடும். அளவுக்கு மிஞ்சிப் பழகுகிற இடத்தில் இது தெரியும். முன்பு எப்படி இருந்ததோ அதற்கு நேர்மாருகப் போகும். அந்த மாதிரி போஜராஜனும் காளிதாசரும் மிகவும் அதிகமாகப் பழகி இரண்டு பேரும் சேர்ந்து எதையும் அநுபவிப்பது, கவிதாரசத்தை ஆராய்வது என்று உலகமே ஆச்சரியமடைந்து பாராட்டும்படியாக இருந்தார்கள். மனசோ வாக்கோ காயமோ எல்லாம் அவர்களுக்கு ஒன்றுதான்.

இப்படி இருக்கும்போது போஜ மகாராஜாவுக்கு ஒரு நாள் விபரீத யோசனை தோன்றியது.

'கெடுவான் கேடு நினைப்பான்.'

பிறருக்குக் கேடு நினைப்பான் என்பது இருக்கட்டும்; தனக்கே கேடு நினைப்பான்.

போஜராஜனுக்கு என்ன தோன்றியது? 'காளிதாசனுக்கு ஸாக்ஷாத் பரதேவதையின் கடாக்ஷத்தினுலே வாக்குப் பொங்கி வழிகிறது. அவன் வாக்கிலிருந்து இதுவரைக்கும் பொங்கி வந்திருக்கும்படியான கவிதை அமிர்தத்தை வேண்டுமளவு அநுபவித்திருக்கிறோம். அவன் வாயிலிருந்து எல்லா விஷயங்களைப்பற்றியும் கேட்டாகிவிட்டது. நான் மரணம் அடைந்த பிறகு ஒரு சரம சுலோகம் எழுதுவான் அல்லவா? அதைக் கேட்க நமக்குப் பிராப்தி இராதே; அது எப்படி இருக்குமோ? அதை மற்றவர்கள் கேட்பார்களே தவிர நான் எப்படிக் கேட்க முடியும்?' என்ற எண்ணம் வந்துவிட்டது.

உடனே காளிதாசரை அழைத்துவரச் சொன்னுன். காளிதாசர் வந்தவுடன், ''உன்னை எதற்காக நான் இப்போது அழைத்தேன் தெரியுமா? நான் செத்துப் போய்விட்டேன் என்று வைத்துக்கொள். அப்போது என்பேரில் என்ன எழுதுவாயோ அதை இப்போது எழுதி எனக்குக் கொடுக்க வேண்டும். அந்தச் சரம சுலோகத்தை நான் இப்போதே கேட்க வேண்டும்'' என்று சொன்னுன்.

''மகாராஜா, இது என்ன விபரீத புத்தி? இதைச் செய்ய வேண்டும் என்று எனக்கு உத்தரவு போடுகிறீர்களே.''

''இல்லை. நீ எழுதித்தான் ஆகவேண்டும்.''

''நான் எழுதுவதா? எனக்கு என்ன தெரியும்? நான் ஓர் ஆட்டு இடையனுக இருந்தேன். அவள் எதையோ போட்டாள். ஆட்டுப் புழுக்கை என்று தூதூ என்று துப்பியவன்; சாக்ஷாத் அம்பாளுடைய கடாக்ஷத்தினுல் அல்லவா இன்றைக்கு இந்த வாயிலிருந்து கவிதை பிறந்துகொண் டிருக்கிறது? என் வாக்கினுலே ஒன்று பாடினுல் அப்படியே நடந்துவிடும்; அதனுல் நான் பாட முடியாது.''

''முடியாதா? நீ பாடவில்லை என்ருல் எனக்கும் உனக்கும் முகாலோபனம் கிடையாது. ராஜ உத்தரவைத் தட்டினுல் நீ ஒரு பிரஷ்டன் ஆகிவிடுவாய். பிரஷ்டன் அப்புறம் இந்த ராஜ்யத்தில் இருக்க முடியுமா?''

இப்படி அவர்கள் இரண்டு பேருக்கும் சண்டை வலுத்தது.

''நல்லது மகாராஜா. நீங்கள் நன்ருக இருந்தாலே போதும். இத்தனை நாளும் கவியை வைத்து ஆதரித்துக்கொண் டிருந்த தாங்கள் இனி என்னுேடு முகாலோபனம் பண்ணுவிட்டாலும் பரவாயில்லை. தங்கள் உத்தரவை மீறிய பிரஷ்டனுக நான் எங்காவது போய்விடுகிறேன். இந்தத் தேசமும் கவிகளும் எல்லாரும் நன்ருக இருக்கவேண்டுமென்ருல் நான் பிரஷ்டனுகத் தான் போகவேண்டும். அதுதான் உங்கள் உத்தரவும்'' என்று சொல்லிவிட்டுச் சபையை விட்டே காளிதாசர் போய்விட்டாராம்.

போனவர் ராத்திரியே அந்தத் தேசத்தை விட்டு எங்கோ கிளம்பிவிட்டார். காளிதாசரைப் பொழுது விடிந்தால் காணவில்லை. போஜராஜாவுக்கு மிகவும் துக்கம். காளிதாசர் எங்கே இருக்கிருர் என்று கண்டுபிடித்துவிட் வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று.

அந்த நாளில் எந்தச் சமாசாரம் நடந்தாலும் அதனுடைய உண்மையை அறிவதற்கு ராஜா மாறுவேஷம் போட்டுக்

கொண்டு வருவான். ஒரு சேவகனைப் போல, ஒரு பிச்சைக் காரனைப் போல, குடுகுடுப்பைக்காரனைப்போல வேஷம் போட்டுக்கொண்டு எங்கே கலவரம் நடந்தாலும் அங்கேயே போய் விஷயத்தை நன்றாகத் தெரிந்துகொண்டு வந்துவிடுவான். இப்போதோ ஒரு கமிஷனைப் போடுவது, அதனுடைய ரிப்போர்ட்டை இன்னொரு கமிட்டிக்குத் தாக்கல் செய்வது, அப்புறம் பல சாட்சி, அதற்குமேல் விசாரணை, தீர்ப்பு என்பவை எல்லாம் நடக்கின்றன. இதில் ஒன்றுக்கொன்று விரோதமான 'ரிப்போர்ட்' வந்துவிடும்.

அந்தக் காலத்தில் மாறுவேஷம் போட்டுக்கொண்டு ராஜாவே நேரில் போய்விடுவான். ஒவ்வொரு நாளும் ராஜ்யத்தில் என்ன நடக்கிறது என்ற உண்மையைத் தெரிந்துகொள்ள அப்படிப் போவான். இப்போது ஸி. ஐ. டி.க்காரர்கள் செய்கிற வேலை போன்றதுதான் அது. யுத்த காலத்தில் வேறு தேசங்களுக்குச் சென்று உளவு பார்ப்பதற்குத்தான் வேறு யாரையாவது அனுப்புவார்கள். அவர்களைச் 'சாரர்' என்று சம்ஸ்கிருதத்தில் சொல்வார்கள். தமிழில் ஒற்றர் என்பார்கள்.

இப்படிப் போஜராஜன் காளிதாசரைக் கண்டுபிடிக்க மாறு வேஷம் போட்டுக்கொண்டு புறப்பட்டுவிட்டான்.

'காளிதாசன் என்ற உருவத்தில் நாம் இந்தத் தேசத்தை விட்டு எங்கே போனாலும் ஜனங்கள் நம்மைக் கண்டுகொண்டு விடுவார்கள்' என்று எண்ணின காளிதாசர் அந்த ஊரை விட்டுக் கிளம்பும்போது வேறு வேஷம் போட்டுக்கொண்டு புறப்பட்டார். அவர் என்ன வேஷம் போட்டுக்கொள்ளலாம் என்று பார்த்துக் கடைசியில் ஈசுவரனுடைய வேஷத்தைப் போட்டுக்கொண்டு போகலாம் என்று தீர்மானித்தார். ஈசுவரனுடைய வேஷத்தில் இரண்டு அம்சம். ஒன்று பிட்சாடனர்; மற்றொன்று பித்தன். காளிதாசர் பைத்தியக்காரப் பிச்சைக் காரனைப்போல, சந்நியாசியைப்போல, வேஷம் போட்டுக் கொண்டு ஊர் ஊராகப் போய்க்கொண் டிருந்தார். போஜ ராஜனே குடுகுடுப்பைக்காரன் வேஷத்தில் ஊர் ஊராகச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தான். மற்ற விஷயங்களில் எல்லாம் இவர்கள் இரண்டு பேரும் எப்படி ரசிகர்களோ அது மாதிரி வேஷம் போட்டுக்கொள்வதிலும் சமர்த்தர்கள்போல் இருக்கிறது!

ஒரு நாளைக்கு இவர்கள் இரண்டு பேரும் சந்திக்கும் சந்தர்ப்பம் வந்துவிட்டது. காளிதாசர் பைத்தியக்காரச் சந்நியாசி வேஷம் போட்டுக்கொண் டிருந்தார் அல்லவா? அந்த வேஷத்திற்குத் தகுந்தாற்போல நடக்கவேண்டும் என்று எண்ணி ஒரு

கசாப்புக் கடைக்குள் நுழைந்து தம்முடைய தண்டத்தினலே மாமிசத்தைத் தொட்டு, ''என்ன விலே?'' என்று கேட்டுக்கொண்டிருந்தார். அதை இந்தக் குடுகுடுப்பைக்காரன் வேஷத்தில் இருக்கும் போஜராஜன் பார்த்தான். அந்தச் சந்நியாசிதான் காளிதாசர் என்பது அவனுக்குத் தெரியவில்லே. 'வேஷமோ சந்நியாசி. இவனே மாமிசம் விலே கேட்கிருன். இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே!' என்று மெல்ல அவனிடம் போய்,

भिक्षो मांसनिषेवणं किमुचितम्?

பிக்ஷோ மாம்ஸநிஷேவணம் கிமுசிதம்?

''சந்நியாசியே, மாமிசம் சாப்பிடலாமா?'' என்று கேட்டானும்.

தன்னைக் கேட்பவன் போஜராஜன் என்பது காளிதாசருக்கும் தெரியவில்லே.

किं तेन मद्यं विना?

கிம் தேந மத்யம் விநா?

''கள்ளைக் குடிக்காது போனல் மாமிசம் ஜரிக்காது'' என்று அவர் ஏதோ பதிலுக்குச் சொன்னராம். உடனே போஜராஜன், ''நீயோ சந்நியாசி. கள்ளும் மாமிசமும் எல்லாம் சாப்பிடலாமா?'' என்று கேட்டான்.

भ्रष्टस्य काऽन्या गतिः?

ப்ரஷ்டஸ்ய காந்யா கதி:?

''பிரஷ்டனுக்கு வேறு என்ன கதி இருக்கிறது?'' என்று காளிதாசர் பதில் சொன்னவுடன் போஜராஜனுக்கு, 'அடேடே! இவன்தான் காளிதாசன் போல் இருக்கிறது!' என்று தோன்றிவிட்டது. அவர்கள் இரண்டு பேரும் சிநேகமாக இருந்தபோது கடைசியாகப் போஜன், 'நான் ராஜா. நான் சொல்வதைக் கேட்கவில்லே என்ருல் நீ பிரஷ்டன்' என்று சொன்னுன் அல்லவா? அவனுக்கும், 'இவனேப் பிரஷ்டன் என்று சொல்லிவிட்டோமே' என்று நெஞ்சை அரித்துக்கொண்டிருந்தது. காளிதாசன் 'பிரஷ்டஸ்ய காந்யா கதி:?' என்று சொன்னவுடன், 'இவன்தான் காளிதாசன்' என்று போஜன் தெரிந்துகொண்டுவிட்டான்.

''இவ்வளவு தூரம் நீ என்னைக் கேட்கிருயே? நீ எந்த ஊர்?'' என்று குடுகுடுப்பைக்காரனைப் பார்த்துப் பிச்சைக்காரச் சந்நியாசி கேட்டானும். போஜன் பொய் சொல்லவில்லே. ''நான் இருக்கிறது தாரா நகரம். அங்கிருந்துதான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டான். போஜராஜாவின் நகரம் தாரா

நகரந்தானே? அதனாலே, ''போஜராஜா சௌக்கியமாக இருக்கிறாரா?'' என்று அவரைக் காளிதாசர் கேட்டார். 'இதுதான் சமயம், இவன் வாயினாலேயே சரம சுலோகத்தைக் கேட்க' என்று போஜராஜாவுக்குத் தோன்றிவிட்டது.

உடனே கொஞ்சம் அழுகிறாற்போல் அழுதுவிட்டு, ''அதுவா? அதை ஏன் கேட்கிறாய்? அவர் செத்துப்போய் இன்றைக்குத்தான் ஆறும் நாள்'' என்று மிக்க துக்கத்தோடு சொல்வது போலச் சொல்லிவிட்டான். உடனேயே காளிதாசர் ஒரு சுலோகம் பாடிவிட்டார்:

अद्य धारा निराधारा निरालम्बा सरस्वती ।
पण्डिताः खण्डितास्सर्वे भोजराजे दिवं गते ॥

அத்ய தாரா நிராதாரா நிராலம்பா ஸரஸ்வதீ |
பண்டிதா: கண்டிதாஸ்ஸர்வே போஜராஜே திவம் கதே ||

போஜராஜன் சொர்க்க லோகத்திற்குப் போனவுடன் தாரா நகரம் 'நிராதாரா'வாகப் போய்விட்டது. இதுவரையிலும் அதற்கு ஆதரவாகப் போஜன் இருந்தான். இப்போது தனக்கு ஆதரவாக இருந்த ராஜனை இழந்து நிராதரவாகப் போய் விட்டது நகரம்.

போஜராஜன் இருக்கிறவரைக்கும் ஸரஸ்வதிக்கு ஓர் பிடிப்பு இருந்தது. இப்போது அது இல்லாமற் போயிற்று.

निरालम्बा सरस्वती

நிராலம்பா ஸரஸ்வதீ

போஜன் இருந்தவரைக்கும் பண்டிதர்கள் எங்கே இருந்தாலும் பாராட்டப்பட்டார்கள். இப்போது பண்டிதர்கள் எங்கே கண்டாலும் கண்டிக்கப்படுவார்கள்.

पण्डिताः खण्डितास्सर्वे

பண்டிதா: கண்டிதாஸ்ஸர்வே

இது எல்லாம் எதனாலே?

भोजराजे दिवं गते ।

போஜராஜே திவம் கதே|

போஜராஜன் சொர்க்கலோகம் போய்விட்டான்:

இந்தப் பாட்டைக் காளிதாசர் சொன்னாரோ இல்லையோ, அந்தக் குடுகுடுப்பைக்காரன், போஜராஜா, அப்படியே செத்து

விழுந்துவிட்டான். ''ஐயோ, நீயேதானு போஜராஜன்? நான் சரமசுலோகம் பாடமாட்டேன் என்றேனே! கேட்டாயா? உன் பிடிவாதத்தினுல் இறந்து போய்விட்டாயே!'' என்று கவி மிகவும் துக்கப்பட்டாராம். அவருடைய துக்கத்தைச் சகிக்கமாட்டாமல் சரஸ்வதி ஆவிர்ப்பவித்து, ''நடந்தது நடந்ததுதான். முன்பு பாடியதை வேண்டுமானுல் மாற்றிப் பாடு. உனக்காக அவனுக்கு ஒரு மூன்றேமுக்கால் நாழிகை உயிர் கொடுக்கிறேன். வாய் வார்த்தையாவது பேசிக்கொள்ளுங்கள்'' என்று அநுக்கிரகம் செய்தாளாம். காளிதாசர் தாம் முன்பு பாடிய பாட்டை அப்படியே திருப்பி,

अद्य धारा सदाधारा सदालम्बा सरस्वती ।
पण्डिता मण्डितास्सर्वे भोजराजे भुवं गते ॥

அத்ய தாரா ஸதாதாரா ஸதாலம்பா ஸரஸ்வதீ |
பண்டிதா மண்டிதாஸ்ஸர்வே போஜராஜே புவம் கதே ||

என்று பாடினுன். போஜராஜன் கண்ணை விழித்து எழுந்தானும். காளிதாசர் போஜராஜனைக் கட்டிக்கொண்டு, ''ராஜா, இப்படிச் செய்துவிட்டீர்களே. இன்னும் மூன்றேமுக்கால் நாழிகைதானே நீங்கள் உயிரோடு இருப்பீர்கள்?'' என்று துக்கப்பட்டபோது, ''துக்கப்படாதே. நான் இறந்துபோனுல் என்ன? இறந்து போவது துக்கமா? இறந்துபோவதற்குள் உன் வாக்கிலிருந்து வந்த அமிருதத்தைக் கேட்டேனே! அந்த ஒரு பாக்கியம் கிடைத்தது போதாதா? இன்னும் மூன்றே முக்கால் நாழிகை இருக்கிறது. கவலைப்படாதே. நம்முடைய நினைவாக ராம சரித்திரத்தையே அந்தக் காலத்திற்குள் பாடிவிடுவோம்'' என்று சொன்னுனும். ஏழு நாள்தான் இருக்கின்றன என்றவுடன் பரீட்சித்து பாகவதத்தைக் கேட்டாற்போல, போஜராஜன் மூன்றே முக்கால் நாழிகைதான் இருக்கின்றன என்றவுடன் ராம சரிதத்தைப் பாடலாம் என்று நினைத்தான்.

உடனே காளிதாசரும் போஜனும் ராமாயணத்தைப் பாடினுர்கள். 'கொஞ்ச நாழிகை கிடைத்தாலும் போதும். அதற்குள் பகவத் ஸ்மரணை செய்து, தாபத்தைப் போக்கிக் கொண்டு ஜன்ம நிவிருத்தியைத் தேடிக்கொள்ளவேண்டும்' என்று போஜராஜன் காளிதாசரோடு அப்படி ராமாயணத்தையே சுலோகங்களாகவும் வசனங்களாகவும் பாடி முடித்தானும். அவனும் காளிதாசரும் மாறி மாறிப் பாடிய ராமாயணத்திற்கு, 'போஜ சம்பூ' என்று பெயர். நான் முன்னுலே சொன்னேனே மூன்று சுலோகங்கள் - அவை மூன்றும் அவர்கள் பாடிய 'சம்பூ ராமாயணத்தில்' தான் இருக்கின்றன.

नारायणाय नलिनायतलोचनाय
नामावशेषितमहाबलिवैभवाय ।
नानाचराचरविधायकजन्मदेश-
नाभीपुटाय पुरुषाय नमः परस्मै ॥

நாராயணாய நலிநாயதலோசநாய
நாமாவஶேஷிதமஹாபலிவைபவாய |
நாநாசராசரவிதாயகஜந்மதேஶ-
நாபீபுடாய புருஷாய நம: பரஸ்மை ||

நாபி என்றால் கொப்பூழ். அதில் இருக்கும்படியான பத்மத்தின் நடுவில் ஆவிர்ப்பவித்திருக்கிறார், சகல லோகங்களையும் சிருஷ்டி பண்ணும் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா.

पुरुषाय नमः परस्मै
புருஷாய நம: பரஸ்மை

புருஷன் என்றால் ஆள் என்று அர்த்தம். பகவான்தான் புருஷன். பரன் என்றால் பெரியவன். அபரன் என்றால் சின்னவன் என்று அர்த்தம். பாக்கி எல்லாம் அதற்கு அப்புறம். அதுதான் பரம், பெரிது. அந்தப் பெரியவனைத்தான் பரன், பரமாத்மா, பரமபுருஷன் என்றெல்லாம் சொல்கிறோம். பரம புருஷன் என்றால் பெரிய ஆள். பெரிய ஆள் என்பதுதான் பெருமாள் என்று ஆகிறது.

இந்தச் சுலோகத்தைக் காலையில் எழுந்தவுடன் அநேகமாகப் பலர் சொல்வார்கள். குளிர்ந்த வேளையில் குளிர்ந்த பகவானுடைய ஸ்வரூபத்தைத் தியானம் செய்வதற்காக இப்படிச் சொல்வார்கள். காலையில் விஷ்ணுவையும் மாலையில் ஈசுவரனையும் நினைப்பது வழக்கம்.

போஜராஜன் கதையிலிருந்து நமக்கு என்ன நீதி கிடைக்கிறது? உயிர்போக மூன்றே முக்கால் நாழிகைதான் இருக்கிறது என்றாலும் அதற்குள் பகவானைப் பாடலாம், அவனுடைய நாமத்தை ஜபிக்கலாம் என்று அவன் பாடிக் காட்டியிருக்கிறான். நமக்கு எவ்வளவு ஆயுசு என்று சொல்ல முடியாது. ஒரு நாளைக்கூட, ஒரு மணியைக்கூட, ஒரு நிமிஷத்தைக்கூட நாம் வீண் படுத்தக் கூடாது. ஒரு நிமிஷம் கிடைத்தாலும் போதும். பகவந் நாம ஸ்மரணை செய்ய வேண்டும். அவனுடைய ரூப தரிசனம் பண்ணவேண்டும். ஒரு காரியத்தைச் செய்வோம். இன்னொரு

காரியத்தை ஆரம்பிப்பதற்குள் இடையில் ஒரு விநாடி கிடைத்தாலும் போதும். பகவானை நினைக்கலாம். நாம் அப்படிச் செய்ய வேண்டும். எப்போதும் நமக்குப் பகவான் நினைவு இருக்கவேண்டும். இதைப் பரீக்ஷித், போஜராஜன் இரண்டு பேரும் பிரத்தியக்ஷமாகக் காட்டிப்போயிருக்கிறார்கள். போஜராஜன் தனக்குக் கிடைத்த மூன்றே முக்கால் நாழிகையை வீண் பண்ணாமல் செய்த காரியம் ஒன்றுதான் இன்றைக்கும் நாம் அவனை நினைத்துக்கொண்டிருக்கும்படி செய்கிறது. நாம் எல்லாரும் உஷக்காலத்தில் எழுந்தவுடன் குளிர்ந்த பெருமாளை, கருமேகம் போல நீருண்ட மேனியுடைய கார்மேக வண்ணனைக் குளிர்ந்த உள்ளத்தோடு ஸ்மரணை செய்வோம்.

2

# உலகத்தின் தாய்தந்தையர்




वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥

வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ வாகர்த்தப்ரதிபத்தயே |
ஜகத: பிதரௌ வந்தே பார்வதீபரமேஶ்வரௌ ||

ஜகத: என்றால் லோகத்திற்கு என்று அர்த்தம். பிதரௌ-மாதாபிதாக்கள். லோகத்தில் உள்ளவர்கள் எல்லாருக்கும் மாதாபிதாவாக இருக்கிறவர்கள் பார்வதி பரமேசுவரர்கள். உலகம் முழுவதும் ஒரே குடும்பம்.

माता च पार्वती देवी पिता देवो महेश्वरः ।
बान्धवाः शिवभक्ताश्च स्वदेशो भुवनत्रयम् ॥

மாதா ச பார்வதீ தேவீ பிதா தேவோ மஹேஶ்வர: |
பாந்தவாஶ் ஶிவபக்தாஶ்ச ஸ்வதேஶோ புவநத்ரயம் ||

என்கிறார்கள் நமது ஆசார்யார் அவர்கள். லோகத்தில் இருக்கும் சகல ஜனங்களுக்கும் தாயாகவும் தகப்பனாராகவும் இருக்கிறவர்கள் ஸாக்ஷாத் பரதேவதையாகிய பார்வதீ தேவியும் பரமேசுவரனுமே! 'ஜகத்துக்கெல்லாம் தாய்தகப்பனாராகிய பார்வதீ பரமேசுவரர்களை நான் நமஸ்காரம் பண்ணுகிறேன்.'

जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ।

ஜகத: பிதரௌ வந்தே பார்வதீபரமேஶ்வரௌ |

என்று மகாகவியாக இருக்கும் காளிதாசர், தாம் இயற்றிய காவியமான ரகுவம்சத்தில் முதல் மங்கள சுலோகத்தில் சொல்கிறார்:

பார்வதீ பரமேசுவரர்கள் எப்படி இருக்கிறார்கள்? ஒருவருக்கு ஒருவர் இணைபிரியாமல் இருக்கிறார்கள். ஒரே ஸ்வரூபத்தில் பிரிக்க முடியாமல் இணைந்து இருக்கிறார்கள். அது எப்படி என்றால் பசு என்று இப்போது நான் ஒரு வார்த்தை சொல்கிறேன். ப+சு என்று இரண்டு எழுத்துக்களைச் சொன்னேன். இந்த இரண்டு எழுத்தைச் சொன்னவுடனே உங்களுக்கு ஓர் உருவம் தோன்றுகிறது. பசுமாடு ஞாபகம் வருகிறது. ப+சு என்று எழுதினால் இரண்டு எழுத்துக்கள்தான். அவை சில கோடுகளே. காதாலே கேட்கிற ஒரு சப்தம் என்று சொல்லலாம். இதற்கும் பசுமாட்டுக்கும், இந்த வார்த்தைக்கும் அதன் அர்த்தத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இந்த வார்த்தையைச் சொன்னவுடன் அந்த வஸ்து நினைவுக்கு வருகிறது. அல்லது அதைக் கண்டவுடன் இந்தச் சொல் நினைவுக்கு வருகிறது. இதுவும் அதுவும் இணைபிரியாமல் இருப்பது தெரிகிறது. இதை நாமரூபம் என்று சொல்வார்கள். நாமம் என்பது பெயர். ரூபம் என்பது உருவம், ஆக்ருதி. பசு என்பது வாக்கு. அதன் அர்த்தமாகிய உருவம், மாடு. ஒன்றைச் சொன்னால் ஒன்று உடனே நினைவுக்கு வந்துவிடுகிறது. இந்த இரண்டையும் பிரிக்க முடியவில்லை. வாக்கும் அர்த்தமும் எப்படி ஒன்றோடு ஒன்று இணைபிரியாமல் இருக்கின்றனவோ அப்படியே சாக்ஷாத் அம்பாளும் பரமேசுவரனும் இணை பிரியாமல் இருக்கிறார்கள். ஒரே ஸ்வரூபத்தில் அர்த்தநாரீசுவரர் கோலத்தில் இரண்டு பேரும் இணைந்திருக்கிறார்கள். இப்படிப் பார்த்தால் அம்பாள்; அப்படிப் பார்த்தால் பரமேசுவரன்.

## वागर्थाविव संपृक्तौ

### வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ

ஸம்ப்ருக்தௌ என்றால் சேர்ந்து இருப்பது என்று அர்த்தம். 'வாக்கு, அதன் பொருள் ஆகிய இரண்டையும் போல-எப்படி அவை இரண்டும் இணைபிரியாமல் இருக்கின்றனவோ, ஒன்று வந்தால் மற்றொன்று எப்படி வந்துவிடுகிறதோ அப்படி - லோகத்திற்கு மாதா பிதாவாக - அர்த்தநாரீசுவர ஸ்வரூபமாக - இருக்கும் பார்வதி பரமேசுவரர்களை நான் நமஸ்காரம் பண்ணுகிறேன்' என்று காளிதாச மகாகவி நமஸ்காரம் பண்ணினார். அவர் நமஸ்காரம் பண்ணுகிறேன் என்று சொன்னதனாலேயே சம்ஸ்கிருதம் படிக்கிறவர்கள் எல்லாரும் முதல்முதலில் அதைச் சொல்லி நமஸ்காரம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.

நமக்கு ஓர் உருக் கொடுப்பவர்கள் அம்மாவும் அப்பாவுந்தாம். இந்த உடம்பை உண்டாக்கிவிடுபவன் பிதா. ஆனால் அம்மா இந்த உடம்பை வளர்த்துப் புஷ்டியான ஆகாரங்களைக் கொடுத்துச் சம்ரக்ஷித்து விடுகிறாள். உடம்புக்குப் புஷ்டியைக் கொடுப்பது ஆகாரம். ஒரு குறையும் இல்லாமல் ஆத்மாவுக்குப் புஷ்டியைக் கொடுப்பவர் யார்? ஆத்மா என்றால் உயிர் என்று அர்த்தம். உயிருக்கு எது புஷ்டி? ஆனந்தம்; ஞானம்; உயிர் திரும்பியும் உடல் எடுத்தால், அநேக கஷ்டங்கள் அதனால் வருகின்றன. துன்பத்திற்குக் காரணம் பிறவி; உடம்பு எடுத்திருப்பதுதான். உயிர் திரும்பியும் இன்னொரு ஜன்மம் எடுத்தால் திரும்பியும் கஷ்டம் உண்டாகும். உடம்புக்கு வருகிற துன்பம் ஒரு பக்கம் இருக்கட்டும். உடம்புக்கு ஒன்றுமே சிரமமில்லை. நிறையச் சொத்து அப்பா வைத்திருக்கிறார். நிலம் பணம் எல்லாம் வைத்திருக்கிறார். சாப்பாட்டுக்கோ மற்ற வசதிகளுக்கோ கஷ்டம் ஒன்றுமே இல்லை. இருந்தாலும் ஆத்மாவுக்கு, உயிருக்கு அநேக கஷ்டம், அநேக சிரமங்கள், அநேக அவமானம், துக்கம் எல்லாம் உண்டாகின்றன. உடம்புக்கும் உயிருக்கும் துன்பமே வரக்கூடாது என்றால் பிறவியே எடுக்காமல் இருக்க வேண்டும். பிறவி என்று எடுத்துவிட்டால் ஆனந்தம் என்பது எப்போதோ கொஞ்சம் வருகிறது. அதிகமாகத் துக்கந்தான் இருக்கிறது.

ஆகவே எப்பொழுதும் துக்கமே வராமல், எப்போதும் ஆனந்தமாக இருக்கும்படியாக ஆத்மாவைப் பண்ணிவிடுவது, எல்லாருடைய ஆத்மாவுக்கும் புஷ்டியான ஆனந்தமாகிற ஆகாரத்தைக் கொடுப்பது யார் என்றால், எல்லாருக்கும் மாதாபிதாவாக இருக்கிற அந்த ஸாக்ஷாத் பார்வதி பரமேசுவரர்கள்தாம். பராசக்திதான் ஜகத்துக்கெல்லாம் தாயாக இருக்கிறாள். பரமேசுவரர் தந்தையாக இருக்கிறார். அவர்களைச் சரணம் அடைந்தால்தான், திரும்பியும் நமக்கு ஜன்மம் இல்லாமல் போகும். ஜன்மம் இல்லாமல் போய்விட்டால் எப்போதும் ஆனந்தமாக இருக்கலாம். ஜன்மம் என்று வந்துவிட்டால் அப்போது ஆனந்தத்திற்கு ஒரு குறை உண்டாகிவிடுகிறது. உயிருக்கு, ஆத்மாவுக்கு ஆகாரம், அல்லது புஷ்டி, எப்போதும் ஆனந்தமாக இருப்பதுதான். அந்த ஆனந்த நிலையை அளிக்கக் கூடியவர்கள், அம்மாவும் அப்பாவுந்தான். ஈசுவரனை உபாசிப்பவர்களும் உண்டு. அம்பாளை உபாசிப்பவர்களும் உண்டு. இரண்டு பேரையும் சேர்த்தே உபாசிப்பவர்களும் உண்டு.

அவர்களிடம் எதற்காகப் போக வேண்டும்? வியாதி உடையவன் வியாதியைப் போக்கிக்கொள்ள வைத்தியனிடம் போகிறன். ஏழை, கடன் வாங்கவோ யாசகம் கேட்கவோ பணக்காரனைத் தேடிப் போகிறன். இப்படி ஒவ்வொரு காரியத்திற்கும் ஒருத்தரிடம் போகவேண்டி இருக்கிறது. நமக்கு, 'அது இல்லையே, இது இல்லையே' என்று அநேக குறைகள் உண்டு. மனசிலே, 'அவர்கள் அவமானப்படுத்தினர்கள், இவர்கள் மரியாதை செய்யவில்லை' என்ற துக்கம், பிறவிப் பிணி. இவற்றையெல்லாம் போக்கிக்கொள்ளப் பரமேசுவரனிடம் போகவேண்டும். அப்போது மனசுக்குப் பூர்ண நிறைவு உண்டாகிவிடும்.

எப்போது பார்த்தாலும் மனசுக்குக் கவலை, அநேக சிரமங்கள் எல்லாம் எதனுல் உண்டாகின்றன? பிறப்புத்தான் இதற்கெல்லாம் காரணம். பணம் இல்லாதவன் பணக்காரனிடம் போவது போலப் பிறப்பே வேண்டாம் என்றால் பிறப்பே இல்லாதவனிடந்தான் போகவேண்டும். எவனுக்குப் பிறப்பே இல்லையோ அவனிடம் போனல் நமக்கும் அவனுடைய அநுக்கிரகத்தினுலே பிறப்பே இல்லாமல் போகும். கவலை இல்லை. ஆகவே பிறப்பு இறப்பு இல்லாத ஈசுவரனிடத்தில் போக வேண்டும். பார்வதி பரமேசுவரரிடத்தில் போகவேண்டும்.

பிறப்பு இறப்பு என்று இரண்டும் நமக்கு இருப்பது நன்றாகத் தெரிகிறது. பிறப்பு இறப்பு இந்த இரண்டுக்கும் காரணம் என்ன? பிறப்புக்குக் காரணம் காமம். இறப்புக்குக் காரணம் காலன். பிறப்பு என்பது காமனுல் உண்டாகிறது. இறப்பு என்பது காலனுல் ஆகிறது. காமனுலே ஆக்கப்பட்டது காலனுலே அழிக்கப்படுகிறது. காமன் வந்துவிட்டால் மரம் முளைக்கிறது. காலன் வந்துவிட்டால் மரம் பட்டுப் போகவேண்டியதுதான்.

कालो जगद्भक्षकः ।

காலோ ஜகத்பக்ஷக: |

சூரியன் சந்திரன் முதற்கொண்டு எதுவாக இருந்தாலும் காலம் வந்தால் வீணுக வேண்டியதுதான்.

காமம் என்பது இல்லாமற் போனல் உற்பத்தி என்பதே கிடையாது. காலம் என்பது இல்லாவிட்டால் அழிவே கிடையாது. ஆகவே நாம் காமம், காலம் இரண்டையும் வென்ருக வேண்டும். அதற்காக நாம் போய்ச் சரணடைகிற ஈசுவரன் எப்படி இருக்கிறன்?

காமனைக் கண்ணுல் எரித்தவராம்.
காலனைக் காலால் உதைத்தவராம்.

தன் கண்ணாலேயே காமனை எரித்தவன். காமனையே எரித்து விட்டால் உற்பத்தி இல்லை. காலாலே காலனைச் சங்காரம் பண்ணினார். ஆகையால் பரமேசுவரனிடத்தில் போனால் நமக்குப் பிறப்பு இல்லை; இறப்பு இல்லை.

'சரி. அவனிடம் போனாலே, பிறப்பு இல்லாது போகுமேல் அம்பாளை உபாசிப்பானேன்?' என்றால் அம்பாளும் ஈசுவரனும் வாக்கும் அர்த்தமும் போலத்தானே இருக்கிறார்கள்?

சுவாமி எந்தக் கண்ணாலே காமனை எரித்தார்? இரண்டு கண்களும் இல்லாத மூன்றாவது கண்ணாகிய நெற்றிக் கண்ணாலே எரித்தார். மூன்றாவது கண்தான் இரண்டு பேருக்கும் சொந்தமாயிற்றே! அம்பாளுக்குப் பாதி; ஈசுவரனுக்குப் பாதி. அர்த்தநாரீசுவரராகத்தானே அவர் இருக்கிறார்? அந்தக் கண் இரண்டு பேருக்கும் பொது. அப்புறம் காலனை உதைத்தது அவர் இடக் காலால்தானே? அந்த இடக் கால் அம்பாளுடையதல்லவா? ஆகையால் காலத்தைக் கடக்க, காலன் அணுகாமல் இருப்பதற்கு, மரண துக்கத்தைப் போக்கிக்கொள்ள, அம்பாளுடைய கிருபை வேண்டும். திரும்பவும் பிறக்காமல் இருக்கச் சாக்ஷாத் ஈசுவரன் அம்பாள் இரண்டு பேரையும் சேர்த்து உபாசனை செய்ய வேண்டும். ஆகையால்தான் ஈசுவரனையும் அம்பாளையும் சேர்த்து உபாசனை செய்கிறோம். அவர்கள் இரண்டு பேரும் ஒரே சரீரத்தில் இணைந்திருப்பதனால் நமக்குப் பிறப்பு இறப்பு இரண்டும் போகும்.

தீக்ஷிதர் அவர்கள், தியாகையரவர்கள், சாமா சாஸ்திரிகள் இவர்கள் எல்லாரும் சங்கீதத்தினாலே பகவானை உபாசனை பண்ணினவர்கள். தீக்ஷிதர் அவர்கள் நவாவரண கீர்த்தனைகளை வீணையில் பாடித் தேவி ஆராதனை பண்ணிக்கொண்டிருந்தார்; ஸ்ரீசக்ர ஆராதனை பண்ணிக்கொண்டிருந்தார். கீர்த்தனம் தெரிந்தவர்கள் கேட்டிருப்பார்கள். ஒரு நாள் பாடிக்கொண்டு அதிலே வசப்பட்டு இருந்தார். கார்த்திகை மாதம் அமாவாசை அன்றைக்கு, வீணையை எடுத்துக்கொண்டு 'ஸ்ரீமீனாக்ஷி மே முதம் தேஹி' என்று ஆரம்பிக்கும் பாட்டைப் பாடினார். முடிவில் 'பாசமோசனி' என்று வரும். 'முதம் தேஹி....பாசமோசனி' என்று பாடிக்கொண்டே இருக்கும்போது மூச்சு நின்றுவிட்டது. மரண துக்கமே இல்லை. தன்மயமாகிப் போய்விட்டார். எதைச் சதா பிரார்த்தனை பண்ணிக்கொண்டிருந்தாரோ அப்படியே ஆகிவிட்டார். மரணம் என்ற வாதனை இல்லாமல் ஆனந்தத்தில் லயமாகும்படிக்குப் பிறப்பு இறப்பு இல்லாத நிலையை அடைந்துவிட்டார்.

பிறப்பு இறப்பு என்ற இரண்டு துக்கமும் இல்லாமல் ஜனன நிவிருத்தியைத் தேடிக்கொள்ள நாம் ஜகத்துக்கெல்லாம் தாய் தகப்பனராக இருக்கிற பார்வதி பரமேசுவரர்களை ஸ்மரித்துக்கொண்டிருந்து,

जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ।

ஜகத: பிதரௌ வந்தே பார்வதீபரமேஸ்வரௌ |

என்று சரண் அடைய வேண்டும்.

3

# பக்தியும் கர்மமும்

நாம் எல்லாரும் இப்போது என்ன என்ன காரியங்கள் செய்துகொண் டிருக்கிறோமோ அவற்றையெல்லாம் ஈசுவரார்ப்பணம் பண்ணிவிட்டால் அதிலிருந்து நமக்கு ஈசுவரானுக்கிரகம் கிடைக்கும். நாம் ஏதாவது ஒரு காரியத்தைச் செய்துகொண்டே இருக்கிறோம். ஒன்றும் செய்யாமல் ஒரு க்ஷணங்கூட இருப்பதில்லை. உடம்பினாலே பல காரியங்கள் செய்வது மட்டும் அல்ல. மனசினாலே எப்போதும் ஏதாவது ஆலோசனை செய்துகொண்டே இருக்கிறோம். நம்முடைய காரியங்களை யெல்லாம் ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணவேண்டு மென்றுதான், உடம்பினாலே அவன் கோயிலுக்குப் போவது, அவனுக்கு அர்ச்சனை பண்ணுவது, வேதத்தால் விதிக்கப்பட்ட கர்மாநுஷ்டானங்களைச் செய்வது என்று விதித்திருக்கிறார்கள். இப்படியே மனசினுடைய வேலையையும் ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய்ய, மனசினால் அவனைச் சதா தியானம் செய்துகொண் டிருக்கவேண்டும் என்று சொன்னார்கள். எதைச் செய்தாலும் அது பகவானுக்கே என்று மனப்பூர்வமாக அர்ப்பணம் செய்து விட்டால் அதை நான் ஏற்றுக்கொள்கிறேன் என்று பகவானே சொல்லியிருக்கிறார்.

यत् करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत् तपस्यसि कौन्तेय तत् कुरुष्व मदर्पणम् ॥

யத் கரோஷி யதச்னாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் |
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் ||

பகவான் நமக்கு உடம்பைக் கொடுத்திருக்கிறார். அதனால் பசி இருக்கிறது. பசிக்கிறபோது ஆகாரம் போட்டாக வேண்

டும். மழைக்கு, வெயிலுக்குத் தங்க இந்த உடம்புக்கு ஒரு நிழல் வேண்டும். பிராணிகள் மாதிரி இல்லாமல் மானம் என்பது இருக்கிறது அல்லவா? மானத்தைக் காப்பாற்ற ஒரு வஸ்திரம் இந்த உடம்புக்கு வேண்டியிருக்கிறது. அன்னம், வஸ்திரம், வீடு இவை மூன்றும் அவசியமாக வேண்டியிருக்கின்றன. இவற்றுக்காக ஏதாவது ஒரு காரியம் செய்துகொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. இவை மூன்றும் தேவை இல்லை என்றால் மநுஷ்யன் ஒரு காரியமும் செய்ய வேண்டியதில்லை.

அந்தக் காலத்தில் இந்த மூன்றையும் துறந்துவிட்டு இருந்த மகரிஷிகள் தாம் காரியம் எதுவும் செய்யாமல் இருந்தார்கள் என்று தெரிகிறது. இப்போதும் அப்படி இரண்டொரு ஞானிகளாவது இருப்பார்கள். நமக்குத் தெரியாது. ஒரு காரியம் செய்து, அதனால் அவர்களுக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லை. அப்படி இல்லாமல் ஏதாவது ஒரு காரியம் செய்கிறான் என்றால் அவன் ஞானி அல்ல என்று அர்த்தம்.

அன்னம், வஸ்திரம், நிழல் இவற்றுக்காக நாம் ஒவ்வொரு காரியத்தைச் செய்துகொண்டிருப்பதனால் துக்கப்படுகிறோம். துக்கம் போய், சதா ஆனந்தமாக இருக்கவேண்டுமென்றால் நாம் செய்கிற காரியங்களை யெல்லாம் முதலில் ஈசுவரார்ப்பணம் செய்ய வேண்டும். ஈசுவரனுடைய அநுக்கிரகம் கிடைத்துவிட்டால் அப்புறம் நாம் ஒரு காரியமும் செய்யாமல் ஆனந்தமாக இருக்கலாம். ஈசுவரனுடைய அநுக்கிரகத்தை நாம் அடைகிற வரையிலும் இம் மூன்றையும் நம்மால் விட்டு இருக்க முடியாது. அதற்காகப் பல காரியங்களைச் செய்யும்படிதான் இருக்கும். ஆனால் செய்கிற காரியங்களைச் சுத்தமாக, சித்தசுத்தியோடு தர்மமான முறையில் செய்ய வேண்டுமென்றால் ஈசுவர பக்தி எப்போதும் இருக்கவேண்டும். அதற்காக, 'நான் பக்தி மாத்திரம் பண்ணிக்கொண்டே இருக்கிறேன்' என்றால் பிரயோஜனம் இல்லை.

ஓர் எஜமானனிடம் இரண்டு ஆட்கள். ஒருவன் சதா எஜமானனை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கிறான். மற்றொருவன் எஜமானனிடம் அன்பில்லாமல். தன் கடமை என்று மாத்திரம் அவனுக்கு வேண்டிய வேலைகளைச் செய்துகொண்டே இருக்கிறான். எஜமானன் முட்டாளாக இருந்தால் தன்னை எப்போதும் ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கிற வேலைக்காரனிடம் பிரியமாக இருப்பான். மிகவும் புத்திசாலியாக இருந்தானானால், அவனுக்கு, கூலிக்காக வேலை செய்துகொண்டிருக்கிறவனிடமும் பிரியம் இருக்காது; சதா ஸ்தோத்திரம்

பண்ணுகிறவனிடமும் பிரியம் இருக்காது. பக்தியோடு, அவனுடைய காரியம் தன் கார்யம் என்று பேதம் இல்லாமல், எல்லாம் அவனுக்காகவே - ஒரு குறையும் இல்லாமல், பிரியமாகக் காரியங்கள் செய்துகொண்டிருப்பவனிடம் அதிக வாத்சல்யம் வைப்பான்.

அப்படி ஈசுவரன் ஒரு நல்ல எஜமானன். அவன் புத்திசாலி. அவனை நாம் எப்போதும் ஸ்தோத்திரம் பண்ணிக்கொண் டிருந்தாலும் திருப்தி செய்ய முடியாது. அவன் சொன்ன வேலையைச் செய்யாமல் அவனைப் புகழ்ந்துகொண் டிருந்தால் அவன் சந்தோஷப்பட்டு, நமக்கு அநுக்கிரகம் செய்யமாட்டான். நாம் ஸ்தோத்திரம் பண்ணி அவனுக்கு ஆகவேண்டியதில்லை. அது அவனுக்குக் கௌரவமும் இல்லை; அகௌரவமும் இல்லை. அம்மாதிரியே நாம் கர்மாக்கள் செய்து அவனுக்கு ஆகவேண்டியதில்லை. நம்முடைய சித்தசுத்திக்காகத்தான் ஈசுவரனே அநேக கர்மாக்களை விதித்திருக்கிறான்.

அதாவது நித்தியப்படி ஸ்நானம், ஸந்த்யை, ஜபம், ஹோமம், தேவபூஜை, ஆதித்தியம் - இப்படி ஆறு கர்மாக்களைச் செய்யுவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அந்த ஆறு காரியங்களைச் செய்துகொண் டிருந்தால் அவற்றில் எல்லாம் அடங்கிவிடுகின்றன. ஈசுவராநுக்கிரகம் நமக்கெல்லாம் கிடைத்துவிடும்.

षट् कर्माणि दिने दिने ।

ஷட் கர்மாணி திநே திநே |

என்றபடி ஒவ்வொரு நாளும் பண்ணவேண்டும்.

ஸ்நானம் எவ்வாறு செய்யவேண்டுமென்று சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிறதோ அப்படிப் பண்ணினால்தான் ஆத்மசுத்தி ஏற்படும். வெறும் சோப்பை மட்டும் தேய்த்தால் உடல்தான் சுத்தி ஆகும். அவரவர்களுக்குச் சில மந்திரங்கள் இருக்கின்றன. ஒன்றும் தெரியாது என்றால், 'ராம கிருஷ்ண' என்றாவது சொல்லிக்கொண்டு ஸ்நானம் பண்ணவேண்டும்.

4

# எல்லாம் தழுவும் அத்வைதம்

நம்முடைய ஆதி ஆசார்யார் அவர்கள் லோகத்தில் உபதேசம் பண்ணின சித்தாந்தத்திற்கு அத்வைத சித்தாந்தம் என்று பெயர். அந்த அத்வைத சித்தாந்த சம்பந்தமாக ஆதி ஆசார்யார் அவர்களுக்கு முந்தியும் சில பேர்கள் தத்துவ நூல்கள் அநுக்கிரகம் பண்ணியிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆசார்யாரவர்களுக்குப் பிறகும் பல அத்வைத அநுபவிகள் தங்களுடைய சுவாநுபவத்தையும், உபநிஷத்துக்களில் இருக்கும் உபதேசங்களையும் சேர்த்துவைத்து, அநேகப் பிரபந்தங்கள் எழுதியிருக்கிறார்கள். பிறருக்குத் தங்கள் அநுபவத்தைத் தெரிவிக்கிற முறையில், முடிந்த முடிவாகிய, 'எல்லாம் ஒன்று' என்ற தத்துவத்தில் பல புத்தகங்கள் இருக்கின்றன. இப்படி அத்வைத சித்தாந்தத்திற்கு ஆயிரக்கணக்கான புத்தகங்கள் இருக்கின்றன.

அத்வைதக் கிரந்தங்கள் எல்லாப் பாஷைகளிலும் இருக்கின்றன. சம்ஸ்கிருதத்தில் இருக்கின்றன. தமிழிலும் மூல புத்தகங்களாகவே - மொழிபெயர்ப்பு இல்லாமல் - அநேகம் இருக்கின்றன. தெலுங்கிலும் மூல அத்வைத க்ரந்தங்கள் இருக்கின்றன. அதேமாதிரி கன்னட பாஷையிலும் இருக்கின்றன. அந்த அந்தப் பாஷையில் அந்த அந்தத் தேசத்து அநுபவிகளின் - ஞானிகளின் - மொழிபெயர்ப்புத் தவிர ஸ்வதந்த்ரமாக அநேக புத்தகங்கள் இருக்கின்றன. மகாராஷ்டிரத்திலும் இருக்கின்றன. ஹிந்தியிலும் பல கிரந்தங்கள் இருக்கின்றன.

பரம்பரையாக அத்வைத மதத்திலேயே வந்தவர்கள் அந்த அத்வைத மதத்தைப்பற்றிச் சிலாகித்துக் கிரந்தங்கள் எழுதுவது ஒரு புறம் இருக்கட்டும். இதர மதத்தைச் சேர்ந்தவர்களும்

தங்களுடைய ஸ்வாநுபவத்தின் முடிவை அத்வைதமாக எழுதி யிருப்பதுதான் மிகவும் விசேஷமானது. அப்படி அநேகம் பேர், அநேகம் கிரந்தங்களை அத்வைத அநுபவத்தை அநுசரித்து எழுதியிருக்கிறார்கள்.

மஸ்தான் சாகிபு பாடல் என்று ஒரு தமிழ்நூல் இருக் கிறது; தாயுமானவர் பாட்டைப்போல இருக்கும். அத்வைத அநுபவத்தைத் தெரிவிக்கும் பாடல்கள் பல நிறைந்தது. தத்துவ ராய சுவாமிகள் என்று ஒரு பெரியவர் இருந்தார். அவரை மாத்வரென்று சொல்கிறார்கள். அவர் நிறையத் தமிழிலே சசிவர்ண போதம், அஞ்ஞவதைப்பரணி முதலிய அநேக நூல் களை எழுதியிருக்கிறார். வேதநாயகம் பிள்ளை கிறிஸ்தவர். முனி சீப் உத்தியோகத்தில் இருந்து, ஆத்மாநுபவ கிரந்தங்கள் பல எழுதியிருக்கிறார். சரித்திரமாக எழுதியிருந்தாலும், பாட்டாக எழுதியிருந்தாலும் அத்வைத தத்துவத்தைப் பல இடங்களில் கையாண்டிருக்கிறார். அவருடைய நூல்களில் நிறைய அத்வைத தத்துவம் பிரகாசிக்கிறது. சமீபகாலத்தில் ஏ. வி. கோபாலா சாரியார் சில கிரந்தங்கள் எழுதியிருக்கிறார். தம்முடைய மரண காலம் வரையில் ஆத்மசிந்தனை செய்து, அத்வைத அநுபூதியை மேற்கொண்டார். அவர் காலமாகி ஒரு மாதங்கூட ஆகவில்லை என்று நினைக்கிறேன்.

இப்படிப் பரம்பரை பரம்பரையாக அத்வைத சித்தாந்தத் திலே வருகிறவர்கள் அதைப்பற்றி எழுதியிருப்பதோடு, வேறு வேறு மதங்களில் உள்ளவர்களும் தங்கள் நூல்களில் அத்வைத அநுபவத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

பொதுவாக எல்லாருக்கும் நம் ஆதி ஆசார்யராகிய சங்கராசார்ய ஸ்வாமிகள் என்றால் அவர்களிடத்தில் ஒரு பிரேமை உண்டு. அநேகமாக எந்த மதஸ்தராக இருந்தாலும் ஒரு பிரேமையை அவர்களிடத்தில் வைத்திருக்கிறார்கள். அவர்கள் சொன்ன தத்துவத்திடத்திலும் ஒரு பிரேமை வைத்திருக்கிறார் கள். இது நான் பார்த்த அநுபவத்தில் தெரிந்தது.

சண்டை போடுகிறவர்கள்கூட முதலிலே ஆசார்யார் அவர்களுடைய கிரந்தங்களைக் கண்டித்துச் சண்டை போடுவார் களே தவிர, மற்ற மத கிரந்தங்களைச் சண்டைக்கு அதிகமாக எடுத்துக்கொள்வதில்லை.

நம் தேசத்தில் இதுவரைக்கும் அநேக சித்தாந்தங்கள் இருக்கின்றன. மாத்வ சித்தாந்தம், ராமாநுஜாசாரியார் சித்தாந்தம், சைவர்களின் சித்தாந்தம் என்று இருக்கின்றன. இவற்றைத் தவிர வட தேசத்தில் பம்பாய், குஜராத் போன்ற

இடங்களில் வல்லபாசாரியார் சித்தாந்தம், இங்கேயே சம்ஸ்கிருதத்தில் ஸ்ரீகண்டாசாரியார் சித்தாந்தம், தமிழ் மெய்கண்ட சிவாசாரியார் சித்தாந்தம் என்று பல சித்தாந்தங்கள் இருக்கின்றன. ஒன்றுக்கொன்று கொஞ்சம் கொஞ்சந்தான் வித்தியாசம் இருக்கும்.

ஈசுவர பக்தி, ஈசுவரனிடத்தில் போய்ச் சேரவேண்டியது என்பவற்றில் எந்தச் சித்தாந்தத்திற்கும் அபிப்பிராய பேதம் இல்லை. ஆசார்யார் அவர்களுடைய சித்தாந்தப்படி, ஈசுவர பக்தி பண்ணி, ஈசுவரனைப் போய் அடைந்த மாத்திரத்தில் அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தோடு நாம் கலந்துபோய் விடுகிறோம். நாம், அவர் என்ற பேதம் இல்லாமல் நாம் அவரோடு கலந்துபோகிறோம். அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தில் இரண்டறக் கலப்பதுதான் ஆனந்தம் என்பது பகவத்பாதரவர்கள் சித்தாந்தம்.

'அப்படி முழுக்கக் கலந்து போய்விட்டால் எப்படி ஆனந்தத்தை நாம் அநுபவிக்க முடியும்? அநுபவிக்க முடியாமல் போய்விடுமே! ஆகவே ஈசுவரனை நாம் போய் அடையும்போது நாம் வேறு அவர் வேறாகத்தான் இருக்கவேண்டும். ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியவர் அவர் என்றால், ஆனந்தத்தை அநுபவிக்க நாம் தனியாகத்தான் அங்கும் இருக்கமுடியும்.'—இப்படி ஒரு சொல்ப வித்தியாசத்தை வைத்துக்கொண்டு இன்னொரு சித்தாந்தம் எழுந்திருக்கிறது.

'கலந்துவிடுகிறோம். ஆனால் தண்ணீரில் பாலைக் கலந்தால் பால் இருப்பதுபோலத்தான் நாம் அவரோடு கலந்தாலும் கொஞ்சம் தனித்துத்தான் இருக்கிறோம்' என்று ஒரு சித்தாந்தம் சொல்கிறது.

இவை எல்லாம், ஈசுவரனைப் பக்தி பண்ணி, அவனைப் போய்ச் சேருவது என்பதில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டு எழுந்தவை அல்ல. 'ஈசுவரனோடு கலக்கும்போது ஒன்றாகக் கலந்து விட்டால் நமக்கு ஆனந்தம் ஏது? சமுத்திரக்கரையில் நின்றால் தான் அலையைப் பார்க்கலாம்; அழகைப் பார்க்கலாம். சமுத்திரத்தோடு கலந்துவிட்டோம் என்றால் அதை எப்படி அநுபவிக்க முடியும்? நாம் கொஞ்சம் ஈசுவரனை விட்டு வேறாக இருந்தால் தான் ஆனந்தத்தை அநுபவிக்க முடியும்' என்று கொஞ்சம் அவரவர்கள் வேறுபட்டு, அந்த வேறுபாட்டை வைத்துக்கொண்டு தம் மதத்தை எழுப்பியிருக்கிறார்கள்.

ஜங்க்ஷனில் பார்த்தால் ஒரு லைனிலிருந்து வேறொரு லைன் பிரிகிறபோது, நடுவில் இடம் மிகவும் கொஞ்சமாகத்தான்

இருக்கும். ஆனால் கொஞ்சதூரம், ஐந்து மைல், பத்து மைல் என்று போகப் போக அது ஒரு பக்கம், இது ஒரு பக்கம் என்று பிரிந்து போய்க்கொண்டே இருக்கும். அதிகமாக இதை விட்டு அது அடியோடு விலகிப் போய்விடும். ஆனால் ஆரம்பத்தில் பார்த்தால் சொல்ப வித்தியாசந்தான் இருக்கும்.

இப்படி அத்வைதத்திலிருந்து சொல்ப வித்தியாசத்தோடு ஒரு சித்தாந்தம் உண்டாயிற்று. ஆனால் போகப் போக அது த்வைதமாகப் போய்விட்டது. 'ஈசுவரனோடு கலக்கிறபோது இரண்டு என்பதே இல்லை; ஒன்றாகப் போய்விடுகிறது' என்று நன்றாக, தெளிவாக ஆசார்யர் அவர்கள் சொல்லிவிட்டார்கள். இதில் கொஞ்சம் மாறுபட்டு இன்னொருத்தர் சொல்ல, அதை இன்னொரு விதமாகப் புஸ்தகத்தில் எழுதினபோது வெகு தூரம் இந்த இரண்டுக்கும் வித்தியாசம் இருப்பதுபோல வேறுபாடு வந்துவிட்டது.

இந்தச் சித்தாந்தப் பிரபந்தங்களை எழுதினவர்களுடைய மனம் சுவாநுபவத்தோடு கூடியதாக இருந்தால் மிகவும் சமாதானமாக எழுதியிருப்பார்கள். 'நம் மதம்' என்ற வெறும் அறிவோடு கூடியதாக இருந்தால், ஆசார்யார் அவர்களை மிகவும் கண்டித்து அத்வைத மதத்திலிருந்து இந்தச் சித்தாந்தம் மிகவும் வேறுபட்டது என்று தோன்றும்படியாகக் கொஞ்சம் கடுமையாக எழுதியிருப்பார்கள். ஆனால் அந்த அந்த மதங்களில் உள்ள அநுபவிகள் கடைசியாகத் தங்கள் அநுபவங்களைப் பிறருக்குச் சொல்ல வரும்போது ஆசார்யார் அவர்களோடு தாம் அதிகமாகச் சேர்ந்து, அவரைப் பாராட்டி, அவர் சொல்வதுபோல அத்வைத சித்தாந்த நூல்களை நிறைய எழுதியிருக்கிறார்கள்.

இதை எதற்காகச் சொல்ல வருகிறேன்? 'ஒவ்வொரு மதத்திலும் சண்டை போடுகிறது என்றாலும், ஆசார்யார் அவர்களைப் பிடித்து இழுத்துச் சண்டை போட்டிருக்கிறார்கள். சிநேகம் பாராட்டுவது என்றாலும் இந்த அத்வைத சித்தாந்தத்தோடு தான் - சங்கராசார்யார் அவர்களோடுதான் - சிநேகம் செய்து கொண்டிருக்கிறார்கள்' என்பதற்காகச் சொல்கிறேன்.

பம்பாய், குஜராத்திப் பிரதேச ஆசார்யர் வல்லபாசாரியார் என்று சொன்னேனே, அவருக்குப் பாலகிருஷ்ணன் என்ற மூர்த்தியிடம் அதிகப் பிரேமை. ராமாநுஜாசாரியாருக்கு நாராயணன் என்ற ஸ்வரூபத்திடம் பிரேமை. மத்வாசாரியார் விஷ்ணு விஷ்ணு என்பார். ஸ்ரீகண்டாசாரியார், மெய்கண்டார், சைவர்கள் இவர்களுக்கெல்லாம் சிவன் என்ற மூர்த்தியிடம் பிரேமை. இப்படிப் பல ஸ்வரூபம், பல சித்தாந்தம் இருப்பது

போலப் பல ஆசார்யர்கள் இருந்திருக்கிறார்கள். இவர்கள் தங்கள் மூர்த்தியை, தங்கள் சித்தாந்தத்தை நிர்த்தாரணம் பண்ணும்போது, அதற்குப் புஸ்தகங்கள் எழுதும்போது, வைஷ்ணவர்கள், மாத்வர்களுடைய சித்தாந்தத்தைக் கண்டித்துத் தங்களதுதான் உயர்வு என்று நிர்த்தாரணம் பண்ணலாம் அல்லவா? அப்படியே மாத்வர்கள், மெய்கண்டாசாரியார் கிரந்தத்தைக் கண்டிக்கலாம் அல்லவா? ஆனால் இவர்கள் எல்லாரும், தங்கள் சித்தாந்தப் புஸ்தகங்களை எழுதும்போது, 'சங்கராசாரியார் இப்படிச் சொல்கிறார்; அப்படிச் சொல்கிறார். இது தப்பு, அது தப்பு. இந்தப் புஸ்தகத்தில் சொல்கிறதுதான் சரி' என்று சங்கராசாரியாரையே அதிகமாகக் கண்டனம் பண்ணி எழுதியிருக்கிறார்கள். மீமாம்சையையோ, சாங்கியத்தையோ அல்லது இதர மதங்களையோ கண்டித்திருக்கலாம். அவற்றைப் பற்றி ஏதோ கொஞ்சம் கொஞ்சம் சொல்லியிருந்தாலும், முழுக்க முழுக்கச் சங்கராசாரியாரின் கொள்கையாகிய அத்வைத சித்தாந்தத்தையே கண்டித்து எழுதியிருக்கிறார்கள். இந்த மாதிரியாக அலசி அலசிப் பார்த்துச் சர்ச்சை செய்வதற்கே இதர மதங்கள் லாயக்கில்லைபோல அவர்களுக்குத் தோன்றியிருக்கிறது. பல விஷயங்களைக் குறிப்பிட்டுச் சர்ச்சை பண்ணுவதற்கு யோக்கியமான மதங்களாகவே அவை, அவர்களுக்குத் தோன்றவில்லை. பௌத்தர்கள் எழுதின புஸ்தகமாக இருக்கலாம். ஜைனர்கள் எழுதிய புஸ்தகமாக இருக்கலாம். அவற்றில்கூட அத்வைதக் கொள்கையை நிறையத் தாக்கி எழுதி இருக்கிறார்கள். ஆனால் ஒவ்வொரு தத்துவத்திலும் அநுபவசாலிகளாக இருந்துவிட்டால் - முஸ்லிம்களாக இருந்தாலும், கிறிஸ்தவர்களாக இருந்தாலும் - தங்களுடைய ஸ்வாநுபவத்தைச் சொல்ல வரும்போது தங்களையும் அறியாமலே அத்வைதத்தோடு போய்க் கலந்துவிடுகிறார்கள். நானே பல வைஷ்ணவர்களைப் பார்த்திருக்கிறேன். இதர மதஸ்தர்களையும் பார்த்திருக்கிறேன்.

ராமநாதபுரம் சம்ஸ்தானத்தில் ஒரு பெரிய தமிழ் வித்துவான் இருந்தார். நான் ஒரு சமயம் ராமநாதபுரம் சம்ஸ்தானத்திற்குப் போயிருந்தபோது அவர் என்னுடன் நிரம்பச் சண்டை போட்டார். இப்போது இருக்கிறவருக்கு முந்திய ராஜா காலம். அவரை வைத்துக்கொண்டு, பல பல ஆங்கிலப் புஸ்தகங்களையும் வைத்துக்கொண்டு, 'சங்கராசாரியார் ஈசுவர பக்தர் அல்ல; மகாவிஷ்ணுவினுடைய பக்தரே. சிவ பக்தியைக் காட்டிலும் அவர் விஷ்ணு பக்திதான் மிகுதியாகச் செய்திருக்கிறார்'

என்றார். இதை நிரூபிக்க அநேக கிரந்தங்கள், சங்கராசாரிய பாஷ்யம், அந்தப் பாஷ்யத்தின்மேல் எழுந்திருக்கக்கூடிய உரை நூல்கள் இவற்றை எல்லாம் ஆதாரமாக வைத்துக்கொண்டு என்னோடு வாதிட்டார். வெள்ளைக்காரர்கள் சங்கராசாரியார் பாஷ்யத்தை வைத்துக்கொண்டு அநேக புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் ராஜாவிடம் முன்பே காட்டி, அவரையும் தமக்கு ஆதரவாக வைத்துக்கொண்டிருந்தார்.

'விஷ்ணு பக்தியைப்பற்றி ஆசாரியார் அவர்கள் சொல்லியிருப்பதைப்போலவே சிவ பக்தியைப் பற்றியும் அநேக இடங்களில் சொல்லி, இவை இரண்டும் ஒன்றுதான் என்ற சித்தாந்தத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே அவரைக் குறிப்பாக ஒரு சுவாமியைத்தான் சிலாகித்தவர் என்று எப்படிக் கொள்ள முடியும்?' என்பதற்கு நான் அவருக்குப் பல இடங்களைச் சங்கர பாஷ்யத்திலிருந்தே எடுத்துக் காட்டினேன்.

அதை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அந்த வாதத்தில் நான் ஜயித்தேனா, அவர் ஜயித்தாரா என்பதைப்பற்றிச் சொல்ல நான் இதைச் சொல்லவில்லை. ஆனால் கடைசியாக அவரிடம் ஒன்று சொன்னேன். ''நீங்களோ வைஷ்ணவர். வைஷ்ணவ கிரந்தங்கள் நிறைய இருக்கின்றன. உங்களுக்கு ஆதாரமாக அவற்றை எடுத்துக்கொள்ளுங்களேன். 'ஆசார்யார் அவர்கள் சிவ பக்தரா, விஷ்ணு பக்தரா?' என்று எதற்குச் சர்ச்சை பண்ணிக்கொண்டு இருக்க வேண்டும்?'' என்றேன்.

அதற்கு அவர் உடனே, ''ஆசார்ய லக்ஷணம் பூர்ணமாக இவரிடத்தில்தானே நிரம்பியிருக்கிறது? இவர் சொல்வது தான் நமக்கு எல்லாவற்றையும்விட ஆதாரம். ஒருவர் வாக்கை எடுத்தால் அவரிடத்தில் ஆசார்ய லக்ஷணம் பூர்ணமாக இருக்க வேண்டாமா? அதற்காகத்தான் இவரை எடுத்துக்கொண்டேன்'' என்று சொன்னார்.

இப்படி அநேகம் மதஸ்தர்கள் சிநேகத்துக்கும் ஆசார்யார் அவர்களை இழுத்துக்கொள்கிறார்கள், சண்டைக்கு என்றாலும் இவரைத்தான் இழுத்துக்கொள்கிறார்கள் என்பதற்கு இந்த ஸம்பவத்தைச் சொல்ல வந்தேன்.

'கண்டனம் என்றாலும் சங்கரரைத்தான் கண்டிக்கிறார்கள். உறவு கொண்டாடுவது என்றாலும் மற்றவர்களைவிட நம் சங்கரரிடந்தான் எல்லாரும் உறவு கொண்டாடுகிறார்கள். இது நம் ஆசார்யாளுக்கு ஒரு தனிப் பெருமை' என்று நாம் சொன்னால் அதனால் பாவம் வருமோ? புண்ணியம் வருமோ? பாவந்தான்

வரும்போல் இருக்கிறது என்று தோன்றுகிறது! ஏன் தெரியுமா?

ஆசார்யார் அவர்கள் யார்? நம்முடைய குரு. அவருக்கு ஒரு கௌரவம் என்றால் அது நமக்கும் வருகிறது. இன்னொரு மதத்தைச் சேர்ந்த ஆசார்யாரை நாம் ஸ்தோத்திரம் செய்தால் அது அவருடைய கிரந்தத்திலே, தத்துவத்திலே நமக்குள்ள பக்தி காரணமாக, விசுவாசம் காரணமாக ஸ்தோத்திரம் செய்வதாக ஆகலாம். ஆனால் நம்முடைய ஆசார்யாரவர்களை இப்படிப் பல வகையில் நாம் ஸ்தோத்திரம் பண்ணுவது, கடைசியில் நம்மை நாமே ஸ்தோத்திரம் செய்துகொள்வதுபோலத் தான் முடிகிறது. 'எங்கள் ஊர் உயர்ந்தது, எங்கள் சாதி உயர்ந்தது, எங்கள் குடும்பம் உயர்ந்தது. அதில் நான் உயர்ந்தவன்' என்று சொல்லிக்கொள்வதுபோலவே முடிகிறது. இப்படி நம் ஆசார்யார் அவர்களைப்பற்றிப் பெருமையாக நாமே சொல்லிக் கொண்டால் நம்மை நாமே பெருமைப்படுத்திக்கொள்கிற பாவத்திற்கு - தோஷத்திற்குத்தான் உள்ளாகிறோம் என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது.

பாவமோ புண்ணியமோ இன்னொரு விதமாக நமது ஆசார்யார் அவர்களை ஸ்தோத்திரம் பண்ணிப் பார்க்க வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது.

ஒவ்வொரு மதத்திலும் அந்த அந்த மதஸ்தர்கள் அநேக கிரந்தங்களை எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதும்போது அவரவர்களுக்கு என்ன ஆசையாக இருக்கும்? தங்கள் மதத்தை உயர்வாக எழுத வேண்டும் என்று இருக்கும். எழுதிக்கொள்ளட்டும். ஆனால் தங்கள் மதத்தை உயர்வாக எழுத வேண்டுமென்பதற்காக, இதர மதங்களில் சொல்லப்பட்டிருக்கிற குறைபாடு என்ன, தப்பு என்ன என்று கண்டனம் பண்ணுவதுதான் அவர்கள் சுபாவம். பாக்கி மதத்தைக் கண்டனம் பண்ணாமல் அவர்களுடைய கிரந்தங்களில் எழுத மாட்டார்கள். அது மாத்திரம் அல்ல. தங்கள் மதத்தைத் தவிர வேறு மதத்தைப் பற்றியோ அவர்களுடைய சித்தாந்தத்தைப்பற்றியோ நல்லதாக ஒன்றுகூட எழுத மாட்டார்கள். 'எழுதினால் அந்த மதம் வலுத்துப் போய்விடுமே; அதனால் நம்முடைய மதத்தின் வளர்ச்சி தடைபட்டுப் போய்விடுமே' என்பதுதான் அவர்களுடைய எண்ணம். 'உலகத்தில் நம் மதந்தான் க்ஷேமமாக இருக்க வேண்டும்; பாக்கி மதங்கள் எப்படிப் போனாலும் சரி; பாக்கி மதங்களுடைய புஸ்தகங்கள் எல்லாம் அழிந்து போகும்படி பண்ணிவிட வேண்டும்' என்று அவர்களுக்குத் தோன்றுமே தவிர, பாக்கி மதஸ்தர்களுக்கு, அவர்களுடைய மதத்தைப்

பற்றிய புஸ்தகத்தை எழுதித் தரவேண்டும் என்று தோன்றவே தோன்றுது. அப்படி யாராவது எழுதினுர் என்றுல் அவர் எந்த மதத்தைச் சேர்ந்தவராக இருக்க முடியும்?

பீஹாரில் வடக்குப் பீஹார், தெற்குப் பீஹார் என்று இரண்டு பாகங்கள். தென் பாகத்திலே கங்கைக்குத் தெற்கே இருக்கிற பகுதியில் ஹிந்தி பாஷை வழங்குகிறது. கங்கைக்கு வடக்கே இருக்கிற பகுதியில் நான்கைந்து ஜில்லாக்கள் இருக்கும். அங்கே மிதிலா பாஷை; மைதிலி என்று பெயர். சீதை பிறந்த இடம் மிதிலை என்று நமக்குத் தெரியும். நான்கு ஜில்லாக்களை யும் சேர்த்து மிதிலா என்று சொல்லிக்கொண் டிருக்கிருர்கள். ஜனகர் இருந்த ஊரை மிதிலா பட்டணம் என்று ராமாயணம் சொல்கிறது. ஆனுல் இப்போது ஜனக்பூர் என்று சொல்கிற இடத்தில்தான் ஜனகர் இருந்ததாகச் சொல்கிருர்கள். அது பீஹாருக்கு வடக்கே நேபாள எல்லையில் இருக்கிறது. அது தான் ஜனக மகாராஜா இருந்த மிதிலா பட்டணம் என்று சொல்கிருர்கள். தர்ப்பங்கா, சம்பாரண், முஸாபர்பூர் ஆகியவை எல்லாம் அந்த ஜில்லாக்களில்தான் சேர்ந்திருக்கின்றன. மிச்ரர்கள் என்று அந்தத் தேசத்தவர்களுக்குப் பெயர்.

ஆயிரம் வருஷத்திற்கு முந்தி வாசஸ்பதிமிச்ரர் என்று ஒருவர் இருந்தார். அவருக்குச் சகல சாஸ்திரமும் தெரியும். யோக சாஸ்திரத்தில் கரை கண்டவர். நியாயசாஸ்திரம் என் ருல் அதிலும் கரை கண்டவர். வேதத்தினுடைய உபநிஷதப் பிரிவாகிய, ஞானப் பிரிவை விசாரம் செய்யும் சாஸ்திரம் வேதாந்த சாஸ்திரம். அதிலேயே கர்மாநுஷ்டானங்களைப்பற்றி விசாரிப்பது மீமாம்சை. இவை இரண்டிலும் அவர் கரை கண்டவர். இப்படி அவர் காலத்தில் அவருக்கு ஈடான யோக்கி யதை உடையவர்கள் யாரும் இல்லை. பிரம்ம சூத்திரத்திற்கு அநேகம் பேர் பாஷ்யம் எழுதியிருக்கிருர்கள். அதற்கு ஆசார் யார் அவர்களும் ஒரு பாஷ்யம் எழுதியிருக்கிருர் என்று முன்பே சொல்லியிருக்கிறேன் அல்லவா? பிரம்ம சூத்திரத்திற்கு ஆதி ஆசாரியார் எழுதின பாஷ்யம் இருக்கிறதே, அதற்கு அந்த வாசஸ்பதிமிச்ரர் வியாக்கியானம் எழுதியிருக்கிருர். வாசஸ்பத் யம் என்று அதற்குப் பெயர்.

சின்ன வயசிலேயே அந்தப் பெரிய வியாக்கியான புஸ்த கத்தை வாசஸ்பதிமிச்ரர் எழுத ஆரம்பித்துவிட்டாராம். கல் யாணம் ஆகி அவர் சம்சாரம் வந்தும் அவர் அப்படியே எழுதிக் கொண்டிருந்தார். அந்த அம்மாள் அவருக்கு வேண்டிய சுச்ரூஷைகளையெல்லாம் செய்துகொண்டே இருப்பார்கள். அதே திருஷ்டியாக இருந்து அவர் அந்தப் புஸ்தகத்தை ஒருவழியாக

எழுதி முடித்தாராம். 'அப்பாடி!' என்று விச்ராந்தியாக இருக்கும் போது பார்த்தால் அவருக்கு அப்போது அறுபது வயசு ஆகி விட்டதாம். அவர் பத்தினிக்கும் ஐம்பது வயசுக்கு மேலே ஆகிவிட்டது. இவரும் கிழவர் ஆகிவிட்டார்; அந்த அம்மாளும் கிழவி ஆகிவிட்டாள்.

''உங்களுக்குப் புண்ணியத்தை அந்தப் புஸ்தகத்தை எழுதியே தேடிக்கொண்டு விட்டீர்கள். எள்ளுந் தண்ணீரும் இறைக்க நமக்கு ஒரு பிள்ளை இல்லாமல் போய்விட்டதே! எனக்கு எப்படி நல்ல கதி கிடைக்கும்?'' என்று அந்த அம்மாள் அப்போதுதான் சொன்னாளாம்.

''அடடா! கல்யாணம் பண்ணிக்கொண்டு, உனக்கு நிரம்பத் துரோகம் பண்ணிவிட்டேன்! சரி, கவலைப்படாதே. உன் பெயரையே இந்தப் புஸ்தகத்திற்கு வைத்துவிடுகிறேன். தத்துவத்தைப்பற்றி விசாரிக்க வேண்டும் என்று இந்தப் புஸ்தகத்தை எடுக்கிறவர்கள் எல்லாரும் முதலில் உன்னை நினைக்கும்படியாகச் செய்துவிடுகிறேன். அதனாலேயே உனக்கு நல்ல கதி கிடைத்துவிடும்'' என்று அவர் சொல்லி, அந்தப் புஸ்தகத்திற்குத் தம் பத்தினியின் பெயரையே வைத்தாராம். அந்த அம்மாள் பெயர் பாமதி. அதனாலே அந்தப் புஸ்தகத்திற்கும் பாமதி என்றே பெயர் வைத்தார்.

எந்த மதஸ்தராக இருந்தாலும் சரி, தத்துவ விசாரணை செய்யும் கிரந்தம் எழுதுவது என்றால் சங்கராசாரியாருடைய பாஷ்யத்தை அப்படியே எழுதுகிறார்களோ இல்லையோ, பாமதியிலிருந்து பங்க்தி எடுத்து எழுதாமல் இருக்கமாட்டார்கள். அவ்வளவு உயர்ந்த புஸ்தகம் அது. அவர் அப்புறம், தம் காலத்தில் இருந்த ஒவ்வொரு மதத்திற்கும் புஸ்தகம், எந்த விதமான பேதமும் இல்லாமல், எழுதிக் கொடுத்திருக்கிறார்.* அவர் மாதிரி பிற மதஸ்தர்களில் வேறு யாரும் பிற மதஸ்தர்களுக்கு ஒரு புஸ்தகங்கூட எழுதிக் கொடுத்ததாகத் தெரியவில்லை.

இதுபோல வித்தியாரண்யர் காலத்தில் 'ஸர்வதர்சன ஸங்க்ரஹம்' என்று ஒரு புஸ்தகம் தோன்றியது. அதில் உலகத்

---

* 1. ப்ரஹ்மதத்வஸமீக்ஷா (மண்டனமிச்ரர் இயற்றிய ப்ரஹ்மஸித்திக்கு உரை) 2. ந்யாயகணிகா (மண்டனமிச்ரரின் விதிவிவேகத்தின் உரை), 3. தத்வபிந்து (பூர்வமீமாம்ஸா சம்பந்தமானது), 4. ஸாங்க்யதத்வகௌமுதி (ஸாங்க்ய தர்சனத்தைப்பற்றியது), 5. ந்யாய கணிகா தாத்பர்யம், 6. ந்யாயஸூசிநிபந்தனம், 7. யோகஸூத்ரபாஷ்யத்துக்கு வியாக்கியானம் என்பவை அவர் எழுதிய கிரந்தங்கள்.

தில் அப்போது இருந்த இருபது சித்தாந்தங்களைப்பற்றி - ஒன்றுகூட விடாமல் - அந்த அந்தச் சித்தாந்தத்தின் கொள்கை என்ன, தத்துவம் என்ன, அதில் உள்ள உயர்ந்த குணங்கள் எவை என்றும், சுவாமியே கிடையாது என்று ஒரு சித்தாந்தம் இருந்தாலுங்கூட அதைப்பற்றியும் விவரமாக இரண்டு பக்கம், மூன்று பக்கமாவது எழுதியிருக்கிறார்கள். எல்லாச் சித்தாந்த மதங்களையும் சேர்த்து எழுதப்பட்டிருக்கும் புஸ்தகம் அது ஒன்று.

பிறகு, முந்நூறு வருஷத்திற்கு முந்தி இருந்த அப்பைய தீக்ஷிதர் ஒவ்வொரு சித்தாந்தத்திற்கும், மாத்வர்களுக்கு, சைவர்களுக்கு வைஷ்ணவர்களுக்கு என்று தனித்தனியாக ஒவ்வொரு புஸ்தகம் எழுதிக் கொடுத்திருக்கிறார்.* ஆயிரம் வருஷத்திற்கு முன்னாடியே இந்த மாதிரியாக வாசஸ்பதிமிச்ரர் எழுதிக் கொடுத்திருக்கிறார். இப்போது முந்நூறு வருஷத்திற்கு முந்தி அப்பைய தீக்ஷிதர் - நல்ல அத்வைதி, சிவபக்தர் - விருப்பு வெறுப்பு இல்லாமல் தம் காலத்தில் இருந்த ஒவ்வொரு மதத்துக்கும் புஸ்தகம் எழுதிக் கொடுத்திருக்கிறார்.

‘இப்படி அவர் எழுதலாமா? இவர் மாதிரி பிற சித்தாந்தத்திற்கு எந்த ஆசார்யார் புஸ்தகம் எழுதிக் கொடுத்திருக்கிறார்? இவர் அத்வைதியாக இருந்தும் மாத்வர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் அவர்களுடைய சித்தாந்தத்தை உயர்த்திப் பேசியே கிரந்தம் எழுதலாமா?’ என்றால் இந்த மாதிரியே அவர் ஒரு கேள்வியைப் போட்டுக்கொண்டு, தாம் எதற்காக எழுதினார் என்பதற்குச் சமாதானம் சொல்லியிருக்கிறார்.

‘அத்வைதந்தான் நம்முடைய தத்துவம் என்பது வாஸ்தவம். அந்த நிலை நமக்கு ஈசுவரானுக்கிரகம் இல்லாமல் எப்படிக் கிடைக்கும்? ஈசுவரானுக்கிரகம் வேண்டுமென்றால் ஈசுவர பக்தி பண்ணவேண்டும். இந்தச் சித்தாந்தங்கள் எல்லாம் ஈசுவர பக்தியைப் பிரதானமாகக் கொண்டிருப்பதனால் தான், அந்த வழியில் போனால் ஈசுவரானுக்கிரகம் ஏற்பட்டு, தானே அத்வைத நிலை உண்டாகும் என்பதற்காகத்தான் எழுது

---

* ந்யாயமுக்தாவலி (மத்வ சித்தாந்தத்தின்படி ப்ரஹ்ம ஸூத்திரத்திற்கு எழுதிய விரிவுரை), 2. நயமயூகமாலிகா (ராமாநுஜ ஸித்தாந்தத்தின்படி ப்ரஹ்ம ஸூத்திரத்திற்கு எழுதிய விருத்தி உரை), 3. நயமணிமாலா (ஸ்ரீகண்ட ஸித்தாந்தத்தின்படி ப்ரஹ்ம ஸூத்திரத்திற்கு எழுதிய விருத்தி), 4. ஆனந்தலஹரி (ஸ்ரீகண்டபாஷ்ய விளக்கம்), 5. சிவாத்வைத நிர்ணயம் - என்பவை வேறு சித்தாந்தங்களைப்பற்றி அப்பைய தீக்ஷிதர் எழுதிய நூல்கள்.

கிறேன்' என்று அவரே ஒரு கேள்வியையும், அதற்கு ஒரு பதிலையும் எழுதியிருக்கிறார்.

यद्यप्यद्वैत एव श्रुतिशिखरगिरामागमानां च निष्ठा
साकं सर्वैः पुराणैः स्मृतिनिकरमहाभारतादिप्रबन्धैः ।
तत्रैव ब्रह्मसूत्राण्यपि च विमृशतां भान्ति विश्रान्तिमन्ति
प्रत्नैराचार्यरत्नैरपि परिजगृहे शङ्कराद्यैस्तदेव ॥

யத்யப்யத்வைத ஏவ ஶ்ருதிஶிகரகிராமாகமாநாம் ச நிஷ்டா
ஸாகம் ஸர்வை: புராணை: ஸ்ம்ருதிநிகரமஹாபாரதாதிப்ர பந்தை: |
தத்ரைவ ப்ரஹ்மஸூத்ராண்யபி ச விம்ருஶதாம் பாந்தி விஶ்ராந்திமந்தி
ப்ரத்நைராசார்யரத்நைரபி பரிஜக்ருஹே ஶங்கராத்யைஸ் ததேவ ||

(சிவார்க்கமணிதீபிகை - ஸ்ரீகண்ட பாஷ்ய உரை.)

சுருதிசிகரம் என்பதைத்தான் திருநான்மறைமுடி என்று தமிழில் சொல்கிறோம். நான்கு வேதங்களுடைய சிகரம், சுருதிசிகரம். சுருதி என்றால் காதாலே கேட்பது. வீணை, பிடில் இதற்கெல்லாம் சுருதி சேர்க்கிறார்கள் இல்லையா? கம்பியைத் தட்டிவிட்டுக் காதாலே அந்த நாதத்தைக் கேட்கிறார்கள். அதற்குச் சுருதி என்று பெயர். சுருதி என்றால் வேதம் என்றும் அர்த்தம். கையாலே எழுதிப் படிப்பது அல்ல வேதம்; காதாலே கேட்டுச் சொல்வது. அதனாலே சுருதி என்று அதற்குப் பெயர் வந்தது.

சிரவணம் என்று கேட்பதற்குச் சொல்லலாம். சுருதி என்பதும் அதுதான். சுருதிசிகரம் - நான்மறையின் முடிவு.

நான்கு வேதங்களுக்கும் முடிவானது அத்வைதந்தான் என்றாலும், 'யத்யபி' என்று எடுத்தவுடன் ஆரம்பிக்கிறார். 'யத்யபி' என்று வந்தால் 'ததாபி' என்று பின்னே வரவேண்டும்.

சிவாகமங்கள், பாஞ்சராத்திரம் என்ற ஆகமங்கள் எல்லாம் இருந்தாலும், விஷ்ணு புராணம், சிவ புராணம், அக்கினி புராணம், வாயு புராணம், பாகவதம், இப்படிப் புராணங்கள் இருந்தாலும் எல்லாவற்றினுடைய முடிவும் அத்வைதந்தான்.

தர்ம சாஸ்திரம், மனுஸ்மிருதி இவை எல்லாம் கடைசியில் அத்வைதந்தான் என்றாலும், மகாபாரதம் முதலிய இதிகாசங்கள் எல்லாவற்றின் முடிவும் அத்வைதந்தான் என்றாலும் - ஆதிப்ரபந்தங்கள் என்றால் சகல சாஸ்திரங்கள், சகல பிரபந்தங்களின் முடிவும், வைத்திய சாஸ்திரம், கிருஷி சாஸ்திரம்

என்று எதை எடுத்துக்கொண்டாலும் முடிவு அத்வைதந்தான் என்று சொல்கிறார்.

இப்போது வைத்திய சாஸ்திரம் என்றால் அந்தச் சாஸ்திரம் எதற்காக? சரீரம் திடமாக இருப்பதற்காக. இல்லாவிட்டால் என்ன? நோய் வரும். நோய் வந்தால் என்ன? ஒரு காரியமும் செய்ய முடியாது. சரீரம் எதற்காகத் திடமாக இருக்கவேண்டும்? இந்த உடம்பைக் கொடுத்தவன் பரமாத்மா. அதுதான் உண்மை. அந்த உண்மையை அறிந்துகொள்ளப் பல சாதனங்கள் பண்ணவேண்டும். உடம்பு திடமாக இருந்தால்தான் சாதனம் பண்ணலாம். உடம்பு திடமாக இருக்க, நோய் வராமல் பாதுகாக்க வேண்டும். நோயிலிருந்து நம்மைக் காப்பாற்றும் சாஸ்திரந்தான் இது. இப்படி ஆயுர்வேதம் என்றால் அதுவும் கடைசியில் அத்வைத நிலையை அடைய உதவுகிறது.

சங்கீதத்தினாலே மனம் லயம் அடையும். மனம் லயம் அடையப் பழகினால் ஈசுவரனோடு கலக்கலாம். அதற்காகத்தான் இந்தச் சங்கீத சாஸ்திரம் என்று சொல்லலாம். க்ருஷி சாஸ்திரம் உழவைப்பற்றிச் சொல்கிறது. பயிரிட்டால் தானியம் விளையும். தானியம் விளைந்தால் பஞ்சம் இல்லாமல் இருக்கலாம். பஞ்சம் வறுமை என்பது இல்லாமல் சந்தோஷமாகச் சாப்பாடு இருந்தால்தான் அமைதியாக ஆத்ம சிந்தனை பண்ண முடியும். ஆத்ம சிந்தனை பண்ணி, 'எல்லாம் ஒன்று' என்கிற உண்மையை அறிந்துகொண்டு, ஈசுவரனோடு ஐக்கியமாகலாம். அதற்காகத்தான் இந்தக் க்ருஷி சாஸ்திரம். இப்படி எல்லாம் முடிவில் ஈசுவரனோடு ஐக்கியமாவதற்கே உபகாரமாக இருக்கின்றன.

ஆதிப் பிரபந்தங்கள் என்றால், சங்கீதம், விவசாயம், நாட்டியம், வைத்தியம் இவைதாம். இவை எல்லாமும் அத்வைதத்தில்தான் போய் முடிகின்றன.

அத்வைத மதத்தில்தான் கௌடபாதர், பகவத்பாதர், சுரேசுவராசாரியர், வாசஸ்பதிமிச்ரர், வித்தியாரணியர் முதலிய அநேக ஆசார்யரத்தினங்கள் இருக்கின்றனர்.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இந்த மதங்கள் ஒன்றோடொன்று கலகம் விளைவிப்பதுபோல் தோன்றும். ஆழ்ந்து பார்க்கும்போது எல்லாம் ஒன்று என்று கலகம் பண்ணாமல் இருப்பது தெரியும். எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து, விமர்சித்துப் பார்த்தால் விச்ராந்தியாக இருக்கும். அப்படி ஒன்றாகப் பார்க்கும்போது அத்வைத சித்தாந்தத்தைச் சார்ந்தே இருக்கும். எல்லா ஆசார்யர்களும் அதை அநுபவ முடிவில் கிரகித்திருக்கிறார்கள்.

அப்படி இருந்தாலும்,

तथाऽप्यनुग्रहादेव तरुणेन्दुशिखामणेः ।
अद्वैतवासना पुंसामाविर्भवति नान्यथा ॥

ததாப்யநுக்ரஹாதேவ தருணேந்துஶிகாமணே: |
அத்வைதவாஸநா பும்ஸாமாவிர்ப்பவதி நாந்யதா ||

இது நீல விளக்கு, இது பச்சை விளக்கு, இது டேப் ரெகார்டு என்ருலும், இவை எல்லாவற்றுக்குள்ளும் இருந்து வேலை செய்விப்பது மின்சாரம் என்ற ஒன்றுதான் என்பது போல, எல்லா மூர்த்திகளிடத்திலும் வெளிப்பார்வைக்கு வேறு பாடு தோன்றினுலும், உள்ளே இருப்பது இந்த அத்வைத பரமான பொருள் ஒன்றுதான்.

'நமக்குள் சண்டை இல்லை. அத்வைத நிலை நமக்கு வர ஈசுவர அநுக்கிரகம் வேண்டும். ஈசுவர அநுக்கிரகம் வேண்டு மென்ருல் பக்தி வேண்டும். இவர்கள் எந்த நாமத்தில், எந்த மூர்த்தியைப் பக்தி பண்ணினுலும் எல்லா இடத்திலும் இந்த அத்வைதபரமான வஸ்து இருப்பதனுல் அதன் அநுக்கிரக விசேஷத்தை எதிர்பார்த்து நான் இப்படிச் செய்கிறேன்' என்று எழுதியிருக்கிருர்.

'இப்படிப் பெரிய அத்வைதிகளாக இருந்த மகான்கள் தாம் இதர சித்தாந்தங்களுக்கும் புஸ்தகங்கள் எழுதிக்கொடுத் திருக்கிருர்கள்' என்று சொன்னுல் அதுவும் நம்முடைய அகம் பாவத்தில்தான் முடிகிறது. 'வேறு மதஸ்தர்கள் யாரும் அப்படிச் செய்யவில்லை. நாமே அப்படிச் செய்தோம்' என்ற தற்பெருமையில்தான் இதுவும் போய் முடிகிறது.

தற்பெருமையோ அகம்பாவமோ உண்மையில் அதை நினைத்துப் பார்க்கிறபோது நமக்கு உண்டாகக்கூடாது. ஆசார்ய ரவர்களை நினைவுபடுத்திக்கொள்ளும்போது அவர்களுக்கு ஒரு விரிந்த மனேபாவம் இருக்கிறதே, அது நமக்கெல்லாம் வரவேண்டும். இன்னெரு மதஸ்தர்களிடம் நமக்கு விரோதம் இல்லை. அவர்கள் ஒன்று சொன்னுல் அவர்களுடைய தத்துவம் என்ன என்று விசாரித்து அறிந்துகொள்வோம். நம்முடைய தத்துவத்தையும் அவர்கள் கேட்டால் சொல்வோம். இப்படிப் பரஸ்பரம் உதவி செய்துகொள்கிற மனேபாவம் நமக்கு நிறைய வரவேண்டும்.

ஸூதஸம்ஹிதை என்று ஒரு புஸ்தகம் இருக்கிறது. சர்வ வித்தைகளுக்கும் நம்முடைய ஈசுவரன்தான் காரணம் என்று

வேதத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. வித்தை என்றால் என்ன? எல்லா மதங்களும், எல்லாக் கலைகளும் சேர்ந்ததுதான்.

சார்வாக மதம் என்று ஒன்று உண்டு. இதைத்தான் ‘மெடீரியலிஸம் (Materialism)’ என்பர். ‘உடம்பைத் தவிர ஆத்மா என்று ஒன்றும் கிடையாது. இப்படிச் சாப்பிட்டு, வளர்ந்துகொண்டு, இருந்துவிட்டு, இந்த உடம்பு செத்துப் போகிறது. அவ்வளவுதான். ஆத்மா, பரமாத்மா ஒன்றும் இல்லை’ என்பதுதான் இந்தச் சார்வாக மதம்.

எல்லாத் தத்துவங்களுக்கும் புஸ்தகங்கள் இருக்கின்றன. இந்தச் சார்வாக மதத்திற்குத்தான் புஸ்தகம் இல்லை என்று நினைத்துக்கொண் டிருந்தார்கள். சார்வாகத்திற்கும் புஸ்தகம் இருக்கிறது. காயக்வாட் ஓரியண்டல் ஸீரீஸில் இப்போது அச்சுப் போட்டிருக்கிறார்கள்.

சர்வ வித்தைகளுக்கும் மூலமாக இருப்பவன் ஈசுவரன் என்றால், கடவுள் இல்லை என்று ஒரு தத்துவம் இருக்கிறதே, அதற்கும் ஈசுவரன்தான் காரணம் என்றே தெரிந்துகொள்ள வேண்டும். அதனிடத்தில் நமக்கு வெறுப்பு உண்டாகக் கூடாது. இப்படி ஸூதஸம்ஹிதை என்ற புஸ்தகத்தில் ஒரு காண் டத்திலே விஸ்தாரமாக இருக்கிறது.

‘சுவாமி இல்லை என்று சொல்வது எப்படி ஒரு மதமாகும்?’ என்றால் அதுவும் கடைசியில் அத்வைத தத்துவத்திற்கு அநு கூலந்தான். வெறுமனே காலையில் ஏழு மணிக்கு, எட்டு மணிக்கு எழுந்திருப்பது; ஆசாரம் இல்லை; அநுஷ்டானம் இல்லை; கண்டதைத் தின்பது, தூங்குவது என்று இப்படி நம் மதத்தில் ஒருவன் இருந்துகொண் டிருந்தால் அந்தச் சோம் பேறியைவிட எத்தனையோ மடங்கு உயர்வானவன், ‘சுவாமி இல்லை; ஆத்மா இல்லை. எல்லாம் இந்த உடம்புதான்’ என்று சொல்லிக்கொண் டிருக்கிறவன்.

காரணம், அவன் தத்துவ விசாரணை செய்ய ஆரம்பித்து விட்டான் அல்லவா? ஆத்மா உண்டா, ஆத்மா கிடையாதா, சுவாமி உண்டா, கிடையாதா என்ற ஆராய்ச்சியில் அவன் இறங்கிவிட்டான். அவன் கண்ட தத்துவம் சுவாமி இல்லை என்ற முடிவாகவே இருக்கட்டும். அவன், ஒரு விசாரணையும் இல்லாமல் இருக்கிற சோம்பேறியைவிட உத்கிருஷ்டமானவன் தான்.

‘ஸ்வாமி இல்லை’ என்ற ஒருபடி வரைக்கும் வர, அவன் தத்துவ ஆராய்ச்சி பண்ணியிருக்கிறான் அல்லவா? இன்னும்

கொஞ்சம் உயர்ந்தால், அநுபவம் முதிர்ந்தால், அத்வைத உண்மையை அவன் அறிந்துகொண்டுவிட முடியும்.

ஆகையால் எந்த மதமாக இருந்தாலும் அது ஒரு வழியில் நம்முடைய தத்துவ ஆராய்ச்சிக்கு அநுகூலமானதாகவே இருக்கும். நமக்கு எந்த மதத்தினிடமும் துவேஷம் உண்டாகக் கூடாது. ஆயிரம் வருஷங்களுக்கு முந்தி இருந்த ஆசார்யர் அவர்களிலிருந்து இருநூறு வருஷங்களுக்கு முந்தி இருந்தவர்கள் வரையில் அதை நமக்குக் காட்டியிருக்கிறார்கள்.

5

# விக்கினேசுவரர்

[இன்று உபந்நியாசம் ஆரம்பிப்பதற்குமுன் இங்கே வந்திருந்த தியாகையரவர்கள் பரம்பரையைச் சேர்ந்த தியாகராமையர் என்பவரைச் சில கீர்த்தனங்கள் பாடும்படி ஆசார்ய ஸ்வாமிகள் ஆக்ஞாபித்தார்கள். அவர், 'கிரிராஜஸுதாதநய' என்னும் விக்கினேசுவரர் கீர்த்தனம் பாடினார். அவர் பாடின பிறகு ஆசார்ய ஸ்வாமிகள் உபந்நியாசம் செய்கிறார்கள்.]

எத்தனையோ அநுபூதிமான்கள் தம்முடைய அநுபவங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். பலர் கவிதைகளாகப் பண்ணியிருக்கிறார்கள். கீர்த்தனங்களாக அநேகம் பேர் எழுதியிருக்கிறார்கள். தீக்ஷிதர் கிருதிகள், சாமா சாஸ்திரிகள் கிருதிகள், தியாகையரவர்களுடைய கிருதிகள் நிறைய இருக்கின்றன. தியாகையரவர்களுடைய பாட்டுகளில் ஒரு பாட்டாவது தெரியாதவர்கள் இல்லை. இப்போது இவர்களைப் பாடச் சொன்னேனே, இந்த 'கிரிராஜஸுதா தநய' என்ற பாட்டும் தியாகையரவர்களுடையதுதான்.

கிரி என்றால் மலை. ஹிமவத் பர்வதத்திற்குக் கிரிராஜன் என்று பெயர். மலைக்கெல்லாம் ராஜா கிரிராஜா. ஸுதா என்றால் பெண். கிரிராஜனுடைய ஸுதா, ஹிமவானுடைய புத்திரி பார்வதி. கிரிராஜஸுதா தனயன்தான் பிள்ளையார். அந்தப் பிள்ளையாரை அவர் பாடுகிறார்.

விநாயகருடைய தத்துவத்தைக் கொஞ்சம் ஆலோசனை பண்ணிப் பார்க்கலாம். நம் பெரியவர்கள் இப்படி ஒரு

ஸ்வாமியை எதற்காக வைத்திருக்கிறார்கள்? இந்த மூர்த்தியிலுள்ள ஒவ்வொரு சின்னச் சமாசாரத்தைக் கவனித்தாலும் அதில் நிறையத் தத்துவங்கள் இருக்கின்றன. 'நமக்குத் தோன்றியவை அவ்வளவுதான். ஆச்சு. அதிலே வேறு தத்துவம் இல்லை' என்று சொல்ல முடியாதபடி அவை மேலும் மேலும் வளர்ந்து போய்க்கொண்டே இருக்கின்றன. நம்முடைய அறிவுக்குத் தோன்றியது அவ்வளவுதான். அது சரியோ தப்போ? இன்னும் எத்தனை இருக்கின்றனவோ? நமக்கே ஒன்றும் புரியாதபடி அநேக தத்துவங்கள் விரிந்துகொண்டே போகின்றன.

பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது எதற்காக? அவர் ஸாக்ஷாத் பரமேசுவரனுடைய பிள்ளை. விக்கினேசுவரர், தம் அப்பாவைப் பார்த்தே, "உன் சிரசையே எனக்குப் பலி கொடு" என்று கேட்டுவிட்டாராம். ஈசுவரனுடைய சிரசைப் பலி கொடுத்தால்தான் எந்தக் காரியமும் விக்கினம் இல்லாமல் ஜயம் ஆகும். ஈசுவரன் மூன்று கண் உடையவன். அதற்காகத்தான் மூன்று கண்ணுடைய அவன் தலைக்குப் பதில் மூன்று கண்ணுடைய தேங்காயை உடைக்கிறோம்.

தேங்காய் உடைப்பது உயர்ந்த ஒரு தத்துவத்திற்கு அறிகுறி. ஈசுவரன் தலையை வாங்கும்படியான சக்தி விநாயகருக்கு இருக்கிறது. எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது எதுவோ அதைத் தியாகம் பண்ணினால்தான் மகாகணபதிக்குப் பிரீதி ஏற்படுகிறது. அவ்வளவு பெரிய தியாகம் பண்ணுவதற்குத் தயார் என்ற அறிகுறியாகத்தான், ஈசுவர சிருஷ்டியிலே, த்ரிநேத்திரத்தை உடைய காயைச் சிருஷ்டித்து அந்தக் காயை அவனுக்கு நாம் அர்ப்பணம் பண்ணும்படியாக ஈசுவரன் அநுக்கிரகித்திருக்கிறான். அந்தக் காயை அப்படியே சிதர்த்தேங்காயாக உடைக்கவேண்டும்.

சந்நியாசிகள் சித்தியானால்கூட, தேங்காய் உடைக்கவேண்டும் என்று வைத்திருக்கிறார்கள். சிதர்த்தேங்காய் குறைந்தது மூன்று துண்டுகளாகவாவது போகவேண்டும்.

இந்தப் பழக்கம் தமிழ்த் தேசத்தைத் தவிர வேறு தேசத்தில் தெரியாது. சுவாமி குழந்தையானபடியால் இதில் குழந்தைகளுக்குத்தான் பாத்தியம் அதிகம். மற்றவர்களுக்குப் பாத்தியதை இல்லை. இது எனக்கு ஓர் ஊரில் தெரிந்தது:

சாதுர்மாஸ்யம் என்பதை நான்கு பட்சமாக வைத்து இரண்டு மாச காலம் வருஷத்தில் ஓர் ஊரில் சந்நியாசிகள் தங்க வேண்டும் என்பது ஒரு விதி. இந்த ஏற்பாடு ஆயிரம் வருஷத்திற்கு மேலாகவே இருந்து வருகிறது. ஒரு வருஷம் சாதுர்

மாஸ்யத்தில் நான் நாகபட்டினத்தில் இருந்தேன். நித்தியம் கோயிலுக்குப் போய்த் தரிசனம் பண்ணிவிட்டு வருவது உண்டு. சாயந்தர வேளையில் ஒரே கூட்டமாக இருக்கும். கோயிலுக்குள் போகும் இடத்தில் ஒரு பிள்ளையார். அங்கே நிறையச் சிதர்த் தேங்காய் போடுவது வழக்கம். நூற்றுக்கணக்கான குழந்தைகள் ஒன்றன் மேலே ஒன்று விழுந்துகொண்டு, அந்த இடத்தில் தேங் காய் பொறுக்குவார்கள். அவர்களை விலக்கிக்கொண்டு, தேங்காய் உடைக்க வேண்டும். இல்லையானால் ஆபத்து ஏதாவது வந்து விடும். அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் விழுந்துகொண்டு காயம் அடைந்தால் என்ன பண்ணுவது என்று வேறு கவலை. தேங்காய் உடைக்கிறபோது சில பெரியவர்கள் அந்தக் குழந்தைகளை விலகிக்கொள்ளச் சொல்லிப் பொறுக்க வந்தார்கள். ''எங்களைப் பொறுக்கக்கூடாது என்று சொன்னால், உங்களுக்கு என்ன இதில் பாத்தியதை இருக்கிறது?'' என்று ஒரு பையன் கேட்டான். 'ஓஹோ! இந்தக் குழந்தைகள் எல்லாந்தான் பிள்ளையாருக்கு உறவு' என்று எனக்கு அப்போது தோன்றியது.

இந்தத் தேசத்தில்தான் அந்தப் பழக்கம் இருக்கிறது என்று சொன்னேன் அல்லவா? இன்னொன்று: கணபதியைக் காட்டிலும் சரீரத்தில் பருமனான ஸ்வாமி வேறு யாரும் இல்லை. சிரசு யானையின் தலை. பெரிய வயிறு. பெரிய உடம்பு. அவருக்கே 'ஸ்தூல காயர்' என்று பெயர். ஒரு மலைபோல இருக்கிறார். ஆனால் அவர் குழந்தை!

அப்படி என்றால் குழந்தைக்கு எது அழகு என்று பார்த் தேன். குழந்தை என்றால் அந்தப் பருவத்தில் நிறையச் சாப்பிட வேண்டும். உடம்பு கொஞ்சங்கூட இளைக்கக் கூடாது. அதுதான் குழந்தைக்கு அழகு. ஒரு சந்நியாசி, நிறையச் சாப்பிட்டுக் கொண்டு பெரிய சரீரியாக இருந்தால் அது அவருக்கு அழகல்ல. வயசாகிவிட்டால் ராத்திரி உபவாசம் இருப்பார்கள். குழந்தை அப்படி இருப்பது அழகா? குழந்தை என்றால் தொந்தியும் தொப்பையுமாகக் கொழுகொழுவென்று இருந்தால்தான் அழகு. நிறையச் சாப்பிடுவதுதான் அழகு. குழந்தைகள் நல்ல புஷ்டியாக இருக்க வேண்டும் என்பதை இந்தக் குழந்தைச் சாமியே காட்டிக்கொண் டிருக்கிறார்.

இந்த ஸ்தூல காயர் நமக்கு வேறு ஓர் ஈசுவர தத்துவத்தை யும் விளக்கிக்கொண் டிருக்கிறார். எப்படி? இவருக்கு வாகனம் என்ன? மூஞ்சூறு. இவரோ யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர்விரோதமான ஆகிருதி உடையது மூஞ்சூறு. இதை அவர் தம் வாகனமாக வைத்துக்கொண் டிருக்கிறார். மற்றச் சாமிகளுக் காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பட்சி என்று இருக்கிறது.

இவரோ தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய சாமியாக இருக்கிருரோ அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக்கொண்டிருக்கிருர். சுவாமி எதை வாகனமாக வைத்துக்கொண்டாலும் வாகனத்தினுல் சுவாமிக்குக் கௌரவம் இல்லை. சுவாமியால்தான் வாகனத்துக்குக் கௌரவம். வாகனத்துக்குக் கௌரவம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி நெட்டிப் பிள்ளையார் மாதிரியாகக் கனம் இல்லாமல் இருக்கிருர். அதற்குச் சிரமம் இல்லாமல், ஆனுல் அதற்கு மரியாதை, கௌரவம் எல்லாம் உண்டாகும்படியாகத் தம் உடம்பை வைத்துக்கொண்டிருக்கிருர். அந்தப் பிள்ளையார் மற்றவர்களை உபகரணமாக வைத்துக்கொண்டு, அவர்களுக்கு ஓர் அந்தஸ்தைக் கொடுத்தாலும், தாம் அவற்றுக்கு ஒரு பாரமாக இல்லாமல் இருக்கிருர் என்ற பெரிய தத்துவத்தை அவருடைய வாகனம் நமக்குக் காட்டுகிறது. பக்தர்களுக்கு ஏற்றபடி பகவான் இருந்து அநுக்கிரகம் செய்கிருர் என்பது இதிலிருந்து விளங்குகிறது.

அவர் ஏகதந்தம் உடையவர். 'ஏகதந்தம் உபாஸ்மஹே' என்று பிரார்த்தித்துக்கொள்கிருேம்.

अगजाननपद्मार्कं गजाननमहर्निशम् ।
अनेकदं तं भक्तानां एकदन्तमुपास्महे ॥

அகஜாநந பத்மார்க்கம் கஜாநந மஹர்நிஶம் |
அநேகதம் தம் பக்தாநாம் ஏகதந்தம் உபாஸ்மஹே ||

என்று பழைய நாளிலிருந்தே விக்கினேசுவரரைப்பற்றி ஒரு சுலோகம் சொல்லிக்கொண்டு வருகிருேம்.

அகம் என்ருல் மலை. நகம் என்ருலும் மலைதான். கம் என்ருல் போவது. கம் என்ருல் ஓரிடத்திலிருந்து இன்னேர் இடத்திற்குச் சஞ்சரிப்பது, அசைவது என்று பொருள். அகம் என்ருல் அசையாதது. மலை ஓர் இடத்திலிருந்து இன்னேர் இடத்திற்குப் போகாது; அசையாது. மரம் செடி கொடி இவற்றுக்குக் கூடக் கொஞ்சம் அசைவதுபோன்ற வளர்ச்சி இருக்கிறது. ஆனுல் மலை அசைவதில்லை, வளருவதில்லை. கம் - சஞ்சரிப்பது: அகம் என்ருல் சஞ்சரிக்காதது. அதனுல் அகம் என்பதற்கு மலை என்று பொருள் வந்தது.

அகஜா ஆநநம் அகஜாநநம். அகஜா-மலைக்குப் பிறந்தவள்; மலைமகள்; பார்வதி. ஆநநம் என்பது முகம். அகஜா ஆநந பத்மம் - மலைமகளுடைய முகம் ஆகிற தாமரை.

தாமரை, சூரியனைக் கண்ட மாத்திரத்தில் மலர்கிறது. அகஜா ஆநந பத்ம அர்க்கம் என்ருல் சூரியனைப்போல இருக்கிற

விநாயகனைக் கண்ட மாத்திரத்தில் மலைமகளுடைய முகமாகிற தாமரை ஆனந்தபரவசமாக மலர்கிறது. அம்பாளுடைய முகம் விகசிக்கிறது.

கஜாநநம் - விநாயகனை, யானை முகத்தவனை. அஹர்நிஶம் உபாஸ்மஹே - அல்லும் பகலும் உபாசனை பண்ணுகிறேன்; நமஸ்காரம் செய்கிறேன் என்பது அர்த்தம்.

அப்படிச் செய்வதற்கு இந்தத் தேசத்தில்தான் முடியும். ஏன் தெரியுமா? இங்கேதான் ஒவ்வொரு தெரு மூலையிலும் ஒரு பிள்ளையார் கோயில் இருக்கிறது. பிள்ளையாருக்குக் கும்பிடு போடக்கூடாது என்று பிடிவாதமாக இருக்கிறவனைத் தவிரப் பாக்கிப் பேர், தம்மையும் அறியாமல் போகிற போக்கிலேயே ஒரு கும்பிடு போட்டுவிடுவார்கள். கொஞ்சம் தெரிந்து பக்தி பண்ணுகிறவர்கள் குட்டிக்கொள்ளவும் கொள்வார்கள்.

अगजाननपद्मार्कं गजाननमहर्निशम् ।
अनेकदं तं भक्तानां एकदन्तमुपास्महे ॥

அகஜாநந பத்மார்க்கம் கஜாநநம் அஹர்நிஶம்|
அநேகதம் தம் பக்தாநாம் ஏகதந்தம் உபாஸ்மஹே||

'அநேகதந்தம் பக்தாநாம்' என்பதை அநேகதம், தம், பக்தாநாம் என்று பிரிக்க வேண்டும். அநேகதம் என்றால், எவ்வளவு விதமான அநுக்கிரகமாக இருந்தாலும், பக்தாநாம் - பக்தர்களுக்கு. பலவகை அநுக்கிரகங்களைப் பக்தர்களுக்கு உடனே செய்கிறார். தம் என்றால் அப்பேர்ப்பட்டவர் என்று அர்த்தம். அவர் எத்தகையவர்? பக்தர்களுக்கு அநேக விதமான அளவற்ற அநுக்கிரகத்தைச் செய்கிறவர். ஏகதந்தம் உடையவர்; ஒற்றைக் கொம்பர்.

'அநேகதந்தம் பக்தாநாம் ஏகதந்தம்.' முதலில் அநேகதம் தம் என்று பிரிக்க வேண்டும். பிறகு ஏக+தந்தம் என்று பிரிக்க வேண்டும். தந்தம் என்றால் கொம்பு. இரண்டு கொம்பிலே ஒரு கொம்பை அவரே பாரதம் எழுதுவதற்காக ஒடித்துக்கொண்டு விட்டார் என்பது ஒரு கதை. ஆகவே அவருக்கு இருப்பது ஒரு கொம்புதான்.

ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வொன்றிலே அதிகக் கௌரவம் இருக்கும். சவுரி மான் என்று உண்டு. அதன் கௌரவம் வாலில்தான் இருக்கிறது. அது தன் வாலுக்குத் துளிகூட ஆபத்து வராமல் காப்பாற்றிக்கொள்ளும். மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். அதற்கு அகங்காரம், பெருமை, கர்வம் எல்லாம் அதன் தோகை

தான். அதை ஜாக்கிரதையாக அது ரட்சிக்கும். யானை எதை ரட்சிக்கும்? தன் தந்தத்தைத் தீட்டி வெள்ளைவெளேரென்று வைத்திருக்கும்.

இந்த யானை என்ன பண்ணுகிறது என்றால் அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்துக்கொண்டு மகாபாரதத்தை எழுதிற்று: தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கிற ஒன்றைக் காட்டிலும் தர்மத்தைச் சொல்கிற ஒன்று தான் பெரிது என்பதை அங்கே இந்த யானை காட்டியது. நியாயத்திற்காக, தர்மத்திற்காக, வித்தைக்காக எதையும் தியாகம் பண்ணவேண்டும் என்பதை, தானே தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது.

சுவாமிக்கு ஆயுதம் என்று தனியாக ஒன்றும் வேண்டியதில்லை. எதையும் ஆயுதமாக அவர் நினைத்தால் உபயோகித்துக் கொள்வார் என்பதற்கும் இது உதாரணம். தம்முடைய சரீரத்தில் எது உத்கிருஷ்டமான பாகமோ அதை எடுத்துக்கொண்டே லோகத்தில் வித்தை பரவுவதற்கும், சத்தியம், ஞானம், தர்மம் எல்லாம் பரவுவதற்கும் விநாயகர் மகாபாரதத்தை எழுதினார் என்ற தத்துவம் நமக்குத் தெளிவாகிறது.

தமிழ்ப் பாஷை தெரிந்தவர்களுக்கு ஔவையார் என்றால் தெரியாமல் இருக்காது. அவளுடைய ஒரு வாக்கியமாவது எல்லாருக்கும் தெரிந்திருக்கும். அவள் எழுதியிருக்கும் புஸ்தகங்களுக்குள் ஒன்று விநாயகர் அகவல். அது முழுக்க யோக சாஸ்திரம். 'எப்படித் தியானம் பண்ண வேண்டும்? குண்டலினி சக்தியை ஸஹஸ்ராரத்திற்கு எழுப்புவது எப்படி?' என்பவை போன்ற பல சூக்ஷ்மமான கருத்துக்களை, யோக சாஸ்திர விஷயங்களை - விநாயகர் அகவல் மூலம் ஔவையார் தெரிவித்திருக்கிறார்கள். அவர் - அந்தப் பாட்டி - ஆத்திசூடி போன்ற இதர நூல்களும் செய்திருக்கிறார்கள்.

ஆத்திசூடி என்றால் பரமேசுவரனுக்குப் பெயர். ஆத்திப் பூ, சந்திர கலைபோல இருக்கும். இன்னொரு பூவையுங்கூட அவர் சூட்டிக்கொள்வார். அதுதான் கொன்றைப் பூ: பஞ்சாட்சர மந்திரத்திற்குப் பிரணவத்தைச் சேர்த்தால் ஆறு அக்ஷரம்: அந்த ஆறு அக்ஷரமும் ஆறு தளங்கள் மாதிரி. கொன்றைப் பூவுக்கு ஆறு தளங்கள் உண்டு. அந்த ஆறு தளங்களுக்கு மத்தியில் கிரந்தத்திலே பிரணவம் எழுதினால் எப்படி இருக்குமோ அப்படிக் கேசரம் இருக்கும்.

ஆறு தளங்களோடு சேர்ந்த பிரணவம் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது கொன்றைப் பூ. அது ஈசுவரனுக்கு மிகவும்

பிரீதியான புஷ்பம். அவன் எப்போதும் கொன்றை மலர் அணிந்துகொண் டிருக்கிறான். தமிழில் தேவாரம் பாடுகிறவர்கள் கொன்றை அணிந்தவனாக அவனைப் பல இடங்களில் பாடியிருக் கிறார்கள்.

**மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை அணிந்தவனே**

என்ற தேவாரம், எல்லாருக்கும் தெரிந்திருக்கும். கொன்றைக்கு அமரத்தில்,

आरग्वधे राजवृक्षशम्याकचतुरङ्गुलाः ।

**ஆரக்வதே ராஜவ்ருக்ஷ ஶம்யாக சதுரங்குலா: |**

என்று பல பெயர்கள் சொல்லப்பட் டிருக்கின்றன. ஆரக்வதம் என்று ஒரு பேர் இருக்கிறது. ஶம்யாகம் என்று ஒரு பேர். ராஜ விருக்ஷம், சதுரங்குலம் என்றும் பேர். இந்தப் பிரணவ மலர் ஈசுவரனுக்கு மிகவும் பிரியமானது.

விநாயகரும் பிரணவ ஸ்வரூபி. துதிக்கையோடு இருக்கிற அவர் சிரசு, கையிலே இருக்கும்படியான மோதகம் இவற்றை யெல்லாம் சேர்த்துப் பார்த்தால் பிரணவம் மாதிரியாக இருக் கும். அந்தப் பிரணவத்தைப் புருவத்தின் மத்தியில் தியானம் பண்ணிக்கொண்டு, ஔவையார் பண்ணின அநுக்கிரகந்தான் விநாயகர் அகவல். யோக சாஸ்திரம், தியானம் பண்ணுகிற முறை எல்லாம் அதில் இருக்கின்றன. அதைப்பற்றி ஒரு கதை சொல்வது உண்டு.

சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாளும் யானை மீதும் குதிரைமீதும் கைலாசத்திற்குப் போகும்போது, ஔவை யாரையும் சீக்கிரம் வரச் சொன்னார்களாம். வந்தால் தங்களுட னேயே கைலாசத்துக்கு அழைத்துப்போவதாகச் சொன்னார் களாம். ஔவையார் அப்போது விநாயக பூசை பண்ணிக் கொண்டிருந்தாள். 'கைலாசத்தைவிட எனக்கு விநாயகர் பூசைதான் முக்கியம்' என்று சொல்லிவிட்டாளாம் ஔவை. அவர்கள் போய்விட்டார்கள். பூசை எல்லாம் முடிந்தபிறகு, 'கைலாசத்திற்கு அவர்கள் போய்விட்டார்களே! நான் எப்படிப் போவது, பிள்ளையாரே?' என்று அவள் பிரார்த்தித்துக் கொண்டாளாம். அவர்கள் கைலாசம் போய்ச் சேருவதற்குள் விநாயகரே தம் துதிக்கையால் அவளைக் கைலாசத்தில் தூக்கி வைத்துவிட்டார் என்று ஒரு கதை சொல்வது வழக்கம்.

விநாயகர் குழந்தைச் சுவாமி. அப்பா அம்மாவாக இருக் கிற சுவாமி குழந்தை ஆகிவிட்டால் அந்தக் குழந்தைச்

சுவாமிக்கு நிறையச் சாப்பாடு போடவேண்டும். நிறைய மோதகங்கள் கொடுக்கவேண்டும். குழந்தை என்றால் புஷ்டியான ஆகாரமாக நிறைய எப்போதும் கொடுத்தால்தான் நல்லது. குழந்தைக்குச் சாப்பிடுவது அழகு. இந்தக் குழந்தையும் அப்படித்தான்.

மற்றொரு விஷயம். நமக்குப் பார்க்கப் பார்க்க அலுக்காத சாமான்கள் சில: சந்திரன், சமுத்திரம், யானை இவற்றையெல்லாம் எத்தனை தடவை பார்த்தாலும் இன்னும் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்றே தோன்றும். பார்க்கப் பார்க்க ஆனந்தம் பொங்கும். அதனால்தான் குழந்தைச் சுவாமி தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்கு எல்லாம் பார்க்கப் பார்க்க ஆனந்தம் எப்போதும் பொங்கிக்கொண்டிருக்கும் படியாக யானை உருவத்தோடு இருக்கிறார். அது ஆனந்த தத்துவம்; ஆராத ஆசையின் தத்துவம்.

அவர் பார்வதி பரமேசுவரர்களுக்குப் பிள்ளை. இந்த உலகத்திற்கே பிள்ளையாக ஆவிர்ப்பவித்ததனால் அவரை நாம் விநாயகர் என்பதைவிடப் பிள்ளையார் என்றே அழைக்கிறோம். "கேதாரத்திற்குப் போனாலும் அங்கே ஒரு குன்றில் பிள்ளையார் இருப்பார். கன்னியாகுமரிக்குப் போனாலும் ஒரு பிள்ளையார் இருக்கிறார்" என்று ஒரு கணபதி பக்தர் என்னிடம் வந்து மிகவும் சந்தோஷப்பட்டுக்கொண்டார்.

விநாயக தத்துவத்தை இப்படி நாம் தோண்டித் தோண்டிப் பார்த்துக்கொண்டே போனால் - தியானம் பண்ணுவது, தத்துவ விசாரணை பண்ணுவது என்று இப்படியே செய்துகொண்டு போனால் - அநேக தத்துவங்கள் தோன்றிக்கொண்டே இருக்கும். அதற்கு முடிவே இராது.

இதற்கு ஏதாவது திருஷ்டாந்தமாகச் சொல்ல வேண்டுமானால் காவியங்களைப்பற்றி ஒரு கவி சொன்னதைச் சொல்லலாம்.

पश्येयमेकस्य कवेः कृतिं चेत् सारस्वतं कोशमवैमि रिक्तम् ।
अन्तः प्रविश्यायमवेक्षितश्चेत् कोणे प्रविष्टा कविकोटिरेषा ॥

பஶ்யேயமேகஸ்ய கவே: க்ருதிம் சேத் ஸாரஸ்வதம்
கோஶமவைமி ரிக்தம் |
அந்த: ப்ரவிஶ்யாயமவேக்ஷிதஶ்சேத் கோணே
ப்ரவிஷ்டா கவிகோடிரேஷா ||

நிறையக் காவியங்கள் இருக்கலாம்: எல்லாவற்றையும் படிக்கவேண்டும் என்பது இல்லை: ஒரு மகாகவி பண்ணிய காவி

யத்தை முழுவதும் படித்துவிட்டால் இதைத் தவிரச் சரஸ்வதியினுடைய ஆபரணம், அலங்காரப் பொருள் வேறு என்ன இன்னொரு கவியினிடத்தில் இருக்கப் போகிறது என்று தோன்றிவிடும். கம்பனுடைய காவியம் ஒன்றைப் படித்துவிட்டால் போதும். அப்படித்தான் தோன்றிவிடும். 'சரஸ்வதியின் பொக்கிஷத்தில் இருக்கிற ஆபரணங்கள் எல்லாவற்றையும் இவர்தாம் இந்தக் காவியத்தில் கொண்டுவந்து கொட்டிவிட்டாரே. இனி அவளுடைய பொக்கிஷம் காலியாகத்தான் கிடக்கும்' என்று தோன்றிவிடும்.

सारस्वतं कोशमवैमि रिक्तम् ।

ஸாரஸ்வதம் கோஶமவைமி ரிக்தம் |

'கோஶம்' என்றால் பொக்கிஷம். 'இந்தக் காவியத்தில்தான் அந்தப் பொக்கிஷத்தில் இருக்கும்படியான பொருள்கள் எல்லாம் வந்துவிட்டனவே. இனி அங்கே என்ன இருக்கப் போகிறது?' என்று நினைத்து அவளுடைய பொக்கிஷத்தைப் போய்ப் பார்க்கலாம் என்று போனால் அங்கே எப்படி இருக்கிறது?

अन्तः पविश्यायमवेक्षितश्चेत् कोणे प्रविष्टा कविकोटिरेषा ।

அந்த: ப்ரவிஶ்யாயமவேக்ஷிதஶ்சேத் கோணே ப்ரவிஷ்டா
கவிகோடிரேஷா |

அவளுடைய அறையில் போய்ப் பார்த்தால் இந்த ஒரு கவியினுடைய காவிய ரத்தினங்கள் மாத்திரம் அல்ல; அநேக கவிகளுடைய காவிய ரத்தினங்கள் எல்லாம் எங்கோ மூலையில் கிடக்கின்றன. இவற்றைத் தவிர அந்தப் பொக்கிஷத்தில் இன்னும் எத்தனை எத்தனையோ விதமான காவிய ரத்தினங்கள் சிதறிக் கிடக்கின்றன.

இப்படி ஒரு கவி சொன்னார்: அதைப்போலத்தான் ஒரு மூர்த்தியின் ஸ்வரூப தத்துவத்தை நாம் ஆராய்ந்து பார்க்கிற போது, ஸ்வரூபத்தைத் தியானம் பண்ணி, அநுசந்தானம் பண்ணி அதில் இவ்வளவுதான் தத்துவம் அடங்கியிருக்கிறது என்று திட்டமாகக் கணக்குப்பண்ணிச் சொல்லிவிட முடியாது. நம் கையில் பஞ்சபாத்திர உத்தரணியை எடுத்துக்கொண்டு போய்க் கடல்நீரை எடுத்து வருகிறோம். அது கடல்நீர்தான் என்றாலும், கடல்நீர் முழுவதையுமா எடுத்து வந்துவிட்டோம்? அப்படியே நம்முடைய அறிவுக்கும் சுவாநுபவத்துக்கும் தட்டுப் பட்டவரையில் சில தத்துவங்களைச் சொல்கிறோம். இவ்வளவுதான் அந்த மூர்த்தியின் தத்துவம் என்று சொல்லிவிட முடியாது. நாம் கண்டதோ அங்கே இருப்பதில் ஒரு மூலை.

அநாதி காலம் தொட்டு விநாயக ஸ்வரூபம் நமக்கு அநுக்கிரகம் பண்ணிக்கொண்டு வருகிறது. எந்தச் சுவாமியை உபாசிப்பதானாலும் முதலில் விநாயகருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டால்தான் அந்தக் காரியம் விக்கினம் இல்லாமல் நடைபெறும். பெருமாள் கோயிலுக்குப் போனாலும் தும்பிக்கையாழ்வார் என்று ஒருவர் இருக்கிறார். அம்பாள் கோயிலுக்குப் போனாலும், சிவன் கோயிலுக்குப் போனாலும் விநாயகர் இருக்கிறார். நம் தேசத்தில் ஒவ்வொரு தெருக் கோடியிலும் விநாயகர் இருக்கிறார். அவரை உபாசனை பண்ணினால் எல்லா விதமான அநுக்கிரகமும் ஏற்பட்டுவிடும். அப்புறம் வேறு சுவாமியிடமே போக வேண்டாம். அவரையே பிரதான மூர்த்தியாக வைத்து உபாசிக்கிற மதத்திற்குத்தான் காணுபத்தியம் என்று பெயர்.

பிள்ளையாருக்கு எதிரே நின்று தோப்பிக்கரணம் போடுகிறோமே, அதை நமக்கு எல்லாம் காட்டியவர் மகாவிஷ்ணுதான் என்று ஒரு கதை இருக்கிறது. ஒரு சமயம் மகாவிஷ்ணுவினுடைய சக்கரத்தைப் பிடுங்கிக்கொண்டு அவர் மருமான் பிள்ளையரர் தம் வாயில் போட்டுக்கொண்டு விட்டாராம். பிள்ளையாரிடமிருந்து பிடுங்குவது என்றால் அது முடியாது. அவர் மிகவும் பலம் உடையவர். அதட்டி மிரட்டி வாங்கவும் முடியாது. ஆனால் அவரைச் சிரிக்கவைத்துச் சந்தோஷத்தில் அவர் வாயிலிருந்து அது கீழே விழுந்தால் எடுத்துக்கொண்டு ஓடிவிடலாம் என்று மகாவிஷ்ணுவுக்குத் தோன்றியதாம். உடனே நான்கு கைகளாலும் காதுகளைப் பிடித்துக்கொண்டு ஆடினாராம். விநாயகர் விழுந்து விழுந்து சிரித்தார். சக்கரம் கீழே விழுந்தது. எடுத்துக்கொண்டு விஷ்ணு ஓடிவிட்டார். இதுதான் அந்தக் கதை.

தோர்பி: கரணம் என்பதே தோப்பிக்கரணம் என்று மாறியது. தோர்பி: நான்கு கைகளினால் என்று அர்த்தம். கரணம் என்றால் காது என்று அர்த்தம். தோர்பி: கரணம் என்றால் நான்கு கைகளால் காதைப் பிடித்துக்கொள்வது.

விக்கினேசுவரருடைய அநுக்கிரகத்தினால் லோகத்தில் எல்லாக் காரியங்களும் விக்கினம் இல்லாமல் நடைபெறுகின்றன. தியாகையரவர்கள் ''கிரிராஜஸுதாதனய'' என்று அவரைத்தான் முதலில் பாடுகிறார். நாமும் அவருடைய அநுக்கிரகத்துக்குப் பாத்திரமாகும்படியாக நடந்துகொள்ள வேண்டும்.

# 6
# தக்ஷிணாமூர்த்தி

தக்ஷிணாமூர்த்தியின் ஸ்வரூபத்தை மகரிஷிகள் எல்லாரும் பிரத்தியட்சமாகத் தரிசனம் பண்ணுகிற காலத்தில் அந்தத் தக்ஷிணாமூர்த்தியின் ஸ்வரூபத்தைப்பற்றிச் சொன்ன தாக ஒரு சுலோகம் இருக்கிறது. அது பரம்பரை பரம்பரை யாகப் பெரியவர்கள் நாளிலே யிருந்து வந்துகொண் டிருக் கிறது.

चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्याः गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥

சித்ரம் வடதரோர்மூலே வ்ருத்தா: ஶிஷ்யா: குருர்யுவா |

குரோஸ்து மௌநம் வ்யாக்யாநம் ஶிஷ்யாஸ்து சிந்நஸம்ஶயா: ||

என்பதுதான் அந்தச் சுலோகம்.

ஓர் ஆலமரத்தடியில் சின்முத்திரையைக் காட்டிக்கொண்டு மௌனமாக உட்கார்ந்திருக்கிறார் குரு. சிஷ்யர்கள் எல்லாரும் சுற்றி உட்கார்ந்திருக்கிறார்கள். ஒவ்வொரு சிவன் கோயிலிலும் தக்ஷிணாமூர்த்தி என்கிறவர் தென்னண்டைப் பிராகாரத்தில் சுவரிலேயே இருக்கும் ஒரு புரையில் தெற்கே பார்த்துக் கொண்டு எப்பொழுதும் அமர்ந்து இருப்பதைப் பார்க்கலாம். எல்லா மூர்த்திகளைக் காட்டிலும் சாந்தமான மூர்த்தி தட்சிணா மூர்த்தி. பைரவர் மிகவும் உக்கிரமான மூர்த்தி. நடராஜா ஆனந்தமான மூர்த்தி. பிக்ஷாடனர் மிகவும் வசிகரமான மூர்த்தி. சோமாஸ்கந்தர் கருணை நிரம்பிய மூர்த்தி.

ஈசுவரன் ஜடைகளை விரித்துக்கொண்டு நர்த்தனமாடுகிற சமயத்தில் ஜடைகள் எல்லாம் ஒரு சுற்றுச் சுற்றிக்கொண்டு

வேகத்தில் அப்படியே நேராக நிற்கும். நடராஜ விக்கிரகத்தில் பார்த்தால் தெரியும். ஜடைகள் எல்லாம் இப்படி இரண்டு பக்கம் நேராக நீட்டிக்கொண் டிருக்கும்படியாக இருக்கும். காரணம், அவர் நடனத்தில் அவ்வளவு வேகம்.

ஆனால் சாந்தமாக ஆலமரத்தடியில் அவர் உட்கார்ந் திருக்கும்போது அந்த ஜடைகள் எல்லாம் அப்படியே கீழே தொங்கிக்கொண்டு ஒரு ஜடாமண்டலமாக இருக்கின்றன. தாமே அப்படியே அமைந்து தொங்கி மூடிக்கொண் டிருக் கின்றன. அதிலே ஒரு சந்திர கலை. அதுதான் ஞானத்தின் கலை. ஞானம் என்றால் மேலே மேலே வளர்ந்துகொண்டே இருக்க வேண்டும் என்பதற்கு அடையாளமாக மூன்றாம் பிறைச் சந்திரனைச் சிரசில் தரித்துக்கொண் டிருக்கிறார். ஜடாமண்டலம் எல்லாம் கீழே தொங்க, அதில் மூன்றாம் பிறைச் சந்திரன் பிரகாசிக்க, ஓர் ஆலமரத்தடியில் மிகவும் சாந்தமாக அமர்ந்திருக்கும் மூர்த்தி தக்ஷிணமூர்த்தி. அந்த ஶாந்த மூர்த்தியைப் பார்த்தவுட னேயே நமக்கும் தானாகவே சாந்தம் வந்துவிடும். கோபமாக இருக்கிற ஒருவனைப் பார்த்தால் நமக்கும் கோபம் வந்துவிடு கிறது. கெட்ட எண்ணம் உடையவனோடு சேர்க்கை வைத்துக் கொள்ளும்போது நமக்கும் கெட்ட எண்ணம் வந்துவிடுகிறது. கோபம், கெட்ட எண்ணம் எல்லாவற்றுடனும் நாம் தென்னண் டைப் பிராகாரத்திற்கு வந்து, சாந்தமாக இருக்கும்படியான தக்ஷிணமூர்த்தியைத் தரிசனம் பண்ணும்போது, நமக்கும் சாந்தம் வந்துவிடுகிறது. மனோவேகம் இல்லாமல் சாந்தமாகக் கொஞ்சம் உட்கார்ந்துவிட்டுப் போ என்று சொல்வதுபோல அவர் சாந்தமாக உட்கார்ந்துகொண் டிருக்கிறார். அங்கே கேள்வி கேட்க வேண்டாம். பதில் சொல்ல வேண்டாம். சந்தேக நிவிருத்தி வேண்டாம். பேசாமல், மௌனமாக, சாந்தமாக நாமும் அங்கே உட்கார்ந்துவிட வேண்டியதுதான்.

சிவன் கோயில்களுக்குப் போய்ப் பார்த்தால் தெரியும்: தென்னண்டைப் பிராகாரத்தில் இருக்கும் ஒரு புரையில் தெற்குப் பார்த்துக்கொண்டு அவர் உட்கார்ந்திருப்பார். ஒரு சித்திரம் போல இருக்கும். ஜடை நிறைய இருக்கும். ஓர் ஆலமரம் கருங்கல்லால் செதுக்கி வைத்திருப்பார்கள். அந்த ஆலமரத் தடியில் அவர் உட்கார்ந்திருப்பார். அவரைச் சுற்றி எலும்புக்கூடுபோலச் சில ரிஷிகள் இருப்பார்கள். உடலோடு உடலாகத் தோல் ஒட்டிக்கொண் டிருக்கும்படியாக அந்த ரிஷிகளின் உருவம் இருக்கும். அநேக ஊர்களில் நான்கு ரிஷிகள் இருப்பார்கள். காஞ்சி மண்டலத்தில் மாத்திரம் சப்த ரிஷிகள் இருப்பதாக வைத்திருக்கிறார்கள்.

அந்த ரிஷிகள் எத்தனை யுக யுகாந்தரங்களாகத் தபஸ் பண்ணிக்கொண் டிருக்கிறார்களோ தெரியாது. அவர்கள் சரீரத்தில் எலும்புதான் இருக்கிறது.

கிருதயுகத்திலே அஸ்தி இருக்கிறவரைக்கும் ஆயுசு இருக்கும் என்று சொல்வார்கள். அத்தகையவர்கள் அஸ்திகதப் பிராணர்கள். அடுத்த யுகத்தில் மாமிசகதப் பிராணர்கள்; மாமிசம் இருக்கிற வரைக்கும் அவர்களுடைய பிராணன் இருக்கும். பிறகு ருதிரகதப் பிராணர்கள்; உடம்பில் ருதிரம் அதாவது இரத்தம் எதுவரையில் இருக்குமோ அதுவரையில் ஆயுசு உடையவர்கள். இந்தக் காலத்தில் உள்ளவர்கள் அன்னகதப் பிராணர்கள்; அன்னம் உள்ள வரையில்தான் ஆயுசு உடையவர்கள்.

கிருதயுகத்தில், அஸ்தி உள்ள நாள்வரைக்கும் தபஸ் பண்ணிக்கொண்டே இருப்பார்கள். அந்த யுகத்தில், ப்ருகு என்பவர் தம்முடைய பிதாவான வருணனிடத்தில் போய், ''நிறைந்த வஸ்து எதுவோ அதை எப்படி அறிவது?'' என்று கேட்டாராம். ''ப்ரஹ்மம் என்பதுதான் நிறைந்த வஸ்து. நிறைந்த வஸ்து எதுவோ அது காலத்தாலும் நிறைந்து இருக்கவேண்டும். தேசத்தாலும் நிறைந்து இருக்கவேண்டும். வஸ்துவிலும் நிறைந்து ஒரு குறை என்பதே இல்லாமல் இருக்கவேண்டும். அத்தகைய நிறைந்த வஸ்துவை எனக்குச் சொல்லவேண்டும்'' என்று போய்ப் பிதாவான வருணனிடத்தில் கேட்டாராம்.

''நீ போய், தபஸ் பண்ணு. அது உனக்கே தெரியும்'' என்று அவர் சொல்லிவிட்டார்.

''அப்படியா? நான் அப்படியே செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவர் போய்த் தபஸ் பண்ண ஆரம்பித்தார். அதனால் அவருக்கு ஒன்று தெரிந்தது. 'இந்தச் சரீரந்தான் உயர்ந்த வஸ்து. இதுதான் எல்லாவற்றையும் அறிகிறது. அறியப்படுகிற பொருளைக் காட்டிலும் அறிந்துகொள்கிற பொருள் உயர்ந்தது. அது இந்தத் தேகந்தான்' என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு அப்பாவிடம் போய், ''இந்தச் சரீரந்தான் உயர்ந்த நிறைந்த வஸ்து'' என்று சொன்னாராம்.

அவர் திரும்பவும், ''இன்னும் கொஞ்சம் தபஸ் பண்ணு'' என்று சொல்லிவிட்டாராம்.

இப்படியே கொஞ்சம் தபஸ் பண்ணுவது, உடனே தமக்குத் தோன்றியதைப் போய்ச் சொல்வது என்று ஐந்து தடவைகள் ப்ருகு செய்தாராம். தந்தையும் ஒவ்வொரு தடவையும், ''இன்னும் கொஞ்சம் தபஸ் பண்ணு'' என்று சொல்லியே அனுப்பிவிட்டார். கடைசியாகப் போனபோதுதான், ''நீங்கள் சொன்ன

படி நான் இத்தனை நாளாகத் தபஸ் பண்ணினேன். இப்போ தெல்லாம் இடையில் ஏதோ ஒருவிதமான ஆனந்தம் ஸ்புரிக் கிறதே. இது என்ன?'' என்று தந்தையைக் கேட்டாராம்.

''உனக்கு ஒவ்வொரு சமயத்தில் ஆனந்தம் ஸ்புரிக்கிறது என்று சொல்கிருயே. அந்த ஆனந்தந்தான் நிறைந்த வஸ்து. இது உனக்குத் துளித் துளி உண்டாகிறது. இதுவே நிறைந்து விட்டதானல் அதைத்தான் பேரானந்தம் என்கிறேம். அந்தப் பேரானந்தந்தான் எப்போதும் குறைவு இல்லாத, காலத் திலுைம் தேசத்திலுைம் நிறைந்து இருக்கும்படியான வஸ்து'' என்று பிதா சொன்ஞராம். இப்படி ஒரு கதை இருக்கிறது.

அந்தப் பேரானந்த சமுத்திரத்தின் ஏதோ ஒரு திவலைதான் நமக்கு எப்போதாவது உண்டாகிறது. கிளைகள், இலைகள் எல் லாம் அடர்ந்து இருக்கும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தால் கீழே கொஞ்சங்கூட வெயில் படாமல் நிழல் இருக்கிறது. கொஞ்சம் காற்று அடிக்கும்போது இலைகள், கிளைகள் நகர்ந்து விலகுகிற சமயத்தில் சூரியனுடைய வெயில் கீழே அந்த இடை வெளி அளவுக்கு விழுகிறது. அப்புறம் மறுபடியும் அது மறைந்துவிடுகிறது. அந்த மாதிரியாகத்தான் நமக்கு ஆனந்தம் வருகிறது. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூர்ணமாக நிறைந் திருக்கும்படியான வஸ்து. ஆனல் நம்முடைய கெட்ட கர்மா, மனம், புத்தி இவற்றிஞல் அது கொஞ்சங்கூட நம்மிடத்தில் படாமல் மறைந்திருக்கிறது. ஒரு க்ஷணம் நாம் பண்ணியிருக்கிற புண்ணிய கர்மாக்களிஞலே அவை விலகும்போது, காற்று அடித்து இலைகள் விலகும்போது சூரியன் ஒளி அதன் வழியாக வருவதுபோல, நம்முடைய கர்மாக்கள் விலகியதால் திவலை ஆனந்தம் நமக்கு உண்டாகிறது. இதுவே வளர்ந்துவிட்டால் பேரானந்தமாகிறது. அந்தப் பேரானந்த சமுத்திரம் இருக்கிறதே, அதுதான் பெரிது. அந்த ஆனந்த சமுத்திரத்தின் லேசத்தைத் தான், நாம் எப்போதாவது அடைந்தவுடன் மிகவும் ஆனந்த மாக இருக்கிறேம் என்று சொல்லிக்கொள்கிறேம். தபஸ் பண்ணிப் பண்ணி விசாரம் செய்தால் எப்போதும் ஆனந்த மயமாக இருக்கும் சமுத்திரத்திலேயே கலந்துவிட முடியும் என்று அநுபவிகள் சொல்கிருர்கள்.

அந்தத் தபஸ்விகள் எல்லாம் இதற்காகத்தான் எத்த னையோ காலமாகத் தவம் பண்ணிக்கொண் டிருக்கிருர்கள். உடம்பில் சதையே இல்லை. எலும்புகளே இருக்கின்றன. அந்த மகரிஷிகள் எலும்புக் கூடுகளாக இருந்துகொண் டிருக்கிருர்கள்.

வெறும் எலும்பு மாத்திரம் உள்ளவர்களாகத் தபஸ் பண்ணிக்கொண்டிருந்த மகரிஷிகள் கடைசியாக எந்த ஆனந்த சாந்த ஸ்வரூபத்திடம் வந்தார்கள்? சாக்ஷாத் ஈசுவரர் தக்ஷிணா மூர்த்தியாக ஆலமரத்தடியில் உட்கார்ந்து ஞானப் பிரதானம் செய்துகொண்டிருக்கிறாரே, அவரிடம் வந்தார்கள். இவ்வளவு நாட்கள் தபஸ் பண்ணினதன் பயனாக அவர்களுக்குத் தக்ஷிணா மூர்த்தி உருவம் கண்ணில் பட்டது.

''என்ன சாந்தம்! என்ன ஆனந்தம்!'' என்று அப்படியே அவர்களும் சாந்த ஸ்வரூபிகளாக, ஆனந்த அநுபவத்தில் ஈடு பட்டு இருந்துவிட்டார்கள்.

நடராஜர் தாண்டவம் பொங்குகிற ஆனந்தம். பொங்கினால் அடங்கத்தானே வேண்டும்? அடங்கின பிறகு பொங்குவது என்பது இல்லை. நெருப்பில் எரிந்து நன்றாகப் போய்விட்டால், திரும்பவும் அந்த நீற்றை நெருப்பில் போட்டால் என்ன ஆகும்? நீறாகவேதான் இருக்கும். அப்படி நடராஜாவின் பொங்குகிற ஆனந்தம் அடங்கலாம். நரசிம்ம சுவாமியின் பொங்குகிற கோபம் அடங்கலாம். தக்ஷிணாமூர்த்தியின் சாந்தம் அடங்கின சாந்தம். அவர் ஆனந்தம் அடங்கின ஆனந்தம். அதற்கு மேலே ஒன்றும் இல்லை. எல்லாம் முடிகிற இடந்தான் சாந்தம் என்பது; அடங்குகிற இடம் சாந்தம். அந்த எல்லை இல்லாத சாந்தமயமான உருவத்தைத் தரிசனம் பண்ணினால் போதும். எத்தனை பொங்குகிற உள்ளமாக இருந்தாலும் சாந்தமாக அடங்கி விடும். இப்படிப்பட்ட கருத்துக்களை இந்தச் சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

चित्रं वटतरोर्मूले

சித்ரம் வடதரோர்மூலே

வடதரு என்றால் ஆலமரம். 'ஆலமரத்தடியில் என்ன சித்ரம்!' என்று அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். சித்ரம் என்றால் ஆச்சரியம்.

குரு என்றால் நல்ல அநுபவம் உடையவராக, முதிர்ந்த கிழவராக இருப்பார். சிஷ்யர்கள் இளமை உடையவர்களாக யௌவனமுள்ளவர்களாக இருப்பார்கள். ஆனால் இங்கே சிஷ்யர்கள் எப்படி இருக்கிறார்கள்?

वृद्धाः शिष्याः

விருத்தா: ஶிஷ்யா:

சிஷ்யர்கள் விருத்தர்களாக, கிழவர்களாக இருக்கிறார்கள். தலைகளெல்லாம் நரைத்துக் கிடக்கின்றன. உடலிலே சதையே

இல்லை. எலும்புதான் இருக்கிறது. மிகவும் வயசான கிழவர்கள். எத்தனை வயசு அவர்களுக்கு இருக்கும் என்று சொல்ல முடியாத தொண்டு கிழவர்களாக, எலும்போடு கூடியவர்களாக இருக்கிறார்கள். எத்தனை காலமாக அவர்கள் இப்படித் தபஸ் செய்துகொண் டிருக்கிறார்கள் என்றே சொல்ல முடியாத விருத்தாப்பியர்களாக இருக்கிறார்கள். ஆனால் குரு எப்படி இருக்கிறார்?'

### गुरुर्युवा

#### குருர்யுவா

குருவோ நல்ல யௌவன வயசு உடையவராக, என்றும் பதினாறு வயசு உடையவரைப் போலவே இளமை மாறாமல், மிகவும் சாந்தத்தோடு கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். சிஷ்யர்கள் கிழவர்கள்; குருவோ யௌவன தசை உள்ளவர். இது ஆச்சரியம் அல்லவா?

கிழவர்கள் இந்த யௌவன வாலிபனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதா? இந்த யௌவன வாலிபனிடத்தில் கிழவர்கள் பாடம் கற்பதா? 'சரி. ஒருகால் இந்தக் கிழவர்கள் படிக்காதவர்களாக இருந்திருக்கக்கூடும். சின்னப் பையனாக இவன் இருந்தாலும் நிரம்பப் படித்தவன் போல் இருக்கிறது! அதனால்தான் இவனிடத்தில் அவர்கள் பாடம் படிக்க வந்திருக்கிறார்கள்' என்று வைத்துக்கொள்வோம். பாடம் சொல்லிக் கொடுப்பது எப்படி? ஞானம் வரவேண்டுமென்றால் ஒவ்வொரு தத்துவத்தையும் எடுத்து அலசி அலசிப் பார்த்து உண்மையைச் சொன்னால் அல்லவா சிஷ்யர்களுக்கு வித்தை வரும்? ஞானம் உண்டாகும்? இந்தக் குரு எப்படிச் சொல்லிக்கொடுக்கிறார்?

### गुरोस्तु मौनं व्याख्यानम्

#### குரோஸ்து மௌநம் வியாக்யாநம்

குரு வாயை மூடிக்கொண் டிருக்கிறார். மௌனந்தான் அவருடைய உபந்நியாசம். வியாக்யாநம் என்றால் வடநாட்டில், உபந்நியாசம், 'லெக்சர்' என்று அர்த்தம்.

ஒரே சம்ஸ்கிருத பதந்தான் என்றாலும் ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வோர் அர்த்தம் இருக்கும். சில இடங்களில் சம்ஸ்கிருத அர்த்தத்துக்கே மாறான அர்த்தமாகக்கூட இருக்கும். உதாரணமாக, வ்ருத்தி என்றால் நம் தேசத்தில் ஜீவனத்திற்குப் பெயர். ஆனால் மலையாளத்தில் வ்ருத்தி என்றால் சுத்தம் என்று அர்த்தம். சுத்தம் இல்லாமல், ஆசாரம் இல்லாமல் ஒருத்தன் இருந்தால், 'சீ, அது வ்ருத்தி கெட்ட சனியன்' என்று அங்கே சொல்வார்கள். அப்படித்தான் வியாக்யாநம் என்றால் இங்கே உரை

என்று அர்த்தம். வடக்கே 'வியாக்யாந் தேதா ஹை' (व्याख्यान देता है) என்றால், உபந்நியாசம் பண்ணுகிறான் என்று அர்த்தம். ஆனால் வடக்கே உபந்நியாசம் என்றால் நாவல் என்று அர்த்தம். 'உபந்யாஸ் லிக்தா ஹை' (उपन्यास लिखता है) என்றுதான் சொல்வார்கள். நாவல் எழுதிக்கொண்டிருக்கிறான் என்று அர்த்தம். இப்படி ஒவ்வொரு சொல்லுக்கு ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வோர் அர்த்தம் இருக்கிறது.

இங்கே வியாக்யாநம் என்றால் உபந்நியாசம் என்று அர்த்தம். குரு என்ன 'லெக்சர்' செய்கிறார்?

गुरोस्तु मौनं व्याख्यानम्

குரோஸ்து மௌநம் வியாக்யாநம்

குரு மௌன லெக்சர் செய்கிறார். ஒன்றுமே பேசாமல் மௌனமாக, சாந்தமாக உட்கார்ந்திருக்கிறார். சாந்தமாகி விட்டால் அப்புறம் மௌனந்தானே? அவர் சாந்தமாக மௌனமாக உட்கார்ந்துகொண் டிருப்பதே மற்றவர்களுக்குப் பெரிய உபதேசமாக இருக்கிறது. வாய் திறந்தால் சந்தேகம் அதிகமாக உண்டாகிவிடும். அவர் வாய்மூடிக்கொண்டு மௌனியாக உட்கார்ந்துவிட்டார்.

என்ன என்னவோ சந்தேகங்களை அவர்கள் எழுப்பிக் கொண்டு வந்தார்களே, அவை எல்லாம் அந்தச் சாந்த ஸ்வரூபத்தைக் கண்டவுடனே நிவிருத்தியாகி அப்படியே மௌனிகளாக உட்கார்ந்துவிட்டார்கள். ஒரு கேள்வி கேட்கவில்லை. ஒரு பதில் இல்லை. நிறைந்த ஆனந்தம், சாந்தந்தான் எல்லாச் சந்தேகத்தையும் நிவிருத்தி செய்துவிடும். ஒன்றையும் கேட்காமல் அப்படியே சாந்தமாக, அந்தச் சாந்த ஸ்வரூபியைக் கண்டவுடன் அவர்கள் நின்றுவிட்டார்கள். இத்தனை நாள் தபஸ் பண்ணின தன் பலனாக அவர்களுக்கு இப்போதுதான் இந்தத் தரிசனம் கிடைத்தது. இந்த ஆனந்தம், இந்தச் சாந்தம் எல்லாம் உண்டாயிற்று.

நாம்கூடக் கிழவர்களாகப் போகாமல் யௌவனமாக எப்போதும் இருக்கலாம். ஆனால் அப்படி இருக்க வேண்டுமென்றால் ஒன்றைப்பற்றியும் நினைக்காமல், ஒரு செயலும் இல்லாமல், எப்போதும் சாந்தமாக, ஆனந்தமாக இருக்க வேண்டும். ஆனால் நம்மை அப்படி ஒரு க்ஷணங்கூட இருக்கவிடாமல் உள்ளே ஏதோ ஒன்று அரித்துக்கொண்டே இருக்கிறது. கருணைக்கிழங்கைத் தின்றால் தொண்டையை அரித்துக்கொண்டே இருக்குமே! அப்படியே ஏதோ ஒரு கவலை, ஏதோ ஒரு துக்கம் நம் மனசைப் போட்டு எப்போதும் அரித்துக்கொண்டே இருக்கிறது. அதனால்

தான் கிழவர்கள் ஆகிவிடுகிருேம். கவலே இல்லாமல் இருந்திருந் தால் நாம் கிழவர் ஆகாமலேயே இருந்திருக்கலாம்.

மனசு அப்புறம் இப்புறம் அசையாமல் இருக்க வேண்டு மென்ருல் ஒரு காரியமும் இல்லாமல் இருக்க வேண்டும். மனசு குறை இல்லாமல் ஆனந்தத்திலே நிரம்பியிருந்தால்தான் அது முடியும். நமக்கு நிறையக் குறை இருப்பதனுல் நம் மனசு நிரம்ப வேலே செய்கிறது; கவலேப்படுகிறது. அதனுல் பல பல அவஸ்தைகள் மாறி மாறி வருகின்றன; அதனுல் கிழத்தன்மை வந்துவிடுகிறது.

ஸாக்ஷாத் பரமேசுவரர் ஒரு காரியமும் இல்லாது, அசை யாத மனத்தோடு கண்ணே மூடிக்கொண்டு சாந்தமாக, ஆனந்த நிலேயிலே அமர்ந்துவிட்டார். அவருக்கு யௌவனம் எப் போதும் மாருமல் இருக்கிறது. புஷ்டியான யௌவன உடம் பாதலால் சிகை வளர்ந்து அப்படியே ஜடையாக விழுந்து கிடக் கிறது. எத்தனேயோ யுகாந்தரமாக அவர் அப்படி உட்கார்ந் திருக்கிருர். நமக்கு எப்போதும் அப்படிப்பட்ட யௌவன அழகு நிரம்பியிருக்கவில்லேயே என்ருல் நம்மால் கொஞ்சங்கூட மனசு சலிக்காமல், வேலே செய்யாமல் இருக்க முடியவில்லேயே! ஆசையினுல்தான் மனம் சலிக்கிறது. மனக்கிளர்ச்சியினுல் கிழத் தன்மை வந்துவிடுகிறது. தக்ஷிணுமூர்த்தி நிறைந்த சாந்த ஸ்வரூபர். அவருக்கு வேண்டியதென்று ஒன்றும் இல்லே. அத ஞல் ஒரு காரியமும் இல்லாமல், மனசு சலிக்காமல் சாந்தமுள்ள வராக அவர் காணப்படுகிருர். காலம், தேசம் என்ற வரை யறையின்றி எப்போதும் பரிபூர்ணமான அழகு நிரம்பியவராக இளமையுடனேயே இருக்கிருர். அவரை இந்தத் தபஸ்விகள் தரிசனம் பண்ணின மாத்திரத்திலே ஆனந்தம் நிரம்பியவர் களாக, சாந்தம் அடைந்தவர்களாக அப்படியே நின்றுவிட்டார் கள். ஒரு கேள்வி இல்லே. அவரும் ஒரு வார்த்தை பேசவில்லே. தம்முடைய சாந்தமான, ஆனந்தமான நிலேயை உபதேசமாகச் செய்துகொண்டு மௌனமாக அவர் இருக்கிருர். அவருடைய மௌனமே ஒரு பெரிய உபதேசமாகிவிட்டது.

शिष्यास्तु छिन्नसंशयाः ।

சிஷ்யாஸ்து சிந்நஸம்ஶயா: |

சிஷ்யர்களோ, குருவை ஒரு கேள்வி கேட்காமல் அவர் காட்டுகிற சின்முத்திரையினுலேயே சந்தேகம் நிவிருத்தியான வர்களாக, சாந்தம் நிரம்பியவர்களாக, ஆனந்தம் உண்டான வர்களாக அப்படியே இருந்துவிட்டார்கள்.

குறையில்லாத வஸ்து ஒன்றுதான் மற்றவர்களுடைய குறையை நிவிருத்தி செய்யும். இந்த மகரிஷிகளுடைய சந்தேகத்தை நிவிருத்தி செய்யவேண்டும் என்ற எண்ணம் தக்ஷிணாமூர்த்திக்கு இருந்தது என்றால்கூட அது அவருக்கு ஒரு காரியம், ஒரு வேலை ஆகும். அந்த நினைவுகூட இல்லாமல் தம் உள்ளத்தின் அநுபவமான முத்திரை தானே அமைய அவர் உட்கார்ந்திருக்கிறார். 'எல்லாம் ஒன்றுதான். இரண்டு என்று நினைப்பதெல்லாம் ஒன்றுதான்' என்ற அவருடைய அநுபவம் தானே அவர் கையில் சின்முத்திரையாக அமைந்துவிட்டது. அப்படி வைத்துக்கொள்ள வேண்டுமென்று எண்ணி அவர் வைத்துக் கொள்ளவில்லை.

நமக்குக் கோப அநுபவம் வந்துவிட்டால் தெரிகிறது. நம் கண் சிவந்துபோய் மீசை துடிக்கிறது. இது வேண்டுமென்றே செய்யவில்லை. இன்னொருத்தனுக்காகவும் செய்வது இல்லை. உள்ளே எந்த அநுபவம் உண்டாகிறதோ அது தானே வெளியில் தெரிந்துவிடும். அந்த மாதிரி, சாந்த ஆனந்தத்தோடு இருக்கிற தக்ஷிணாமூர்த்தியின் சுவாநுபவமாகக் கையில் இந்த முத்திரை தானே அமைந்திருக்கிறது.

பெரிய விரலுக்குக் கட்டைவிரல் என்று பெயர். அங்குஷ்டம் என்பார்கள். ஹ்ருதயத்தில் ஈசுவரன் 'அங்குஷ்டமாத்ரேண' அங்குஷ்ட அளவில் இருக்கிறான் என்று உபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. ஒவ்வொருத்தர் ஹ்ருதயத்தில் இந்த அளவு இருக்கிறது. ஹ்ருதயத்தில் ஆகாசம் இருக்கிறது. அது ஹ்ருதயாகாசம். வெளியில் இருப்பது அகண்டாகாசம். உள்ளே இருக்கும்படியான வஸ்துவே இந்த அகண்டாகாசம் முழுவதும் வியாபித்திருக்கிறது. உள்ளே அது அங்குஷ்டப் பிரமாணமாக இருக்கிறது. இந்தக் கட்டைவிரல் உள்ளே இருப்பவரைக் காட்டுகிறது.

சுட்டுவிரலுக்கு ஆள்காட்டி விரல் என்று பெயர். 'சுவாமி எங்கே இருக்கிறார்?' என்றால் 'அதோ இருக்கிறார்' என்று காட்டுகிற விரல் இது. வெகு தூரத்தில் இருக்கிற பெரிய ஆளை - பெருமானைக் காட்டுகிற விரல் இந்த ஆள்காட்டி விரல். 'உள்ளே இருக்கிறது வேறே, வெளியில் இருக்கிறது வேறே; இது வெவ்வேறான இரண்டு வஸ்து என்று நினைத்துக்கொள்ளாதே. இரண்டும் ஒன்றுதான்' என்ற தம்முடைய சொந்த அநுபவத்தை இப்படி இந்த இரண்டு விரலும் தானாகச் சேர்ந்து அமைந்த சின்முத்திரையினால் தக்ஷிணாமூர்த்தி விளக்கிக்கொண்டிருக்கிறார்.

ஆலமரத்தடியில் இப்படிக் காட்டிக்கொண்டு அவர் மெளனமாக, 'என் அநுபவத்தையே கண்டுகொள்ளுங்கள்' என்பதுபோல உபதேசம் செய்யாமல் செய்கிறார்.

ஆலமரத்தின் கீழ் இவரும் ஆலமரம்போல இருக்கிறார். ஆலமரம் என்றால் விழுதுகள் இருக்கும். அதுபோல இந்தப் பழுத்த ஆலமரத்தில் ஜடைகள் விழுது விழுதாக வளர்ந்து தொங்குகின்றன. அநாதியான தத்துவத்திற்கு இது அறிகுறி. ஆலமரம் என்றால் பால் இருக்கும். இவர் முகத்தில் பால் வடிகிறது. யெளவன அழகு, சாந்தமான ஆனந்த அழகு வடிந்துகொண்டிருக்கிறது. விருத்தர்களான சிஷ்யர்களோ இந்தத் தக்ஷிணாமூர்த்தியைச் சுற்றி எலும்புக்கூடுபோல நிற்கிறார்கள். இதைத்தான் அந்தச் சுலோகம் அப்படியே படம் பிடித்தாற்போல எடுத்துக் காட்டுகிறது.

चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्याः गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥

சித்ரம் வடதரோர்மூலே வ்ருத்தா: ஶிஷ்யா: குருர்யுவா |
குரோஸ்து மௌநம் வ்யாக்யாநம் ஶிஷ்யாஸ்து சிந்நஸம்ஶயா: ||

த்வைதம் என்றால் இரண்டு. அத்வைதம் என்றால் ஒன்று. இரண்டு இரண்டு என்பது எல்லாம் ஒன்றுதான் என்ற அவரது அநுபவத்தை அநுசரித்து, குரு தம் கைவிரல்களில் ஆள்காட்டி விரலையும் கட்டைவிரலையும் சேர்த்து வைத்துக்கொண்டு, 'இதை உணர்ந்தால் மற்றவை எல்லாம் தாமே விலகிப் போகும்' என்ற உண்மையை அவர்களுக்காகச் சொல்லவில்லை; தம் அநுபவத்தை அவர்களே பார்த்துக்கொள்ளும்படியாக உட்கார்ந்திருக்கிறார். அவர்களுக்காகவென்றுகூட அப்படி உட்கார்ந்துகொள்ளவில்லை.

இதர தத்துவ ஆராய்ச்சிக்காரர்கள் ஒரு கேள்வி போடுவது உண்டு. "குரு சிஷ்யர்களுக்கு அத்வைதத்தைத்தானே உபதேசிக்கிறார்? அத்வைதம் என்றால் என்ன? எல்லாம் ஒன்று; இரண்டாவது பொருள் கிடையாது என்பதுதானே? அப்படியானால் குரு வேறு, சிஷ்யர்கள் வேறாக முடியுமா? தம்முடைய ஆத்மாதான், சிஷ்யர்களுடைய ஆத்மா என்ற உண்மையான தத்துவத்தை உணர்ந்துகொண்டுவிட்டால் இவர் எதற்காக அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும்? தாமே தமக்கு உபதேசம் செய்து கொள்பவர்கள் உண்டா? இல்லை, 'தாம் வேறு, அவர்கள் வேறு' என்று இந்தக் குரு உணர்ந்தார் என்றால் அப்போது குருவுக்கே அத்வைத ஞானம் தெரியாது என்றுதானே கொள்ள

வேண்டும்? அத்வைத ஞானத்தை அறியாதவர் அந்த ஞானத்தைப் பிறருக்கு எப்படி உபதேசம் செய்ய முடியும்? அறியாதவர் என்றால் இவர் அவர்களுக்கு உபதேசம் செய்யத் தகுதியில்லாதவர் ஆகிவிடுகிறார். அறிந்தவர் என்றால் சொல்ல வேண்டிய அவசியமே இல்லையே'' என்று இப்படிப் பல கேள்விகளைக் கேட்பார்கள். அவற்றிற்கெல்லாம் இடம் இல்லாமலே செய்துவிட்டார் தக்ஷிணாமூர்த்தி.

அவருடைய அநுபவம் பூர்ணமான ஆத்ம ஸ்வரூபந்தான். இரண்டற்ற ஒரே ஆனந்த நிலைதான். அந்த நிலையில் அவர் உட்கார்ந்திருக்கிறார். அவருடைய ஆத்மானந்த ஸ்வரூபத்தை அநுசரித்துக் கையில் சின்முத்திரை தானாக அமைந்திருக்கிறது. பிறருக்குக் காட்டுவதுகூட இல்லை. அதுதான் அவர் அநுபவம். பேசாத மௌனியாக, சாந்தத்தோடு ஆனந்தத்தோடு இளமையோடு அவர் கண்களைப் பாதி மூடிக்கொண்டு யாரையும் பார்க்காமல் உட்கார்ந்திருக்கிறார். அந்த அநுபவத்தைப் பார்த்தவுடனே ரிஷிகளாகிய சிஷ்யர்களுக்கு எல்லாச் சந்தேகமும் போய்விட்டது. சாந்தம் வந்துவிட்டது. அப்படியே ஆனந்தபரவசர்களாகிவிட்டார்கள்.

गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ।

குரோஸ்து மௌநம் வ்யாக்யாநம் சிஷ்யாஸ்து சிந்நஸம்ஶயா: ‖

உள்ளே இருக்கிறது ஒரே ஒரு வஸ்து; மேலே போட்டிருக்கிற மனம், உடல் என்னும் சட்டைகளினால்தான் அது வேறாகப் படுகிறது. சட்டைகள் நீங்கிவிட்டால், ஒன்றுதான் இரண்டல்ல என்பது புரிந்துவிடுகிறது. அதைத் தம் அநுபவத்தினாலேயே உபதேசம் செய்கிறாரே தவிர அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்யவில்லை. மௌனமே அவரது உபதேசமாக இருக்கிறது.

இந்தக் கருத்தே இன்னோர் இடத்தில்,

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्त्वं युवानं
वर्षिष्ठान्ते वसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।

மௌநவ்யாக்யாப்ரகடிதபரப்ரஹ்மதத்வம் யுவாநம்
வர்ஷிஷ்டாந்தே வஸத்ருஷிகணைராவ்ருதம் ப்ரஹ்மநிஷ்டை: ‖

என்று இருக்கிறது. குருவினுடைய மௌனமே நமக்கு வ்யாக்யானம். அந்த மௌனம் என்ற வியாக்யானத்தினால் தானே பிரகாசிக்கிறது (பிரகடித) பரப்ரஹ்மதத்வம். அந்தச் சிஷ்யர்களுக்கு எத்தனை வயசு என்றே சொல்ல முடியாமல் இருக்கிறது. பிரம்மநிஷ்டர்களாக இருக்கிற மஹரிஷிகள் எலும்பும் தோலு

மாக இருக்கிறார்கள். குரு 'என்றும் பதினாறு வயசுடைய' யுவராக இருக்கிறார்.

आचार्येन्द्रं करकलितचिन्मुद्रं आनन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

ஆசார்யேந்த்ரம் கரகலிதசிந்முத்ரம் ஆநந்தமூர்த்திம்
ஸ்வாத்மாராமம் முதிதவதநம் தக்ஷிணாமூர்த்திமீடே ||

சின்முத்திரை என்பது தானே அமைகிறது. உள்ளே எது இருக்கிறதோ அது தானே வெளியில் அமைகிறது. நாம் எப்போதோ அநுபவிக்கிறோமே, ஆனந்தம் என்பதை, அதுவே ஒரு பெரிய சமுத்திரமாக இருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது. அந்த ஆனந்தம் எப்படித் தெரிகிறது? முகத்தைப் பார்த்தால் உள்ளே இருக்கிறது தெரிகிறது.

ஒருத்தனுக்குக் கோபம் என்றால் முகத்தைப் பார்த்தாலே தெரியும். அதே மாதிரி வருத்தம், ஆத்திரம் எல்லாம் முகத்தைப் பார்த்தே சொல்லிவிடலாம். ஆனந்தம் என்பதையும் முகத்தைப் பார்த்தே கண்டுபிடித்துவிட முடியும்; அதற்காக அந்த மாதிரி முகத்தை வைத்துக்கொள்வது இல்லை; முகத்தை அப்படி வைத்துக்கொள்கிறது என்று வரும்போதுதான் குறை நன்றாகத் தெரிந்துவிடுகிறது. 'நம் கையில் ஒன்றும் இல்லை. அவனிடம் நிறைய இருக்கிறது. ஆனால் அவன் நம்மைப் பார்த்து ஒன்றும் இல்லாதவன் என்று தெரிந்துகொண்டுவிடக் கூடாது' என்ற நினைப்பு வரும்போதுதான் இவன் முகத்தை அவனுக்காக மிகவும் சந்தோஷமாக வைத்துக்கொள்கிறான். அதே மாதிரி, 'அவனிடம் ஒன்றும் இல்லை. நம்மிடம் இருப்பது அவனுக்குத் தெரிந்தால் அவன் ஏதாவது கேட்டுவிடுவான். இல்லை என்று நாம் சொல்ல வேண்டும்' என்ற நினைப்பு வரும் போது சந்தோஷமாக இருக்கிறவன்கூடத் துக்கமாக முகத்தை வைத்துக்கொள்கிறான். வைத்துக்கொள்வது என்பது பிறருக்காகத்தான். 'பிறன் ஒருவன் இருக்கிறான். நாம் வேறே' என்ற நினைப்பு இல்லாமல் எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானம் உண்டானவனுக்கு முகத்திலே எந்த விதமான மாறுதலும் இராது. அவன் யாருக்காகவும் எந்த மாதிரியும் முகத்தை வைத்துக்கொள்ள வேண்டியதும் இல்லை. உள்ளத்தில் இருப்பதை அவன் முகம் காட்டிவிடும். உள்ளக் குறை எல்லாம் நிறைந்துவிட்டால், ஆனந்தத்திலே நிறைந்துவிட்டால் அது முகத்திலே தானே பொங்கும். அந்த மாதிரியான ஆனந்தம் தக்ஷிணாமூர்த்தியின் முகத்தில் பிரகாசிக்கிறது.

आचार्येन्द्रं करकलितचिन्मुद्रं आनन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ।

ஆசார்யேந்த்ரம் கரகலிதசிந்முத்ரம் ஆநந்தமூர்த்திம்
ஸ்வாத்மாராமம் முதிதவதநம் தக்ஷிணாமூர்த்திமீடே ||

ஞானம் இரண்டு வகைப்படும். ஒன்று பரோக்ஷ ஞானம். மற்றொன்று அபரோக்ஷ ஞானம். பரோக்ஷ ஞானம் என்பது 'தியரி'. அபரோக்ஷ ஞானம் என்பது 'ப்ராக்டிகல்'; அநுபவம். அதனால் பரோக்ஷ ஞானத்தைக் காட்டிலும் அபரோக்ஷ ஞானந் தான் உயர்ந்தது. தம்முடைய மௌன வ்யாக்கியானத்தின் மூலம் அபரோக்ஷ ஞானத்தை மற்றவர்கள் தாமே பெறும்படி யாகச் செய்துகொண் டிருக்கும் சாந்தமான மூர்த்தி, தக்ஷிணா மூர்த்தி.

மற்ற மூர்த்திகள் எல்லாம் அப்படி இல்லை. ஏதாவது ஒரு குறை அந்த அந்த மூர்த்தியிடம் இருப்பதுபோலத் தோன் றும். கோபம், வீரம் இப்படி ஏதாவது ஒன்று இருக்கும். நம் முடைய குறைகளை நிவிருத்திக்க அந்த மூர்த்திகளும் தங்களைக் குறைத்துக்கொண்டு இறங்கி வருகின்றன. அதனால்தான் அவதாரம் என்று சொல்கிறோம். அவதாரம் என்றால் கீழே இறங்குவது என்று பொருள். கீழும் இறங்காமல், மேலே ஏற இடமுமில்லாமல் தம் ஆத்மாநுபவ நிலையிலேயே இருப்பவர் தக்ஷிணாமூர்த்தி.

வேதத்தில் சுவாமியைப்பற்றிச் சொல்லும்போது, "எதற்கு மேல் ஒன்றும் கிடையாதோ அதுதான் சுவாமி. எதற் குக் கீழே ஒன்றும் கிடையாதோ அதுதான் சுவாமி. மிகப் பெரி யனவற்றிற்கெல்லாம் பெரிசு சுவாமி. மிகச் சிறிய அணுவுக்கு எல்லாம் அணுவானது சுவாமி" என்று வருகிறது. அப்போது நமக்குச் சந்தேகம் ஒன்று வரும்: "மிகப் பெரிய பொருளுக் கெல்லாம் பெரியதான ஒன்று எப்படி மிகச் சிறியவனவற்றுக் கெல்லாம் சிறியதாக இருக்க முடியும்?" இந்தச் சந்தேகம் வருவதற்குக் காரணம் என்ன? பெரியனவற்றுக்கு எல்லாம் பெரிதாக இருக்கிற வஸ்து ஒன்று, சிறியனவற்றுக்கு எல்லாம் சிறியதாக இருக்கிற வஸ்து ஒன்று என்று இப்படிப் பார்த்தால், அது வேறு, இது வேறு என்று கொண்டால், இரண்டு என்ற எண்ணம் வந்தால், சந்தேகம் வந்துவிடும். அப்படி இருக்க முடியாது என்று தோன்றும். ஆனால் சுவாமி என்பவர் மிகப் பெரிய பொருள்களுக்கெல்லாம் பெரிதாக இருக்கிறவர், மிகச் சிறியவற்றுக்கு எல்லாம் சிறியதாக இருப்பவர் என்றால் என்ன பொருள்? அவர்தாம் எல்லாமாய் இருக்கிறார். எல்லாமாய்

அவர் இருப்பதனுல்தான் அவரைத் தவிர வேறு ஒன்று இல்லாத நிலை வந்துவிடுகிறது. அவருக்கு மேலேயும் ஒன்றும் இல்லை. கீழேயும் ஒன்றும் இல்லை. அவரே எல்லாமாய் இருக்கிருர்; அவரைக் காட்டிலும் பெரிதும் இல்லை. அவரைக் காட்டிலும் சிறிதும் இல்லை. (தைத்திரீய ஆரண்யகம் 10-ஆவது பிரச்னம்.) சின்னதும் அவர்தாம். பெரியதும் அவர்தாம். சின்னதைக் காட்டிலும் சின்னதாக, பெரியதைக் காட்டிலும் பெரியதாக இருக்கிறவர், பட்ட கட்டையாக ஸ்தாணுவாக இருக்கிருர். அப்படி உட்கார்ந்திருப்பவர் - காரியமே இல்லாமல் சாந்தமாக ஆனந்தமாக உட்கார்ந்திருப்பவர் - தக்ஷிணமூர்த்தி.

'தன்னைக் காட்டிலும் வேருக ஒன்று - இரண்டாவது ஒன்று- இருக்கிறது' என்ருல்தான் அந்த இரண்டாவதினிடத்தில் பயம், கோபம், ஆசை எல்லாம் உண்டாகிறது. நமக்கு அதனுல் தீங்கு என்று நினைக்கும்போது கோபம், பயம், துவேஷம் இவை உண்டாகின்றன. 'நமக்கு அதனுல் ஆகவேண்டியது ஒன்று இருக்கிறது; அதன் உதவி கிடைத்தால் தேவலை' என்று நினைக்கும்போது அதனிடத்தில் ஆசை, பிரியம் எல்லாம் உண்டாகின்றன. இரண்டாவது வஸ்து இல்லை என்ருல் ராகத்திற்கும் இடம் இல்லை; துவேஷத்திற்கும் இடம் இல்லை. 'இரண்டாவது வஸ்து என்பதே கிடையாது; எல்லாம் ஒன்றேதான்; இரண்டு என்பது வெறும் மயக்கம்; இரண்டு என்பது எல்லாம் ஒன்றுதான்' என்ற தம்முடைய அநுபவத்தை அநுசரித்து, சின்முத்திரையானது கையில் தானே அமைய, சாந்தமாக, ஆனந்தமாக உட்கார்ந்திருப்பவர் தக்ஷிணமூர்த்தி.

அவர் அப்படி உட்கார்ந்திருப்பதனுலே அவர் ஒரு காரியத்தைச் செய்யவில்லை. ஆனுல் எல்லாக் காரியங்களும் தாமே நடந்துகொண் டிருக்கின்றன. சூரியன் உதயமாகிவிட்டான் என்ருல் பட்சிகள் கூட்டைவிட்டுப் பறந்து போகின்றன. ஜனங்கள் எழுந்திருந்து பல காரியங்களைச் செய்ய ஆரம்பித்துவிடுகிருர்கள். 'கிருகிரு' என்று அவரவர்கள் அவரவர்களுடைய காரியத்தைக் கவனிக்க ஆரம்பித்துவிடுகிருர்கள். உலகத்தில் அநேக காரியங்கள் நடைபெறுகின்றன. ஆனுல் சூரியன் அந்தக் காரியத்தைச் செய்யவில்லை. அவன் பிரகாசித்தவுடனே எல்லாக் காரியங்களும் அவன் சந்நிதானத்திலே நடைபெறுகின்றன.

அப்படியே இந்தக் குருவும் மனம் அசையாமல், தமக்கு ஒரு காரியம் என்பது இல்லாமல் ஆனந்த நிலையில் மௌனமாக உட்கார்ந்துகொண் டிருக்கிருர். அவருடைய சந்நிதானத்திலே எல்லாத் தத்துவங்களும் தாமே பிரகாசித்துக்கொண் டிருக்கின்

றன. அவர் ஒன்றைக்கூட உபதேசம் செய்யவில்லை. மௌன மாகவே தம் பாட்டுக்கு இருக்கிறார். ஒரு குறையும் இல்லாமல் அப்படியே சாந்தமாக, அடங்கின ஆனந்த நிலையிலே அவர் இருப்பதைத் தரிசனம் பண்ணின மாத்திரத்தில் ஆனந்தம், சாந்தம் எல்லாம் மற்றவர்களுக்கு நிறைந்துவிடுகின்றன. ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. ஒரு சந்தே கத்தை நிவிருத்தி செய்துகொள்ளலாம் என்ற பேச்சு இல்லை. குருவையே பார்த்துக்கொண்டு இவர்களும் மௌனமாக இருக் கிறார்கள். குருவும் மௌனமாக இரண்டு விரல்களை ஒன்றாகச் சேர்த்து வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.

வியாசருடைய புராண சில்பத்தைப் பார்த்தால் அவர் ஒரு விரலைக் காட்டிக்கொண் டிருப்பதாக இருக்கும். காஞ்சீபுரத்தில் வரதராஜர் கோயிலில் தாயார் சந்நிதியில் வியாச பகவான் ஜடாமகுடத்துடன் உட்கார்ந்திருப்பது போலவும், அவர்து எதிரில் ஆதிசங்கராசாரியார் நின்றுகொண் டிருப்பதைப் போலவும் ஸ்தம்பத்தில் உள்ள சில்பம் காட்சியளிக்கிறது. அதில் வியாசருடைய மூர்த்தி இரண்டற்ற ஒரு பொருளைக் காட்டுவதற்காக ஒரு விரலைக் காட்டிக்கொண் டிருக்கிறது. மத்துவாசாரியருடைய விக்கிரகம் உள்ள ஸ்தலங்களில், த்வை தம் என்பதைக் குறிப்பிடுவதற்காக இரண்டு விரல்களைக் காட்டிக்கொண் டிருக்கும். தக்ஷிணாமூர்த்தி, 'இரண்டும் ஒன்றுதான்' என்பதை இரண்டு விரல்களையும் ஒன்றாகச் சேர்த்துக் காட்டிக்கொண் டிருக்கிறார். எல்லாமாய் இருக்கக் கூடிய வஸ்து, தனக்கு மேலே ஒன்று இல்லாத வஸ்து, தனக்குக் கீழும் ஒன்றும் இல்லாத வஸ்து, குறையே இல்லாமல் சாந்தம், ஆனந்தம் எல்லாம் நிரம்பியிருக்கும்படியான வஸ்து இது ஒன்றுதான் என்ற உண்மை அவர் தரிசனம் கிடைத்த மாத்தி ரத்திலேயே எல்லாருக்கும் உண்டாகிவிடுகிறது.

'ஸ்வாமி இருக்கிறாரா? இருந்தால் அவர் எப்படி இருக்கிறார்? என்ன பண்ணுகிறார்?' என்ற கேள்விக்குப் பதிலாகக் கிருஷ்ண பரமாத்மா கீதையின் மூலமாக அர்ஜுனனுக்கு என்ன உப தேசம் பண்ணுகிறார் என்று கொஞ்சம் பார்க்கலாம். பகவான் சொல்கிறார்: ''அப்பா, ஈசுவரன்தான் ஒவ்வொருத்தருடைய ஹ்ருதயத்திற்குள்ளும் இருந்து அவர்களை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறான்'' என்று சொல்கிறார்.

நீங்கள் பொம்மலாட்டம் என்று கேள்விப்பட் டிருக்கிறீர் களா? உள்ளே ஒருத்தன் இருந்துகொண்டு பொம்மைகளை, உள்ளே இருந்தே அநேகம் கயிறுகளைக் கட்டிக்கொண்டு

அவற்றை இழுப்பதன் மூலம் ஆடவைப்பான். அந்தக் காலத்தில் இது எங்கும் உண்டு. இப்போது பொம்மலாட்டம் என்பதைக் கண்காட்சிகளில் வைப்பார்களோ என்னவோ? நாட்டிலே குறைந்து போய்விட்டது. 'அந்தப் பொம்மைகள் போல இருக்கிற தேகத்தையுடைய எல்லாப் பிராணிகளையும், உள்ளே இருந்து ஒருத்தன் ஆட்டி வைத்துக்கொண் டிருக்கிறான். அவன் ஆட்டுகிறதனால்தான் இவை ஆடுகின்றன. அந்த ஈசுவரன்தான் எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருத் தேசத்திலும் இருக்கிறான்' என்று கண்ணபிரான் உபதேசம் செய்கிறார்.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥

ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுந திஷ்டதி |
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா ||

''அந்தப் பரமாத்மாதான் எல்லாப் பிராணிகளுக்குள்ளும் இருக்கிறவன்'' என்று ஓர் இடத்தில் பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்கிறார்.

வேறோர் இடத்தில், 'அசையும் வஸ்துக்கள், அசையாத வஸ்துக்கள் எல்லாம் என்னிடந்தான் இருக்கின்றன' என்று சொன்னார்.

கிருஷ்ணன் சொல்வதைக் கேட்டு அர்ஜுனனுக்கு ஒரே மயக்கமாக வருகிறது. ''நீ என்ன, ஓர் இடத்தில், 'எல்லா வஸ்துக்களுக்குள்ளும் நான் இருந்து ஆட்டி வைக்கிறேன்' என்கிறாய். ஓர் இடத்தில், 'எல்லா வஸ்துக்களும் என்னிடந்தான் இருக்கின்றன' என்கிறாய். எனக்கு ஒரே குழப்பமாகப் போகிறது. ஏதாவது ஒன்றைச் சொன்னால்தான் எனக்குப் புரியும். நீ இப்போது இரண்டு சொன்னாயே? அதில் நிஜம் எது? பொய் எது? இரண்டும் நிஜமா?'' இப்படிப் பல கேள்விகள், பல சந்தேகங்கள் அவனுக்குள் உண்டாகின்றன. சுவாமியோடு சண்டை போடுகிறான்.

'எல்லாம் என்னிடந்தான் இருக்கின்றன' என்று ஓர் இடத்தில் சொல்கிறார். 'எல்லாவற்றிடத்தும் நான்தான் உள்ளே இருந்து ஆட்டி வைக்கிறேன்' என்று வேறோர் இடத்தில் சொல்கிறார். அப்படியானால் எது உண்மை? 'எல்லா வஸ்துக்களுக்கும் இவர் ஆதாரமா? அல்லது, எல்லா வஸ்துக்களும் இவருக்கு ஆதாரமா?' என்ற சந்தேகம் அர்ஜுனனுக்கு வந்துவிட்டது.

'தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்குத் தொன்னை ஆதாரமா?' என்று ஒரு தர்க்க சாஸ்திரிக்குச் சந்தேகம் வந்ததாம்; அதுபோல இருக்கிறது இது.

எதனாலே அவனுக்கு அந்தச் சந்தேகம் வந்தது? தர்க்க சாஸ்திரிக்குச் சந்தேகம் வரக் காரணம் என்ன?

கற்றறி மூடர் கதை என்று ஒரு கதை உண்டு. ஒரு ராஜா விடம் வைத்திய சாஸ்திரம் நன்றாகப் படித்தவன், தர்க்க சாஸ்திரம் நன்றாகப் படித்தவன், ஜோதிஷ சாஸ்திரம் நன்றாகப் படித்தவன், சங்கீத சாஸ்திரம் நன்றாகக் கற்றவன் இவர்கள் எல்லாருமாகச் சம்மானம் வாங்க வந்தார்களாம். ராஜா, அவர்களுடைய மேதையைப் பாராட்டி, ''அடடா, இவர்கள் மகாபுத்திசாலிகள்'' என்று சொன்னவுடனே, கூட இருந்த மந்திரி, ''அவர்கள் படித்திருக்கும் சாஸ்திரத்தில்தான் மகாபுத்திசாலிகள். மற்ற விஷயம் ஒன்றும் தெரியாத மூடர்கள்'' என்று சொன்னானாம். அவர்கள் இரண்டு பேருக்கும் தர்க்கம். ''சரி, இவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்துப் பார்த்துவிடலாம்'' என்று சொன்னான் மந்திரி. ''இவர்களைத் தானாகவே இன்றைக்குச் சமைத்துச் சாப்பிடச் சொல்லுங்கள். சாப்பிட்டுவிட்டுச் சபைக்கு வரும்படியாக உத்தரவு இடுங்கள்'' என்று சொன்னானாம்.

ராஜா அப்படியே உத்தரவு போட்டுவிட்டார். ஜோஸ்யத்திலே மகா கெட்டிக்காரனான வித்துவான் இலை பறிக்கப் போனானாம். மரத்தின் மேல் இலை பறித்துவிட்டுக் கீழே இறங்கப் போகும்போது கவுளி, ''கீழே இறங்காதே'' என்று சொல்லிவிட்டது. உடனே மேலே ஏறப் போனான். மேலே இருந்த கவுளி, ''ஏறாதே'' என்று சொல்லியது. அவன் கட்டையைப் பிடித்துக் கொண்டே மரத்தில் ஒட்டிக்கொண் டிருந்தான்.

வைத்திய சாஸ்திர நிபுணன் கடைக்குப் போனவன், ''வாழைக்காய் வாய்வு; கொத்தவரைக்காய் பித்தம்; கத்திரிக் காய் உஷ்ணம்'' என்று ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொன்று சொல்லிக்கொண்டு எதையும் வாங்காமல் நின்றுகொண் டிருந்தான்.

தர்க்க சாஸ்திரி நெய் வாங்கப் போனான். அப்போது நல்ல மழை, பனிமழை. இதனாலே நெய் உறைந்திருந்தது போல் இருக்கிறது; கடைக்காரன் தொன்னையில் போட்டவுடன் அப்படியே அது தொன்னையோடு ஒட்டிக்கொண் டிருந்தது. தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்தான். நெய் விழவில்லை; நெய்தான் தொன்னையைப் பிடித்துக்கொண் டிருப்பதுபோலத் தெரிந்தது; அவனுக்கு உடனே, ''நெய்க்குத் தொன்னை ஆதா

ரமா? தொன்னைக்கு நெய் ஆதாரமா?'' என்ற சந்தேகம் வந்து விட்டது. வரும் வழியில் இதை யோசனை பண்ணிக்கொண்டே தொன்னையைக் கொஞ்சம் சாய்ப்பது, மறுபடி நிறுத்திப் பார்ப்பது என்று இப்படிப் பண்ணிக்கொண்டே வந்தான். கொஞ்சம் வெயில் வந்து நெய் உருக ஆரம்பித்துவிட்டது. ஓர் இடத்தில், 'தொன்னைக்கு நெய் ஆதாரமா?' என்று கண்டு பிடிக்கத் தொன்னையைக் கவிழ்த்தானும். நெய் அப்படியே கீழே சிந்திவிட்டது.

சங்கீத சாஸ்திரம் கற்றவன் சாதம் கொதிக்கையில் அது கொதிப்பது தாளத்திற்குச் சரியாக இல்லை என்று அந்தப் பானையை உதைத்துத் தள்ளிவிட்டானும்.

ராஜா பார்த்தார். மணி மூன்று ஆகிவிட்டது. அந்தப் பண்டிதர்களைக் காணவில்லை. அழைத்து வரச் சொன்னர். தேடி வரப்போன மனிதன் மிகவும் கஷ்டப்பட்டு அவர்களைக் கண்டுபிடித்தான். அவர்களுடைய அலங்கோல நிலைகளை அரசரிடமும் மந்திரியிடமும் தெரிவித்தான்.

''பார்த்தீர்களா, இவர்களைக் காட்டிலும் உலகத்திலே வேறு முட்டாள்களே இல்லை'' என்று மந்திரி சொன்னன்.

நெய் வாங்கப்போனவன் நெய்யையும் தொன்னையையும் பற்றித் தர்க்கம் செய்தது போல்தான் அர்ஜுனனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. 'ஈசுவரன் எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமா? எல்லா வஸ்துக்களும் ஈசுவரனுக்கு ஆதாரமா? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. இரண்டையும் சொல்லி என்னைக் குழப்பிவிட்டாயே. கிருஷ்ணா, நீ சொன்னதில் எது நிஜம்? எது பொய்? ஏதாவது ஒன்றைச் சொல்' என்று அர்ஜுனன் கேட்பானே என்ற நிலை வந்துவிட்டது கிருஷ்ணனுக்கு. கிருஷ்ணன் பார்த்தார். ''அர்ஜுனா, நான் இரண்டு சொன்னேனே! அது இல்லை. நான் சொன்ன இரண்டில் ஒன்றை மாற்றிவிடுகிறேன். அதாவது நான் முதலிலே சொன்ன இரண்டில் ஒன்றை அழித்துவிட்டு ஒன்றை மாத்திரம் வைத்துக்கொள்கிறேன். எல்லாப் பொருள்களும் என்னிடத்தில் இருக்கின்றன என்று சொன்னேனே, அதை அழித்துவிடுகிறேன். न च मत्स्थानि भूतानि - ந ச மத்ஸ்தாநி பூதாநி - என்னிடம் ஒரு பொருளும் இல்லை. பொருள்கள் என்னிடத்தில் இருப்புடையனவும் அல்ல'' என்று சொன்னர்.

''இதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. நீங்கள்தானே முதலில், 'எல்லாப் பொருளும் என்னிடத்தில் இருக்கின்றன' என்று சொன்னீர்கள்? முன்பு சொன்னதை நான் மாற்றி

விடுகிறேன் என்றால் அதை நான் எப்படி ஒப்புக்கொள்வது?'' என்று அர்ஜுனன் சொல்லுவான்போல் இருக்கிறது.

''போடா போ. என்னை நீ நம்பவே வேண்டாம். ஒன்றை வைத்துக்கொள்கிறேன் என்று சொன்னேனே இல்லையோ, அதையும் மாற்றிவிடுகிறேன். नाहं प्रकाशः सर्वस्य (நாஹம் ப்ரகாஶ ஸர்வஸ்ய) நான் எல்லோருக்கும் சரியாக விளங்குவதில்லை'' என்று இரண்டையும் 'ரத்துப்' பண்ணிவிட்டார்.

''ஏன் பிரகாசிப்பதில்லை? ஏன் விளங்குவதில்லை?''

''அதுதான் யோக மாயை. யோகமாயையினால் மூடப் பட்டிருப்பதனால் எல்லாருக்கும் விளங்குவதில்லை.''

अहं योगमायासमावृतः सर्वस्य न प्रकाशः ।

அஹம் யோகமாயாஸமாவ்ருத: ஸர்வஸ்ய ந ப்ரகாஶ: | என்று சொல்லிவிட்டார்.

முதலிலே இவர்தாம், 'நான் எல்லாப் பொருள்களிடத்திலும் இருக்கிறேன்' என்றார். 'எல்லாப் பொருள்களும் என்னிடத்தில் இருக்கின்றன' என்றும் சொன்னார்.

இப்போது, 'न च मत्स्थानि भूतानि - ந ச மத்ஸ்தாநி பூதாநி - என்னிடத்தில் ஒரு பொருளும் இல்லை' என்று முதலில் சொன்னார். 'न चाहं तेष्ववस्थितः—ந சாஹம் தேஷ்வவஸ்தித: (நானும் அப்பொருள்களில் இல்லவும் இல்லை)' என்றார். உடனே, 'नाहं प्रकाशः सर्वस्य - நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய - நான் எல்லாரிடத்திலும் விளங்குவது இல்லை' என்றும் சொல்லிவிட்டார்.

'இது என்ன?' என்று கேட்டால், 'அதுதான் மாயை. என்னை உங்களுக்கு எல்லாம் தெரியாதபடி, நான் மாயையைப் போட்டு மூடிக்கொண்டிருக்கிறேன்' என்று சொல்லிவிட்டார்.

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: |
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ||

'இது என்ன உபதேசம் வேண்டிக்கிடக்கிறது? ஒன்றும் புரியவில்லையே!' என்று நமக்கு இப்போது தோன்றுகிறது அல்லவா?

'நான் ஒருத்தருக்கும் தெரியமாட்டேன்' என்று பகவான் சொல்லியிருந்தால், 'ஆயிரம் பேர் இருந்தால் ஆயிரம் பேருக்கும் தெரிய மாட்டேன்' என்று அர்த்தம். 'நான் எல்லாருக்கும் தெரியமாட்டேன்' என்றால், 'ஆயிரம் பேர் இருந்து 999 பேர்க்

குத் தெரியாமல் இருந்தாலும் இருக்கலாம். ஒருத்தனுக்குத் தெரிந்தாலும் தெரிவேன்' என்றுதான் பொருள். பகவான், 'नाहं प्रकाशः कस्यापि - நாஹம் ப்ரகாஶ: கஸ்யாபி' என்று சொல்லவில்லை. 'नाहं प्रकाशः सर्वस्य - நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய - எல்லாருக்கும் விளங்குவது இல்லை' என்றுதான் சொல்கிறார். யாருக்கு விளங்குகிறேன்? மாயையினால் பாதிக்கப்படாதவர்களுக்கு விளங்குகிறேன். இது எப்படி?

தெருவிலே ஒரு பூமாலை கிடக்கிறது. பகல் வேளையில் போகிறவர்களுக்கு அது பூமாலை என்பது நன்றாகத் தெரிகிறது. பயம் இல்லாமல் போகிறார்கள். அரை இருட்டு. எவனோ அந்தப் பக்கம் வந்தவன் அதை மிதித்துவிட்டு, ''ஐயோ பாம்பு, பாம்பு!'' என்று பயத்தால் கத்துகிறான்.

மாலையாக இருப்பதும், பாம்பாக இருப்பதும் ஒன்றுதான். இது மாலைதான் என்று தெரிந்தவுடன் அவனுக்குப் பாம்பு இல்லை என்று தெரிந்துவிடுகிறது. ஆனால் முதலில் பாம்புக்கு ஆதாரமாக இருந்தது என்ன? மாலைதான்.

'இந்தப் பிரபஞ்சத்திற்குள் நான் இருக்கிறேன்; பிரபஞ்சம் என்னிடத்தில் இருக்கிறது' என்று சொன்னால் என்ன அர்த்தம்? 'மாலைக்குள்தான் பாம்பு இருக்கிறது; பாம்புக்குள்தான் மாலை இருக்கிறது' என்பது எப்படியோ அப்படித்தான்.

பாம்பு என்று அலறுபவனுக்குப் பாம்புக்கு ஆதாரமாக இருப்பது மாலை. அஞ்ஞானம் நீங்கி, 'இது மாலைதான்' என்று உணர்ந்துகொண்டவனுக்கு மாலை பாம்பைத் தன்னுள் மறைத்துவிடுகிறது. மாலைதான் தெரிகிறது.

மாயையினால் மூடப்பட்டுப் பிரபஞ்சத்தைச் சத்தியம் என்று பார்ப்பவனுக்கு, பிரபஞ்சத்துக்கு ஆதாரமாக இருந்து தாங்குபவன்தான் ஈசுவரன்.

அதன் தோற்றத்தை ஞானத்தினாலே விலக்கியவனுக்கு ஈசுவரன் எல்லாமாய்த் தானுமாய்த் தோன்றுகிறான்.

கம்பர் சுந்தர காண்டத்தில் இதைத்தான் சொல்கிறார்:

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவுஎனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டால் அவர்என்பர் கைவி லேந்தி
இலங்கையில் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார்.'

அலங்கல் என்றால் மாலை. அரவு என்றால் பாம்பு. 'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு' - மாலையில் தோன்றுகிறதே பாம்பு என்ற பொய்யான எண்ணம்; இது வெளிச்சம்

வந்தால் போய்விடுகிறது. அப்படிப் பஞ்ச பூதங்கள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து விளங்குகிற வீக்கம் இருக்கிறதே, அது யாரைக் கண்டால் நீங்கும்? வீக்கம் என்பதுதான் பொய். இது, கலங்குவது எவரைக் கண்டால்? யாரைக் கண்டால் விலகிப் போகுமோ அவர்தான் ராமசந்திரமூர்த்தி.

கைவில் ஏந்தி இலங்கையில் பொருதா ரன்றே மறைகளுக்கு
இறுதி யாவார்

என்று கம்பர் அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தைச் சொல்கிறார்.

இதைத்தான் கீதையில் பகவான் சொல்கிறார். 'நான் எல்லாப் பொருள்களிடத்திலும் இருக்கிறேன்; எல்லாப் பொருள் களிடத்தும் இல்லை; என்னிடத்தில் எல்லாப் பொருள்களும் இருக்கின்றன; என்னிடத்தில் ஒரு பொருளும் இல்லை' என்று சொல்கிறார். இப்படிச் சொல்வதனால், 'எல்லாமாய் அல்லது மாய் இருக்கக் கூடியது ஒரு வஸ்துதான். அதுதான் ஈசுவரன்' என்ற உண்மை புலப்படுகிறது. இதைத்தான் வேத வாக்கியத்தில், 'பெரிய வஸ்துக்கள் எல்லாவற்றையும்விடப் பெரிய வஸ்து ஸ்வாமி; சிறிய வஸ்துக்கள் எல்லாவற்றையும்விடச் சிறிய வஸ்து ஸ்வாமி. எல்லா வஸ்துக்களாகவும் இருக்கக்கூடிய ஒரே ஒரு வஸ்து அதுதான்' என்று சொல்லியிருக்கிறது.

இந்த அத்வைத தத்துவாநுபவத்தைத்தான், தான் எல்லா மாய் இருக்கிற நிலையில் இருந்துகொண்டே சாந்தமான மூர்த்தி யாகிய தக்ஷிணாமூர்த்தி, 'இரண்டு என்பது இல்லை; இரண்டு என்பது ஒன்றுதான்' என்ற உண்மையை இரண்டு விரல்களை யும் ஒன்றாகச் சேர்த்து வைத்துக்கொண் டிருக்கும்படியான சின் முத்திரையினால் பிறருக்கு விளங்க வைக்கிறார். அவர் தரிசன அநுபவத்தினாலேயே மாயை நீங்கிப் போகிறது. சாந்தம், ஆனந்தம், அத்வைத ஞானம் எல்லாம் உண்டாகிவிடுகின்றன. ஆனந்த சமுத்திரத்திலே கலந்துவிடுகிறோம்.

7

# பயம் ஏன்?



பகவான் ராமராக அவதரித்தபோது தம்மை மனுஷ்யனாகவே நினைத்து நடந்துகொண்டார். பிறர் துதி செய்த காலத்தில், 'आत्मानं मानुषं मन्ये - ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்று சொல்லி மனிதர்களுக்கு உண்டான சுகதுக்கங்களைத் தாமும் அநுபவித்துக் காட்டினார். அதேபோல்தான் ஆதி சங்கரபகவத்பாதர் அவர்களும் பரமேசுவரனுடைய அவதாரமானாலும், மனிதத் தன்மையை அடைந்ததும், அந்த வழியிலேயே ஈசுவர பக்தியைச் செய்து பிறருக்கும் உபதேசித்தார்.

करलग्नमृगः करीन्द्रभङ्गो घनशार्दूलविखण्डनोऽस्तजन्तुः ।
गिरिशो विशदाकृतिश्च चेतःकुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः ॥

கரலக்நம்ருக: கரீந்த்ரபங்கோ கநஶார்தூலவிகண்டநோஸ்தஜந்து: |
கிரிஶோ விஶதாக்ருதிஶ்ச சேத:குஹரே பஞ்சமுகோஸ்தி மே குதோ பீ: ||

என்று சிவானந்த லஹரி ஸ்தோத்திரத்தில் ஈசுவரன் நிலையை எடுத்துக் கூறி, 'அத்தகைய பரமசிவன் இருதயத்தில் இருக்கும்போது பயத்திற்கு இடம் ஏது?' என்று கேட்கிறார்.

இதில் அடங்கியுள்ள தத்துவங்களைக் கவனிக்க வேண்டும். ஈசுவரனுடைய வலக்கையில் மான் இருக்கிறது. மானின் சுபாவம் எப்பொழுதும் சலித்துக்கொண்டிருப்பது. மனிதனின் மனமும் அவ்விதமே சஞ்சலிப்பது. 'चञ्चलं हि मनः कृष्ण - சஞ்சலம் ஹி மந: கிருஷ்ண' என்று அர்ஜுனனும் தெரிவித்தான். சதா சலிக்கும் மான் ஈசுவரன் கையில் அமர்ந்தபோது அதன் கண் அழகாயினும் ஈசுவரனுடைய கண்ணழகில் ஈடுபட்டு, சஞ்சலத்தையே விட்டு ஈசுவரனை அநுபவிக்கிறது.

ஈசுவரன் யானையின் தோலை மேலே போர்த்துக்கொண் டிருக்கிறான். அதனால் அவனுக்குக் கிருத்திவாசன் (कृत्तिवासाः) என்று ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. யானைத் தோலுக்கு க்ருத்தி என்று பெயர். யானைத் தோலை வஸ்திரமாக உடையவன் ஈசுவரன். ஒரு பெரிய யானை, சிவபெருமானை எதிர்க்க வந்தது. அவன் அந்த யானையின் முன்னால் ஊர்த்துவ தாண்டவம் ஆடி, அந்த யானையின் காலைத் தூக்கிப் பிடித்துத் தலைகீழாகச் சுற்றிக் குடலைப் பிளந்து, அதன் தோலை உரித்து வஸ்திரமாகத் தன் உடம்பில் போர்த்துக்கொண்டான். அதனால் அவனுக்கு, 'க்ருத்திவாசன்' என்று பெயர். வேதத்தில் இந்தப் பெயர் அடிக்கடி வருகிறது. 'कृत्तिं वसानः- க்ருத்திம் வஸாநः' என்று ருத்திரத்தில் வருகிறது. வேறு ஓர் இடத்தில், 'कृत्तिवासाः पिनाकी- க்ருத்திவாஸா: பிநாகீ' என்றும் வருகிறது.

பொதுவாக ஸம்ஸ்கிருதத்தில் இருக்கும் அகராதியைப் பார்த்தால் ஈசுவரனுக்குச் சொல்லியிருக்கும் பல பேர்களோடு 'कृत्तिवासाः' என்ற பேரும் சொல்லப்பட் டிருக்கிறது.

அகராதிக்குக் கோசம் என்று பெயர். கோசம் என்றால் பொக்கிஷம் என்று அர்த்தம். சப்தக் கூட்டங்கள் பொக்கிஷமாக இருக்கும் நூல் என்று பொருள். அகரம் முதற்கொண்டு-அந்தப் பாஷையில் எத்தனை எழுத்துக்கள் இருக்கின்றனவோ அவ்வளவுக்கும்-ஆதி முதல் அந்தம் வரையில் உள்ள பதங்கள் - எல்லாவற்றுக்கும் பொருள் சொல்லும் புஸ்தகம் அகராதி. அதைத்தான் ஸம்ஸ்கிருதத்தில் 'கோசம்' என்று சொல்வது.

இந்த மாதிரி பல பேர் கோசம் பண்ணி இருக்கிறார்கள். ஆனாலும் அமரசிம்ஹன் என்று ஒருவர் இருந்தார். அவர் சம்ஸ்கிருத பாஷைக்குப் பண்ணியிருக்கும் 'அமர கோசந்' தான் வெகு காலமாக உலகத்தில் அழியாமல் இருந்துவருகிறது. அது சம்பந்தமாக ஒரு கதைகூட உண்டு.

அமரசிம்ஹன் ஜைனன். ஜைன மதத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் மகாபுத்திமான். அவனுக்கு ஈடு கிடையாது. நிறையப் புஸ்தகங்கள் எழுதினான். சங்கராசார்ய ஸ்வாமிகள் திக்விஜயம் பண்ணிக்கொண்டு வரும்போது ஒரு சமயம் அவனுக்கும் அவருக்கும் ஒரு தர்க்கம் நடந்தது. வேதத்தை அநுசரிக்காத கொள்கைகள் ஜைன மதத்தில் அநேகம் உண்டு. தெய்வம் அவர்களுக்கு இல்லை. புத்தர்களுக்கு மிகவும் உயர்ந்த நிலை சூனியந்தான். ஜைனர்கள், 'எந்த வஸ்துவும் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம்; இருந்தும் இல்லாமலும் இருக்கலாம்' என்று அநேக வகையான அபிப்பிராயங்களையும்

சொல்வது உண்டு. 'ஆத்மாதான் எங்கும் நிறைந்து பரிபூர்ண மாக இருக்கிறவன்' என்பது உபநிஷத்தின் அபிப்பிராயம். இந்தத் தத்துவங்களைப்பற்றி எல்லாம் விசாரிக்க வேண்டும் என்று அமரசிம்ஹனை வாதத்திற்கு அழைத்தார் ஆசார்யர் அவர்கள்.

ஆசார்யர் அவர்கள் சொல்கிற வாதத்திற் கெல்லாம் அமரசிம்ஹனால் சரியான பதில் அளிக்க முடியவில்லை. அவன் ஜைனனாக இருந்தாலும் மகாபுத்திமான். ஆதலாலே சரஸ்வதியை உபாசித்து வந்தான். அதனால் சரஸ்வதி அவனுக்குப் பூர்ண கடாக்ஷம் பண்ணி, ''என்னை நீ ஆவாஹனம் பண்ணி வை. அவர் கேள்விக்கு எல்லாம் நானே பதில் அளிக்கிறேன்'' என்று அநுக்கிரஹித்தாள். அமரசிம்ஹனும் அப்படியே ஒரு திரை யைக் கட்டி, ஒரு குடத்தில் சரஸ்வதியை ஆவாஹனம் பண்ணி விட்டு, திரைக்கு வெளியில் இருந்தே ஆசார்யரவர்களைக் கேள்வி கேட்கும்படியாகவும், தான் உள்ளே இருந்து பதில் சொல்வதாகவும் ஓர் ஏற்பாட்டைச் செய்துகொண்டான். அதாவது சங்கரர் கேட்கிற கேள்விக்கு அவன் பதில் சொல்வது போல இருக்க வேண்டும். ஆனால் உள்ளே இருந்து பதில் சொல்பவள் சரஸ்வதி. இது ஆசார்யரவர்களுக்குத் தெரியக் கூடாது என்று தந்திரம் பண்ணினான். தாம் கேட்கிற கேள் விக்குப் பதில் சொல்பவர் அமரசிம்ஹன் அல்ல என்பது ஆசார்யரவர்களுக்குத் தெரிந்துவிட்டது. சரஸ்வதிதான் அவ னுக்காகப் பதில் சொல்கிறாள் என்பதையும் உணர்ந்துகொண்டு விட்டார்.

''நீ இத்தகைய ப்ரஷ்டனுக்காகவா பரிந்துகொண்டு பதில் சொல்கிறாய்? தெய்வம் இல்லை என்று பிறருக்குச் சொல்லக் கூடியவன் அல்லவா இவன்?'' என்று ஆசார்யரவர்கள் சரஸ்வதியை நினைத்துச் சொன்னவுடன், ''சரி, இனி நான் பதில் சொல்லவில்லை'' என்று சரஸ்வதி மறைந்துவிட்டாள்.

அமரசிம்ஹன், ''வாதத்தில் தோற்றுப்போய்விட்டேன்'' என்று ஆசார்யரவர்களுடைய பாதத்தில் வந்து விழுந்து நமஸ் காரம் பண்ணினான். ஆசார்யரவர்கள் எவ்வளவு புஸ்தகம் எழுதியிருக்கிறார்களோ அவ்வளவு புஸ்தகம் அவனும் எழுதி யிருக்கிறான். இருந்தும் ஆசார்யாரவர்களோடு வாதம் பண்ணித் தோற்றுவிட்டதனால், தான் எழுதிய புஸ்தகங்கள் எல்லாவற்றை யும் அக்கினியில் போடுவது என்று தீர்மானித்து ஒவ்வொன்றாகப் போட்டானாம். அது ஆசார்யாரவர்களுக்குத் தெரிந்தது; ''நீ என்ன காரியம் பண்ணுகிறாய்? நீ எந்த மதத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் மகாபுத்திமான்; உன் புஸ்தகங்கள் எவ்வளவு

உயர்ந்தனவாக இருக்கும்! அவற்றை நெருப்பில் போடலாமா?'' என்று அவன் கையைப் பிடித்தாராம். அதற்குள் அநேகம் புஸ்தகங்களை அவன் நெருப்பில் போட்டுவிட்டான். அப்போது அவன் கையில் இருந்தது அமர புஸ்தகம் ஒன்றுதான். அதை நெருப்பில் அவன் போடாதவாறு ஆசார்யரவர்கள் தடுத்து விட்டார்கள். இப்படி ஒரு கதை வழங்குகிறது.

பழங்காலத்தில் கணக்கு வழக்கு இல்லாமல் ஜைனர்களுடைய புஸ்தகங்கள் இருந்திருக்கின்றன. ஸம்ஸ்கிருத கிரந்தங்களில் ரகுவம்சம், நைஷதம், மாகம், கிராதார்ஜுனீயம், குமாரசம்பவம் என்று பஞ்ச காவியங்கள் உண்டு. அவற்றைப் போலவே பஞ்ச காவியங்கள் ஜைனர்களுக்கும் உண்டு. தமிழிலும் மிக உயர்ந்த நூலாகக் காவிய ரசம் எல்லாம் நிரம்பியிருக்கும் படியான நூல்களாக இருக்கும் சிந்தாமணி, வளையாபதி எல்லாம் ஜைனப் புஸ்தகங்கள்தாம். அதற்கு அப்புறந்தான் சோழ ராஜா ஈசுவர பக்தி அதிகமாக உண்டாகி, பஞ்ச காவியம் போலத் தமிழில் அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தைச் சொல்லும் பெரிய புராணத்தை எழுதும்படி செய்தான். ஜைனர்களுடைய நூல்கள்தாம் முதல் முதலில் தமிழிலும் அநேகம் உண்டாயின.

அமரசிம்ஹன் எழுதிய ஜைன நூல்கள் அநேகம் அழிந்து போய்விட்டன என்றாலும் ஆசார்யரவர்களுடைய அநுக்கிரஹத்தினால் தப்பிய ஒரு நூல்தான் அமரகோசம். அமரகோசம் எல்லோருக்கும் தெரியும். சைவ, வைஷ்ணவ மதங்கள், மற்ற வைதிக மதங்கள், வைதிக மதம் அல்லாதவை - இவற்றில் வரும்படியான எல்லாப் பதங்களுக்கும் அமரகோசத்தில் அர்த்தம் சொல்லியிருக்கிறான்.

அதில்கூட ஒரு வேடிக்கை. அகராதி எழுதுகிறவர்கள் பட்சபாதம் பண்ணக்கூடாது. ஒரு பாஷையில் உள்ள பதங்கள் எல்லாவற்றுக்கும் - அது எந்த மதத்தைச் சேர்ந்ததாக - எந்தச் சாதியைச் சேர்ந்ததாக இருந்தாலும் - சரியானபடி விருப்பு வெறுப்பு இல்லாமல் பொருள் பண்ண வேண்டும். தன்னுடைய கொள்கை, தன்னுடைய மதம் இவற்றுக்கு ஏற்பச் சிலவற்றை விட்டு, சிலவற்றைத் தப்பாகச் சொன்னால் அது பட்சபாதம் ஆகி விடும். ஒரு வார்த்தைக்கு ஒரு மதத்தில் ஓர் அர்த்தம் இருக்கும். இன்னொரு மதத்தில் இன்னோர் அர்த்தம் இருக்கும். எந்த எந்த மதத்து வார்த்தையோ அதற்கு ஏற்றபடி அர்த்தம் பண்ணவேண்டுமே தவிர, தன்னைச் சார்ந்த மதத்திற்கு ஏற்றபடி பொருள் பண்ணக்கூடாது. அப்படிப் பண்ணுவது பெரிய பட்சபாதம். ''என் மதம் உயர்ந்தது; அவன் மதம்

மட்டம்'' என்பதாக மதச்சண்டை போடுகிறவன்தான் பட்ச பாதமாக எழுதுவான்.

அமரசிம்ஹன் ஜைனனுக இருந்தாலும் வைதிக மதக் கிரந் தங்களில் வரும் வார்த்தைகளில் ஒன்றைக்கூட விடாமல் பொறுக் கிப் பட்சபாதமின்றி அர்த்தம் எழுதியிருக்கிருன். பிரம்மா, விஷ்ணு, ஈசுவரன், அம்பிகை, விக்னேசுவரர், சுப்பிரமணியர், இந்திரன், இந்திராணி இவர்களுடைய பெயர்கள் எல்லா வற்றையும் சேர்த்து எழுதியிருக்கிருன்.

இவ்வளவு பட்சபாதம் இல்லாமல் எழுதினுலுங்கூடத் தனக்குக் கிட்டின மதம் என்று வருகிறபோது, புத்த மதத்திலே புத்தருக்குச் சொல்லி இருக்கும்படியான பெயர்களே எல்லாம் ஜினனுடைய பெயராகவே சொல்லிவிட்டான்.

கடவுளே இல்லே என்பவை புத்தமும் ஜைனமும். ஆகவே ஜைன மதத்திற்கு அருகில் இருப்பது புத்த மதந்தான்; வைதிக மதங்கள் அதற்கு நேர்விரோதம்; தூரமானவை.

எப்போதுமே சண்டை, மனஸ்தாபம் என்பது தூரத்தில் இருக்கும்படியான ஒன்ருேடு நமக்கு ஏற்படாது. பக்கத்தில் கிட்டினதாக இருப்பதோடுதான் அதிகமான துவேஷம் உண்டாகும்.

அப்படி அமரசிம்மனுக்குப் புத்த மதத்தைப்பற்றிச் சொல் லும்போது துவேஷம் வந்துவிட்டதுபோல் இருக்கிறது. புத்தரைப் பற்றிச் சொல்லும்போது பொதுவான பெயர்களாகச் சொல்லி விட்டான்; 'யார் வேண்டுமானுலும் தன் ஸ்வாமி என்று சொல் லிக்கொண்டு போகட்டும்' என்பவனேப் போலப் பொதுவாக விட்டுவிட்டான்.

**सर्वज्ञः सुगतो बुद्धो धर्मराजस्तथागतः ।**
**समन्तभद्रो भगवान् मारजिल्लोकजिज्जिनः ॥**

**ஸர்வக்ஞ: ஸுகதோ புத்தோ தர்மராஜஸ்ததாகத: |**
**ஸமந்தபத்ரோ பகவாந் மாரஜில்லோகஜிஜ்ஜிந: ||**

ததாகத: என்பது புத்தனுக்கும் பெயர். இவை புத்தனுக் குரிய பெயர்களே என்று எல்லோரும் எண்ணிக்கொண் டிருப் பார்கள். இவற்றை ஜினனுடைய பெயர்களாகவே அவன் சேர்த்துக்கொண் டிருக்கிருன்.

**मुनीन्द्रः श्रीघनः शास्ता मुनिः शाक्यमुनिस्तु यः ।**

**முநீந்த்ர: ஸ்ரீகந: ஶாஸ்தா முநி: ஶாக்யமுநிஸ்து ய: |**

என்று இப்படி அநேகம் பேர்களே ஜினனுக்குச் சொல்லி யிருக்கிருன்.

'அகராதி - டிக்ஷனரி - என்றால், இது சுலோகமாகவே இருக்கிறதே, எப்படி இதைத் தனித்தனியாகப் பிரிக்க முடியும்? ஒன்று முன்னதோடு சேருகிறதா, பின்னதோடு சேருகிறதா என்று எப்படிக் கண்டுபிடிப்பது?' என்று நமக்குச் சந்தேகம் வரலாம். அந்தக் காலத்தில் எல்லாச் சாஸ்திரங்களும் - வேதாந்தம், வைத்தியம், சங்கீதம், டிக்ஷனரி - எல்லாம் சுலோகமாகவே தான் எழுதப்பட்டன. புஸ்தகம் அச்சிடும் வசதி இல்லாததனாலே சுலோகமாக இருந்தால் எல்லோரும் சுலபமாக நெட்டுருப் போட முடியும் என்று அப்படிச் செய்தார்கள். ஒரு புஸ்தகம், ஓர் ஏட்டுச்சுவடி இல்லாமல் காட்டில் இருப்பான் ஒருவன்; அவன் மகாபுத்திமானாக, கேட்டவுடன் எந்தச் சந்தேகத்தையும் சொல்லக்கூடியவனாக இருப்பான்.

நமக்கு வந்த சந்தேகம் இந்த அமரகோசத்தில் ஒரு வார்த்தை எதோடு சேருகிறது, எதோடு முடிகிறது என்பது தானே!

வரிசையாகப் பெயர்களைச் சொல்லிக்கொண்டே வரும்போது ஒரு பதத்திற்கு பிறகு 'तु'-து' என்று போட்டால் அப் பெயர்கள் அப் பதத்திற்கு ('து' என்பதற்கு முந்திய பதம்) முந்தி முடிந்து போய்விட்டன என்பது குறிப்பு. 'து' என்பதற்குப் பிந்திய பதம் முதல் வேறு பொருளைச் சொல்லும் என்று கொள்ளவண்டும். அதேபோல் சில பெயர்களைச் சொல்லிவிட்டு, 'अथ' - 'அத' என்று போட்டால் அப்பெயர்கள் 'அத' என்பதற்கு முந்தி முடிந்து போய்விட்டன என்றும் 'அத' என்பதற்குப் பிந்திய பதம் முதல் வேறு பொருளைக் குறிக்குமென்றும் கொள்ளவேண்டும். 'அத', 'து' என்கிற இரண்டும் இப்படிச் சங்கேதமாக அமரத்தில் வந்திருக்கின்றன. 'सर्वज्ञः सुगतो वुद्धो- 'ஸர்வக்ஞ: ஸுகதோ புத்தோ' என்பதிலிருந்து, 'शास्ता मुनिः - ஶாஸ்தா முநி:' என்பது முடியச் சொல்லிக் கடைசியில் शाक्यमुनिस्तु- ஶாக்யமுநிஸ்து' என்று 'து' என்பதைச் சேர்த்துப் போட்டு விட்டான். இதுவரைக்கும் சாஸ்தா முனி (ஜினர்); இனி வேறே (சாக்யர்) என்பதை அந்தத் 'து' குறிப்பிக்கிறது.

பிரசித்தமான புத்தருடைய மெய்காவலரான ஸுகதர் முதலிய பதங்களையெல்லாம் ஜினனுடைய பெயராகச் சொல்லி விட்டான். இது பட்சபாதந்தான். இருந்தாலும் அப்புறம் கொஞ்சங்கூடப் பட்சபாதம் இல்லாமல் வைதிக மதங்களில் சொல்லப்படும்படியான தெய்வங்கள், தேவதைகள் எல்லாவற்றையும் சொல்கிறான்.

ஈசுவரனுடைய பெயர்களைச் சொல்லும்போதும் ஒன்றுகூட விடவில்லை.

शंभुरीशः पशुपतिः शिवः शूली महेश्वरः ।
ईश्वरः शर्व ईशानः शंकरश्चन्द्रशेखरः ॥
भूतेशः खण्डपरशुर्गिरीशो गिरिशो मृडः ।
मृत्युञ्जयः कृत्तिवासाः पिनाकी प्रमथाधिपः ॥

ஶம்புரீஶ: பஶுபதி: ஶிவ: ஶூலீ மஹேஸ்வர: |
ஈஶ்வர: ஶர்வ ஈஶாந: ஶங்கரஶ்சந்திரஶேகர: ||
பூதேஶ: கண்டபரஶுர்கிரீஶோ கிரிஶோ ம்ருட: |
ம்ருத்யுஞ்ஜய. க்ருத்திவாஸா: பிநாகீ ப்ரமதாதிப: ||

என்று, வேதத்திலும் புராணம் முதலியவற்றிலும் வரும்படியான எல்லா வார்த்தைகளையும் சொல்லிவிடுகிறான். அநேகமாக ஈசுவரனுக்கு இருக்கிற பெயர்கள் எல்லாம் வேதத்தில் கர்ம காண்டத்தில் வந்துவிடுகின்றன. 'कृत्तिवासाः पिनाकी-க்ருத்திவாஸா: பிநாகீ' என்று அமரத்தில் சொல்லியிருக்கிறது. இப்படியே வேதத்திலும் ஆயுஷ்யஹோம மந்திரத்தில் வருகிறது. ஸ்வாமி யானைத் தோலைப் போர்த்துக்கொண்டதால் 'க்ருத்தி வாஸா:' என்ற பெயர் அவருக்கு வந்தது என்பதை ஆரம்பத்தில் சொன்னேன். அந்தப் பேர் அமரத்தில் வந்திருக்கிறது என்று ஞாபகத்துக்கு வந்தது. அமரகோசத்தில் பட்சபாதம் இல்லாமல் எல்லா வார்த்தைகளையும் சொல்லியிருக்கும் அமர சிம்மனைப்பற்றிச் சொல்லத் தோன்றியது.

''யானையை உரித்துப் போர்ப்பதாவது! இது என்ன வேலை? அவர் என்ன வஸ்தாத்தா? தம் பலத்தைப் பிறர் பார்க்கவேண்டும் என்பதற்குப் பயில்வான் தண்டாவைத் தூக்கிக் காட்டுவது போல, 'யானையோடு நான் சண்டை போட்டு, அதன் தோலை உரித்துப் போர்த்துக்கொண்டிருக்கிறேன்' என்பதை நமக்குக் காட்டுகிறாரா? கிருஷ்ணன்கூட யானையோடு சண்டை போட்டான்; கொக்கின் வாயைப் பிளந்தான் என்று கதை சொல்வது உண்டு. அதுமாதிரி தமக்கும் ஒரு பெருமை இருக்கவேண்டும் என்று யானையோடு சண்டைபோட்டு அதன் தோலை உரித்துப் போர்த்துக்கொண்டிருக்கிறாரா?'' இல்லை, இந்த யானை கேவலம் பௌதிகமான யானை அன்று.

ஒரு காலத்தில் ரிஷிகள் எல்லாம், ''வேதத்தில் சொல்லி இருக்கும்படியான கர்மானுஷ்டானங்களை அநுசரித்துக்கொண்டிருந்தால் போதும். ஈசுவரத் தியானம், ஈசுவர பக்தி என்

பதே வேண்டாம்'' என்று மிகவும் கர்வமாக, அகம்பாவமாக இருந்துகொண் டிருந்தார்களாம். ''நமக்கு வேதம் இருக்கிறது. கர்மாநுஷ்டானம் இருக்கிறது. அதுவே பலனைக் கொடுத்து விடுகிறது. அதற்கு மேல் ஈசுவரனுவது? அவனை எதற்காகப் பக்தி பண்ணி, அவனுடைய ஸ்வரூபத் தியானம் பண்ணவேண்டும்? அதெல்லாம் வேண்டியதில்லை'' என்று இருந்தார்களாம். வேதத்தோடு, வேதத்தில் சொல்லிக்கொண் டிருக்கும்படியான கர்மாநுஷ்டானங்களை அநுசரிப்பதோடு எல்லாம் முடிந்துபோயிற்று என்பது அவர்களுடைய தத்துவம்.

இதுபற்றித்தான் சங்கரருக்கும் மண்டனமிச்ரருக்கும் ஒரு பெரிய தர்க்கம் நடந்தது, மண்டனமிச்ரர் தோற்றுப்போனுர் என்பதைச் சங்கரவிஜயத்தில் பார்க்கிறோம்.

வெறும் கர்மாக்களை மாத்திரம் செய்துகொண்டு இருந்துவிட்டு, தத்துவத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யாமல் போனுல் பிரயோஜனம் இல்லை. உபநிஷத்துகள் எல்லாம் அதற்காகத்தான் ஏற்பட்டவை.

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवाऽर्जुन ।

த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந |

என்று பகவான் கீதையில் சொல்கிறுர். வேதங்கள் முக்குணங்களைப் பற்றியவைதாம். அவற்றை, முக்குணத்தையும் கடப்பதற்குச் சாதகமாகக் கொண்டு, முக்குணத்தையும் கடந்து நிற்பதுதான் பிரயோஜனம். வேதத்தில் சொல்லி இருக்கும்படியான கர்மாநுஷ்டானங்களை மாத்திரம் செய்துகொண்டு, முக்குணத்திற்குள் அகப்பட்டுக் கிடப்பதை எடுத்துக்காட்டி, இவை எல்லாவற்றையும் ஈசுவரார்ப்பணம் செய்துவிட்டால், குணம் குறி கடந்தவனுக ஆகலாம் என்பதைப் பகவான் எடுத்துச் சொன்னுர். கர்மாநுஷ்டானங்களை மாத்திரம் செய்துகொண்டு அவற்றில் கட்டுப்பட் டிருப்பவன் புத்திசாலி அல்ல. அவனுக்குப் புத்தியே இல்லை என்று வேதமும் சொல்லுகிறது. அவனுக்குப் புத்தி எங்கே போகும்? ஹோமப் புகைபோலப் போய்விடுமாம். அதனுல்தான் பகவான் கீதையில்,

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवाऽर्जुन ।

த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந |

என்று சொல்லி, இன்னேர் இடத்திலும் 'நிஸ்த்ரைகுண்ய:' என்பதைப்பற்றி மிகவும் சிலாகித்துப் பேசிவிட்டார்.

இதே மாதிரியாக ஆசார்யர் அவர்கள் மண்டனமிச்ரரிடத்தில் வாதம் செய்து ஜயம் பெற்றிருக்கிறுர்.

வேதத்திலும் இந்தக் கருத்து இருக்கிறது. 'இவ்வளவு வேதங்களும் எவனுடைய சரணாரவிந்தத்தைப் போய்ச் சேருகின்றனவோ அதுதான் நீ கடைசியில் போய் சேர வேண்டிய ஸ்தானம்' (கடோபநிஷத் 2-ஆவது வல்லி) என்று வருகிறது.

'வெறும் கர்மாநுஷ்டானங்களை மாத்திரம் செய்துகொண்டு ஈசுவரனை எவன் ஒருவன் உணர்ந்துகொள்ளாமல் இருக்கிறானோ, அவன் வெறும் நெருப்பில் விறகைப் போட்டுப் புகையை மாத்திரம் எழுப்பிக்கொண் டிருக்கிறான். அவன் ஆத்ம ஸ்வரூபத்தை ஒரு நாளும் அறிந்துகொள்ள மாட்டான்' என்று சுருதியில் கர்மகாண்டத்திலே சொல்லியிருக்கிறது. 'எவன் ஒருவன் ஆத்ம ஸ்வரூபத்தை உணர்ந்துகொண்டு விட்டானோ அவன் அந்த நிலையை அடைந்த பிறகு அவனுக்கு வேதம் என்கிற எல்லாம் வேதம் அல்லாமல் போய்விடும். தேவர்கள் என்கிற எல்லாம் தேவர்கள் அல்லாமல் போய்விடுவார்கள். பிராமணர்கள் எல்லாம் பிராமணர்கள் அல்லாமல் போய்விடுவார்கள்.' இப்படிச் சுருதியிலே (பிருஹதாரண்யகம் 4-ஆவது அத்தியாயம்) வருகிறது. காரணம், அவர்கள் எல்லாவற்றுக்கும் மூலமான வஸ்து எதுவோ அந்த வஸ்துவோடு தாம் வேறு, அது வேறு என்ற பேதம் இல்லாமல் கலந்துவிடுகிறார்கள்.

இப்படி வெறும் கர்மாநுஷ்டானத்தினால் பிரயோஜனம் இல்லை என்பது பகவான் கீதையில் சொல்லியிருப்பதிலிருந்து தெரிகிறது; வேதத்தில் கர்மகாண்டத்தில் சொல்லியிருக்கும் படியான விஷயங்களிலிருந்தும் தெரிகிறது. ஆசார்யரவர்கள் மண்டனமிச்ரரோடு வாதம் செய்து ஜயம் அடைந்ததிலிருந்தும் தெரிகிறது. இதைத் தெரிந்துகொள்ளக்கூடிய சந்தர்ப்பந்தான் ஈசுவரன் செய்த லீலை.

தாருகாவனத்தில் வாழ்ந்துகொண் டிருந்த அந்த ரிஷிகள், 'ஈசுவர பக்தி, ஈசுவரத் தியானம் ஆகியவற்றில் ஒன்றும் வேண்டியது இல்லை; வேதத்தில் சொல்லியிருக்கும் கர்மாநுஷ்டானங்களைச் செய்துவந்தால் போதும்' என்று அகங்காரத்தோடு இருந்துகொண் டிருந்தார்கள். அது ஈசுவரனுக்குத் தெரிந்தவுடன், அவர்களுக்கும் ஞானத்தை உண்டுபண்ண வேண்டும் என்று எண்ணிப் பிக்ஷாடன மூர்த்தியாகப் புறப்பட்டு வந்தார். அதிக வசீகரமான கோலத்தோடு தாருகாவனத்து ரிஷிகளுடைய ஆசிரமங்களின் வழியாகப் பிட்சைப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு போனார். அந்தக் கோலத்தைப் பார்த்தவுடன், ரிஷிகளுடைய பத்தினிகள் எல்லோரும் - நான் எனது என்கிற நினைப்பையெல்லாம் இழந்து அந்த ஸ்வரூப ஆனந்தத்தோடு

கலந்தவர்களாக அவர் பின்னேடேயே வீடுவாசலை எல்லாம் விட்டுப் போக ஆரம்பித்துவிட்டார்கள்.

தான் என்கிற நினைப்புள்ள இடத்தில்தான் பிரியம் உண்டாகும். நமக்கு அப்பா அம்மாவிடம் அபிமானம் இருக்கிறது, பிரியம் இருக்கிறது; அதற்கு மூலமான காரணத்தை ஆராய்ந்து பார்த்தால் நமக்கு, 'தான்' என்கிற இடத்தில் அபிமானம் தெரியவரும். அதனுல்தான், 'என் அம்மா, என் அப்பா' என்று அவர்களிடத்தில் பிரியம் வைக்கிறோம். இன்னேர் அம்மாவிடத்தில் அந்த அபிமானம் வருகிறதோ? இல்லை. இப்படி நான் நான் என்று வைத்துக்கொள்கிற அபிமானம், பிரியம் கடைசியில் ஆத்ம ஸ்வரூபத்தோடு போய் முடிகிறது. பகவானே எல்லோருடைய ஆத்ம ஸ்வரூபமும். கிருஷ்ணபகவானைப் பார்த்தவுடன் கோபிகைகள் போனுற்போல, மிகவும் வசீகரமான மூர்த்தியாக வந்திருக்கும்படியான பிக்ஷாடன மூர்த்தியைப் பார்த்தவுடன், தான், நான் என்கிற நினைப்பெல்லாம், அகங்காரம் எல்லாம், அந்த ரிஷிபத்தினிகளுக்குப் போய் விட்டது. அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தோடு ஒன்றுபட்டவர்களாக, தங்கள் பர்த்தாவுக்குச் சுச்ரூஷை பண்ணவேண்டுமே, ஹோமத்திற்கு வேண்டியவைகளை எடுத்துவைக்க வேண்டுமே என்கிற நினைப்பெல்லாம் மறந்து அந்த மூர்த்தியின் பின்னுலே போக ஆரம்பித்துவிட்டார்கள்.

'கர்மாநுஷ்டானங்களினுலேயே எல்லாக் காரியமும் நடந்துவிடுகின்றன. ஈசுவரனை எதற்காகத் தியானம் பண்ண வேண்டும்? ஏன் பக்தி பண்ண வேண்டும்?' என்று முரட்டுத்தனமாக இருந்த ரிஷிகளுக்கு இதைப் பார்த்து அதிகம் கோபம் வந்துவிட்டது. ''இவன் யாரடா பிச்சைக்காரன்! பில்லி சூனியக்காரன்போல் இருக்கிறது! நம்முடைய பத்தினிகளையெல்லாம் மயக்கி இழுத்துக்கொண்டு போகிறுனே!' என்று அவரை வந்து எதிர்க்க ஆரம்பித்தார்கள். இவர்கள் சக்தி அங்கே நடக்குமா? மிகவும் கோபமாகத் தங்களுடைய மந்திர சக்தியினுலேயே அந்தப் பிச்சைக்காரனை அழித்துவிடவேண்டும் என்று அநேக ஆபிசாரப் பிரயோகங்களை எல்லாம் பண்ணினுர்கள். யானையைச் சிருஷ்டித்து அவர்மேல் ஏவிவிட்டார்கள். அந்த ரிஷிகளுடைய அகம்பாவத்தை, கர்வத்தை அடக்க வேண்டும் என்பதற்காக, தம்மை எதிர்த்து வந்த யானையின் முன்னுல் ஊர்த்துவ தாண்டவம் ஆடி, அந்த யானையையே பந்தாகத் தூக்கித் தூக்கி எறிந்து, அதன் கால்களையும் உடம்பையும் கிழித்து அதன் தோலை மேல்வஸ்திரமாகவே போர்த்துக் கொண்டுவிட்டார் பகவான். அந்த யானை சாதாரண யானை

அல்ல. ஆபிசார மந்திரத்தின் மூலமாக ஏற்பட்ட யானை. அப்புறந்தான் அந்த ரிஷிகளுக்கு நல்ல புத்தி வந்தது. அதற்குப் பிறகு ஈசுவரனைப் பிரார்த்தித்து, ஈசுவர பக்தி, ஈசுவரத் தியானம் ஆகியவை செய்து நல்ல கதியை அடைந்தார்கள். இது ஒரு கதை. ரிஷிகளுக்கு அவர்களுடைய பத்தினிகளினாலே ஞானம் வந்தது. அப்போதுதான் ஈசுவரனுக்கு, 'க்ருத்திவாஸா:' என்ற பெயர் வந்தது. யானைத் தோலைப் போர்த்துக்கொண்டதனாலே அப்பெயர் ஏற்பட்டது.

करलग्नमृगः करीन्द्रभङ्गो घनशार्दूलविखण्डनोऽस्तजन्तुः ।

**கரலக்நம்ருக: கரீந்த்ரபங்கோ கநஶார்தூலவிகண்டநோஸ்தஜந்து: |**

எப்போதும் சஞ்சலமாக இருக்கும்படியான மான்கூட - மருட்சியோடு இருக்கும்படியான மானின் கண்கூட - பகவானுடைய நேத்திரத்தின் அழகைப் பார்த்துக்கொண்டு வைத்த விழி வாங்காமல் இருக்கிறது. ம்ருக: என்றால் மான். இடுப்பில் இருக்கும்படியான உடை புலித்தோல். மேலே யானையின் தோலை வஸ்திரமாகப் போட்டுக்கொண்டிருக்கிறார்.

புலி, யானை என்றால் நமக்குப் பயம். புலியை நினைத்தாலே மான் நடுங்கிவிடும். ஆனால் இங்கே ஈசுவரனோடு புலி யானை எல்லாம் ஒடுங்கிப் போய்விட்டன. மான் சிறிதுகூடப் பயம் இல்லாமல் அவர் நேத்திரத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறது. சலனம் கொஞ்சங்கூட இல்லை.

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய மூன்று கிருத்தியங்களுக்கும் மூலம் ஈசுவரன். எல்லா உயிர்களுக்கும் உயிராக இருப்பவனும் அவன்தான். அந்த ஈசுவரனிடத்தில்தான் சகலப் பிரபஞ்சமும் - சராசரங்கள் அத்தனையும் - அடங்கிவிடுகின்றன.

गिरिशो विशदाकृतिश्च चेतःकुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः ॥

**கிரிஶோ விஶதாக்ருதிஶ்ச சேத:குஹரே பஞ்சமுகோஸ்தி மே குதோ பீ: ||**

ஈசுவரனுக்குப் பஞ்ச முகம் உண்டு. நான்கு முகங்களிலும் நான்கு வேதங்களையும் சுவாசமாக வைத்துக்கொண்டிருக்கிறார். ஓங்கார சப்தத்தை எழுப்புவது ஊர்த்துவ முகம். ஆக ஐந்து முகங்கள். பஞ்சமுகன் என்று வேதங்களிலும் ஈசுவரனுடைய பெயர் வருகிறது.

மேலே யானைத் தோல்; இடுப்பிலே புலித்தோல்; கையிலே மான்குட்டி ஒன்று. இந்த லக்ஷணம் எப்படி இருக்கிறதென்றால், ஒரு பெரிய சிம்மம், மான்குட்டி ஒன்றை அப்படியே பிடித்து நகங்களிலே கோத்துக்கொண்டு, புலியை அடித்து, யானையின்

மஸ்தகத்தைப் பிளந்து அவற்றின் தோல்களை உரித்து மேலே போட்டுக்கொண்டு வந்தால் எப்படி இருக்கும்? அப்படிப்பட்ட சிங்கம்போல இருக்கிறார் பகவான். இவர் நமக்கு ஸ்வாதீன மாகப் போய்விட்டால் நமக்குப் பயம் என்பது ஏது?

कुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः?

குஹரே பஞ்சமுகோஸ்தி மே குதோ பீ:?

ஒரு பெரிய சிம்மம் வருகிறது என்றால் போதும்; சகலப் பிராணிகளும் அப்படியே பயந்து நடுங்கி ஒடுங்கிப் போய்விடும். பிரளய காலத்தில் பஞ்சமுகம் உடைய ஈசுவரனிடத்தில் போய்த்தான் சகலமும் ஒடுங்குகின்றன.

பஞ்சமுகம் என்பதற்குச் சம்ஸ்கிருதத்தில் ஈசுவரன் என்கிற அர்த்தத்தோடு, சிங்கம் என்றும் ஓர் அர்த்தம் உண்டு. சிங்கத்திற்கு ஐந்து முகங்கள் இருக்கின்றனவா என்று கேட்கலாம். இந்த இடத்தில் பஞ்சமுகம் என்பதற்கு அர்த்தம் வேறே. வியாகரண சாஸ்திரப் பிரகாரம் 'பஞ்ச' என்றால் விஸ்தாரம் என்று பொருள்.

முகம் மாத்திரம் நன்றாக விரிந்து பெரிதாகவும் உடம்பு ஒடுங்கிச் சிறுத்தும் இருப்பதனால் அதற்குப் பஞ்சமுகம் என்று பெயர் உண்டாயிற்று. பிடரி மயிரோடு சிங்கத்தின் முகம் பெரிதாக இருக்கிறது; உடம்போ சிறுத்து ஒடுங்கி இருக்கிறது. இது போலவே பஞ்ச பாத்திரம் என்பதற்கு ஐந்து பாத்திரங்கள் என்று அர்த்தம் இல்லை. பஞ்ச என்பதற்கு விஸ்தாரம் என்று அர்த்தம். தலைப்பக்கம் நன்றாக விரிந்தும் உடல் சிறுத்தும் இருக்கிற பாத்திரம் பஞ்ச பாத்திரம்.

कुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः?

குஹரே பஞ்சமுகோஸ்தி மே குதோ பீ:?

என்பதற்கு இரண்டு விதமான அர்த்தம் சொல்லலாம். 'குகையில் சிங்கம் இருக்கும்போது என்ன பயம்?' என்பது ஒன்று.

பஞ்சமுகம் என்பதற்கு ஈசுவரன் என்று அர்த்தம் பண்ணலாம். 'அவன் கையில் மான் இருக்கிறது. மார்பில் யானைத்தோல்; இடுப்பில் புலித்தோல். குஹை என்பது இருதயாகாசம்; அத்தகைய ஈசுவரன் என்னுடைய இருதயமாகிய தஹராகாசத்தில் வீற்றிருக்கும்போது எனக்கு என்ன பயம்?' என்று வேறு ஒரு வகையில் பொருள் கொள்ளலாம்.

करलग्नमृगः करीन्द्रभङ्गो घनशार्दूलविखण्डनोऽस्तजन्तुः ।
गिरिशो विशदाकृतिश्च चेतःकुहरे पञ्चमुखोऽस्ति मे कुतो भीः ॥

**கரலக்நம்ருக: கரீந்த்ரபங்கோ கநஶார்தூலவிகண்டநோஸ்தஜந்து: |**
**கிரிஶோ விஶதாக்ருதிஶ்ச சேத:குஹரே பஞ்சமுகோஸ்தி மே**
**குதோ பீ: ||**

வசீகர மூர்த்தியாக, பிக்ஷாடன மூர்த்தியாக, இப்பேர்ப் பட்ட கோலத்தோடு அவதாரம் பண்ணின ஈசுவரனை இருதயத்தில் வைத்துக்கொண்டால் பயம் ஏது? कुतो भीः?

இப்படிச் சங்கராசார்யரவர்கள் சிவானந்தலஹரியில் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார். ஈசுவரனேதான் அவர். நம்முடைய பயங்களை எல்லாம் போக்க அவர் அவதாரம் பண்ணினார். அந்தப் பய நிவிருத்திக்கு வழி என்ன என்பதை நமக்கு உபதேசிக்க இப்படித் தம்மையும் நம்மைப்போலப் பயப்படுபவரைப்போல வைத்துக்கொண்டு பேசுகிறார்.

ஜனங்களிடத்தில் ஏற்பட்ட பரம காருண்யத்தினாலே இப்படி ஸ்தோத்திரம் செய்து கொடுத்திருக்கிறார். நம்முடைய கஷ்டம், துக்கம், பயம் எல்லாவற்றையும் போக்குபவர் ஸ்வாமிதான். அந்த ஸ்வாமியை நாம் நம்முடைய இருதயத்திலே வைத்துச் சதா தியானம் செய்துகொண்டிருந்தால் நமக்குப் பயநிவிருத்தி, பயத்தை உண்டு பண்ணும் மிருத்யு நிவிருத்தி எல்லாம் ஏற்பட்டுவிடும். 'कुतो भीः?- குதோ பீ:?' என்று நாமும் கேட்கலாம் என்பதில் சந்தேகம் இல்லை.

8

# முடிவான நிலை

வேதாந்தம் என்ற ஒரு வார்த்தை அடிக்கடி நம் காதில் விழுகிறது. யாராவது எந்த உண்மையையாவது பேச்சுவாக்கில் சொன்னாலுங்கூட, 'என்னடா வேதாந்தம் பேசுகிறாய்?' என்று பரிகாசம் செய்வதற்கும் அந்த வார்த்தை உபயோகப்பட்டு வருகிறது. பகவான் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்த கீதையிலும் வேதாந்தம் என்ற வார்த்தை வருகிறது.

वेदान्तकृद् वेदविदेव चाहम्
**வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம்**

என்று பகவான் கீதையில் தம்மைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

அந்தம் என்றால் முடிவு என்று அர்த்தம். வேதாந்தம் என்றால் வேதத்தினுடைய முடிவு என்று அர்த்தம். முடிவில் சொல்வதுதான் தீர்மானம். ஒரு பத்திரிகையில் வந்திருக்கும் ஒருவருடைய பிரசங்கம் அல்லது கட்டுரையைப் படித்து அவர் என்ன சொல்கிறார் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறோம். அவர் நிறைய எழுதியிருக்கிறார். எல்லாவற்றையும் படிக்க நேரம் இல்லை. அதனால் சட்டென்று அதனுடைய கடைசிப் பாராவைப் பார்க்கிறோம். முதலில் கொஞ்சம் பார்த்துவிட்டு அப்புறம் கடைசியில் இருப்பதைப் படித்துவிட்டால் போதும். அவர் அந்தக் கட்டுரையில் அல்லது பிரசங்கத்தில் என்ன சொல்லியிருக்கிறார் என்பது ஒரு விதமாகத் தெரிந்துவிடும். ஆரம்பத்தையும் முடிவையும் படித்துவிட்டே அதில் என்ன விஷயம் இருக்கும் என்று தீர்மானம் பண்ணிவிடலாம்.

அந்தமாதிரி வேதத்தினுடைய ஆரம்பத்தைப் பார்க்க வேண்டும்; முடிவையும் பார்க்கவேண்டும். ஆரம்பம் கொஞ்சம் ஊரைச் சுற்றுவதுபோல இருந்தாலும் இன்ன விஷயத்தைச் சொல்லப் போகிறது என்பதற்கு ஏற்ற குறிப்புக் கொஞ்சம் இருக்கும். கடைசியில் பார்த்தால் தெளிவாகத் தெரிந்து போகும். ஆரம்பத்தை **உபக்ரமம்** என்றும் முடிவை **உபஸம்ஹாரம்** என்றும் சொல்வார்கள். இரண்டையும் பார்த்தால் அந்த ஒரு புஸ்தகம் முழுவதும் எதைத் தீர்மானிக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டுவிடலாம். நடுவிலே அநேக விஷயங்கள் அந்தத் தீர்மானத்திற்கு ஆதாரமாக, உதாரணமாக, விளக்கமாக இருக்கும். உபக்ரமமும் உபஸம்ஹாரமும் ஒரே விஷயத்தைக் குறித்தால் அதைப்பற்றித்தான் நடுவில் மிகவும் விரிவாகச் சொல்லியிருக்கிருர்கள் என்று தீர்மானம் செய்து விடலாம்.

சர்க்கார் அநேக சட்டங்கள் பண்ணுகிருர்கள். ஆனல் அந்தச் சட்டத்தின் அபிப்பிராயங்களைப்பற்றி அநேக சிக்கல்கள் வரும்போது அந்தச் சட்டத்திற்கே வியாக்கியானம் பண்ணச் சட்டம் வகுப்பார்கள். 'லா ஆப் இன்டர்ப்ரடேஷன்' என்பார்கள்.

வேதம் என்பது நம் எல்லோருக்கும் பொதுவான சட்டம். அது அநாதிகாலமாக வந்தது. எல்லே இல்லாதது. ஆதி அந்தம் இல்லாத நித்தியமான சட்டம் (Eternal Law). தேசம், காலம் என்கிற வரையறை அதற்கு இல்லே. சுவாமியும் அப்படித்தான் இருக்கிருர். அவர் ஆதி அந்தம் இல்லாதவர்; காலம், தேசம் இவற்றுக்கு உட்படாதவர். அவருக்கு எப்படி எல்லே கிடையாதோ அதேமாதிரிதான் அவரது சட்டமாகிய வேதத்திற்கும் எல்லே கிடையாது. வேத வாக்கியம், காலத்திஞலோ இடத்திஞலோ ஒருபோதும் மாறுவதில்லே. அதனுல்தான் யாராவது ஒருவன் ஒன்று சொன்னுல், 'நீ சொல்வது என்ன வேத வாக்கோ?' என்று கேட்கிருேம். வேத வாக்கியம் என்ருல் மாருதது என்று வைத்துக்கொண் டிருக்கிருேம்.

புகழேந்திப் புலவர் மகாவிஷ்ணுவைப்பற்றிச் சொல்லும் போது,

''-வேதத்தின்
முன்நின்ருன்; வேழம் முதலே எனஅழைப்ப
என்என்ருன் எங்கட் கிறை"

என்று சொல்கிருர். வேதம் அநாதியானது; ஆதலாலே வேதத்தின் முதலில் நின்ருன் சுவாமி என்கிருர். வேழம் - யானே. ஆதியான வேதத்திற்கும் மூலமான விஷ்ணுவை, 'ஆதிமூலமே!'

என்று யானை அழைக்க அவர் வந்தார். ஆதலால் சுவாமிதான் எல்லாவற்றுக்கும் மூலம். வேதத்திற்கும் அவர் முதல் ஆசாமி. யார் முதல் ஆசாமியோ அவர்தாமே சட்டத்திற்கும் மூலமாக இருப்பார்.

வேதாந்தத்தில் என்ன சொல்லப்படுகிறது?

**यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।**

**யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டித:॥**

பரம்பொருளே உறுதி செய்யப்படுவதாகச் சுருதி ஆரம்பத்திலும் முடிவிலும் சொல்கிறது. இந்த மந்திரத்தைத்தான் ஆசார்யர்களைப் பார்க்கிறபோது, அவர்களுக்குப் பூர்ணகும்பத்தைக் கொடுத்துச் சொல்கிறபோது - சொல்லிக்கொண்டு வருகிறோம்.

வேதத்தின் வாக்கியம் ஒன்று இருக்கிறது. அத்தியாயம் ஒன்று இருக்கிறது. அதிலே என்ன அபிப்பிராயம் சொல்லி இருக்கிறது என்பதை எப்படித் தெரிந்துகொள்வது? எந்தத் தீர்மானத்தை வலியுறுத்த அது ஏற்பட்டிருக்கிறது எனத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் என்ன செய்வது? வேதத்தை அர்த்தம் செய்வதற்குச் சில விதிகள் இருக்கின்றன. அவற்றை மீமாம்ஸா சாஸ்திரம் சொல்கிறது. வேதம் என்கிற சட்டத்திற்கு 'லா ஆப் இன்டர்ப்ரடேஷன்' மீமாம்சைதான். அதில் வேதத்தை அர்த்தம் செய்துகொள்ளச் சில வழிகள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். 'உபக்ரமம், உபஸம்ஹாரம், அப்யாஸம், அபூர்வதா, பலன், அர்த்தவாதம், உபபத்தி' என்று பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது.

வேதத்தின் ஆரம்பமும் முடிவும் ஒரே விஷயமாக இருக்கிறது. ஆரம்பம் ஒன்று இருந்து முடிவு வேறாக இருந்தால் நிச்சயமாக இது எதைத் தீர்மானிக்கிறது என்பதில் சந்தேகம் தோன்றலாம். வேதத்தின் ஆரம்பத்தில் என்ன பதம் இருக்கிறதோ அதுவே வேதத்தின் முடிவிலும் இருக்கிறது. ஆகவே இதன் இரண்டுக்கும் நடுவில் ஆயிரம் சமாசாரம் சொல்லியிருந்தாலும் இந்த ஆயிரம் சமாசாரமும் அந்த ஒன்றைத் தீர்மானிக்கத்தான் வந்திருக்கின்றன என்று சந்தேகம் இல்லாமல் சொல்லிவிடலாம். இதற்குத்தான், **'உபக்ரமம், உபஸம்ஹாரம்'** என்று பெயர்.

ஓர் உபந்யாசத்திலோ ஒரு கட்டுரையிலோ ஒரே விஷயத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண் டிருந்தால், அப்படிச் சொல்லப்படுகிற விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவதற்காகத்தான் அந்த உபந்யாசம், அந்த வியாசம் என்று தீர்

மானித்துவிடலாம். பிரசங்கம் எதைப்பற்றி என்று தெரியாது; அழைப்பைப் பார்க்கவில்லை; நோட்டீஸ் போடவில்லை. ஆரம்பித்துப் பதினைந்து நிமிஷம் கழித்துத்தான் நாம் வந்தோம். அந்தப் பிரசங்கத்தின் நடுவில் அநேக சமாசாரங்களைச் சொல்கிறார். ஆனாலும் எது திருப்பித் திருப்பிச் சொல்லப்படுகிறதோ அதுதான் அந்தப் பிரசங்கத்தின் தீர்மானம் என்று முடிவு செய்யலாம். ஒன்றை அடிக்கடி திருப்பித் திருப்பிச் செய்வதுதான் அப்யாஸம். ஏதாவது ஒன்றை மனனம் பண்ண வேண்டுமென்றால் திருப்பித் திருப்பி உருப் போடுகிறோம். அப்பியாஸம்; தண்டால் முதலியன போடுகிறார்கள்; அது அப்பியாஸம். அப்படி ஒரு விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவதற்கு உபயோகப்படுவது - அப்யாஸ: (अभ्यासः). திருப்பித் திருப்பிச் சொல்லப்படும் விஷயந்தான் அதன் முடிவான தீர்மானம் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

இன்னொன்று - அபூர்வதா (अपूर्वता). ஒரு பிரசங்கத்தை முதல் நாள் கேட்டிருக்கிறோம். மறுநாள் கேட்கிறோம். இன்றும் கேட்கிறோம். நேற்று, நேற்றுக்கு முந்தின நாள் சொன்ன விஷயங்களை இன்றைக்கும் சொல்லலாம். இருந்தாலும் இதுவரைக்கும் சொல்லாத சமாசாரம் இன்றைக்கு ஏதாவது சொன்னால் அதுதான் இன்றைப் பேச்சின் தீர்மானம். இதுவரைக்கும் சொல்லாத ஒன்றை இன்றைக்கு அதிகப்படியாகச் சொன்னால் அதிகப்படியாகச் சொல்கிற புது விஷயந்தான் இன்றைப் பிரசங்கத்தின் முக்கியமான தீர்மானம் என்று தெரிந்துகொள்ள வேண்டும். நடுவில் என்ன என்ன சமாசாரங்கள் சொன்னாலும் அவை எல்லாம் இந்த ஒன்றுக்கு அநுகுணமானவையே. இப்படி ஒரு விஷயத்தைத் தீர்மானம் பண்ணுவதற்கு உபயோகப்படுவது 'அபூர்வதா' (புதிதாகச் சொல்லப்படும் விஷயம்).

இப்படியேதான் புஸ்தகத்தில் அநேக விஷயங்கள் சொல்லியிருந்தாலும் எதற்குப் பலன் சொல்லியிருக்கிறதோ, 'இப்படிச் செய்தால் இன்ன பலன் வரும்' என்று சொல்லியிருக்கிறதோ அதுதான் அந்தப் புஸ்தகத்தின் தீர்மானம் என்று தெரிந்துகொள்ள வேண்டும். இதற்குத்தான் 'பலம்' (फलम्) என்று பெயர்.

அநேக சமாசாரங்களைச் சொல்லிக்கொண்டு வருகிறோம். நடுவில் ஒரு கதை சொல்லி ஒன்றைப்பற்றித் தோத்திரம் பண்ணுகிறோம். எதைப்பற்றித் தோத்திரம் பண்ணுகிறோமோ அந்த விஷயந்தான் பிரதானம். அதைச் சொல்வதற்காகத்தான் கதை எல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது என்று தீர்மானம்

பண்ணிவிடலாம். கதைகளை ஆதாரமாகச் சொல்லி ஒன்றைத் தோத்திரம் பண்ணுவதற்கு, 'அர்த்தவாத:' (अर्थवादः) என்று பெயர். இதன் மூலமும் தீர்மானத்தைக் கண்டுபிடித்துவிடலாம். ஒன்றைச் சொல்லி அதற்குக் காரண நிருபணம், பொருத்தம் முதலியவை விளக்கப்பட்டிருந்தால் அந்த விஷயந்தான் அந்த வியாசத்தின் முக்கியமான கருத்து என்று கொள்ளலாம். இந்த முறைக்கு 'உபபத்தி' என்று பெயர்.

उपक्रमोपसंहारौ अभ्यासोऽपूर्वता फलम् ।
अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये ॥

உபக்ரமோபஸம்ஹாரௌ அப்யாஸோபூர்வதா பலம் |
அர்த்தவாதோபபத்தீ ச லிங்கம் தாத்பர்யநிர்ணயே ||

என்று இந்த ஆறு விதமான லிங்கங்களினால் ஒன்றைத் தீர்மானம் செய்துகொள்ளலாம் என்று மீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. இதற்குத் **தாத்பர்யலிங்கம்** என்று பெயர். சம்ஸ்கிருதத்தில் **'லிங்கம்'** என்றால் அடையாளம் என்பது ஒரு பொருள். **குறி** என்றும் சொல்லலாம். **குறிப்பு** என்றும் சொல்வது உண்டு. ஓர் உபந்யாசமோ ஒரு புஸ்தகமோ எந்தத் தீர்மானத்தைச் சொல்கிறது, எந்த முடிவை வற்புறுத்துகிறது என்பதை இந்த ஆறு விதமான குறிப்புக்களை வைத்துக் கொண்டே நாம் தீர்மானம் பண்ணிவிடலாம்.

வேதத்தில் சொல்லப்பட்ட ஒரு வாக்கியமோ ஓர் அத்தியாயமோ எந்த விஷயத்தைத் தீர்மானிக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க இந்த ஆறு தாத்பர்ய லிங்கங்களைக் கொண்டே, ஆறு விதமான குறிப்புகளைக் கொண்டே தீர்மானம் செய்துகொள் என்று சொல்கிறது மீமாம்ஸா நியாயம்.

இந்த ஆறு குறிப்புகளும் ஒன்றில் இருந்துவிட்டால் சந்தேகம் இல்லாமல் அது இன்னதைத்தான் தீர்மானிக்கிறது என்று கண்டுபிடித்துவிடலாம். ஒன்று இருந்தாலும் போதும். ஒரே விஷயத்தில் ஆறு லிங்கங்களும் இருந்தால் சந்தேகமின்றித் தெளிவாகத் தீர்மானம் பண்ணலாம்.

அந்தச் சட்டப்பிரகாரம் வேதத்தைப் பார்த்தால் வேதத்தில் ஆரம்பந்தான் அதன் முடிவாக இருக்கிறது. வேதத்தில் ஆரம்பத்தில் இருக்கும்படியான ஒரு ஸ்வரமே, அந்தத்திலும் இருப்பதால் அதுதான் வேதத்தின் முடிவு என்று தீர்மானம் பண்ணிவிடுகிறோம்.

சம்ஸ்கிருதத்திலே 'இதம்' என்றால் இது என்று அர்த்தம். 'அத:' என்றால் அது என்று அர்த்தம். அது என்பதுபோலத்

'தத்' என்று ஒரு வார்த்தை இருக்கிறது. இது என்பதைச் சுட்ட 'ஏதத்' என்று ஒரு வார்த்தை இருக்கிறது. இதம், அத:, ஏதத், தத் என்ற நான்கு பதங்களுக்கும் அர்த்தம் சப்த புஸ்தகத் தில் சொல்லியிருக்கிறது.

इदमस्तु सन्निकृष्टं

**இதமஸ்து ஸந்நிக்ருஷ்டம்**

இதம் என்ருல் நமக்குக் கிட்டே இருப்பது, நேரே இருப்பது, எதிராக இருப்பது என்று அர்த்தம்.

समीपतरवर्ति चैतदो रूपम् ।

**ஸமீபதரவர்த்தி சைததோ ரூபம் |**

நமக்கு எதிராகக் கண்முன்னுல் இருப்பது இதம். அதைக் காட்டிலும் மிகவும் கிட்ட இருப்பது ஏதத்.

अदसस्तु विप्रकृष्टं

**அதஸஸ்து விப்ரக்ருஷ்டம்**

அத: என்பது தூரத்தில் இருப்பது.

तदिति परोक्षे विजानीयात् ॥

**தததி பரோக்ஷே விஜாநீயாத் ||**

தத் என்பது நமக்குத் தெரியாமல் மறைவில் இருப்பது.

தமிழிலேகூட, 'இது' என்ருல் அருகில் இருப்பதையும், 'அது' என்ருல் தூரத்தில் இருப்பதையுந்தான் குறிக்கின்றன. அப்படித்தான் ஸம்ஸ்கிருதத்திலும் 'இதம்' என்ருல் சமீபத்தில் இருக்கிற ஒன்றைக் குறிக்கிறது. 'அத:' என்ருல் தூரத்தில் இருக்கும்படியான ஒன்றைக் குறிக்கிறது.

ஐந்நூறு மைல்களுக்கு ஒரு மொழியாக அநேக மொழிகள் இருந்தாலும், இந்த மொழிகள் எல்லாவற்றையும் கொஞ்சம் அலசிப் பார்த்தால் - தமிழ், மலேயாளம், கன்னடம், ஸம்ஸ் கிருதம், லாட்டின், க்ரீக், இங்கிலீஷ் - எல்லா மொழிகளுக்கும் பொதுவான ஓர் உறவு இருப்பதைப் பார்க்கலாம்.

'தத்' என்ருல் அது என்று அர்த்தம் என்று சொன்னேன். எது வெகு தூரத்தில் இருக்கிறதோ அதுதான் அது. 'அதிதூரே விஜாநீயா:' (अतिदूरे विजानीयाः) 'வெகு தூரத்தில் இருக்கிறதே அதுதான் சுவாமி' என்று அர்த்தம் சொல்லிவிட்டார்கள். அது தான் 'தத்துவம்' என்று வேதத்தின் அந்தத்திலே - வேதாந் தத்திலே - சொல்கிறது.

புருஷத்துவம், மஹத்துவம் என்று அநேகம் வார்த்தைகள் இருக்கின்றன. அவற்றின் கடைசியில் எல்லாம் இருக்கும்படி

யான த்வம் என்பதற்குத் 'தன்மை' என்று பொருள். மஹத்தின் தன்மை மஹத்துவம். தத்துவம் என்றால் 'தத்'தினுடைய தன்மை என்று பொருள். தத்துவ விசாரம், தத்துவ உபதேசம் என்பவற்றிற்குத் தத்தினுடைய தன்மையை விசாரிப்பது, தத்தினுடைய தன்மையை உபதேசம் செய்வது என்றுதான் பொருள்.

வெகு தூரத்தில் இருக்கும்படியானதுதான் தத். வெகு தூரத்தில் இருக்கிறவனை 'அதோ' என்று காட்டுகிற விரலுக்கு - பெரிய ஆளை - பெருமாளைக் காட்டுகிற விரலுக்கு 'ஆள்காட்டி விரல்' என்று பெயர்.

ஸம்ஸ்கிருதத்தில் ஆள்காட்டி விரல் என்று பேர் இல்லை. தர்ஜனி என்று பெயர். தர்ஜனம் என்றால் அதட்டுகிறது என்று அர்த்தம். 'இதோ பார் - உம்!' என்று அதட்டுகிறபோது இந்த விரலைத்தான் காட்டுகிறோம், அல்லவா? அதனால் 'தர்ஜனி' என்றார்கள். அந்தப் பெயரைவிட மிகவும் பொருத்தம் 'ஆள் காட்டி விரல்' என்கிற பேர்தான்.

தூரத்திற்கு எல்லாம் தூரத்தில் இருக்கிறவர் சுவாமி. அவரை, 'தத் - அது' என்று காட்டுகிற விரல் இது. வேதம், 'தத்' என்று பரம்பொருளைக் குறிக்கிறது.

'தூரத்திற்கு எல்லாம் தூரமாக ஸ்வாமி இருக்கிறார்' என்றால் நமக்கு அதனால் என்ன பயன்? ''அப்படி இல்லை. வெகு தூரத்தில் இருக்கிறவர்தாம் மிகவும் அருகிலும் இருக்கிறார்'' **दूराद्दूरे अन्तिके च - தூராத்தூரே அந்திகே ச** என்று வேதம் உணர்த்துகிறது.

கல்யாணம் ஆகவேண்டிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெற்றோர் ஒரு பையனைப் பார்த்து அவனுக்கு அவளைக் கல்யாணம் பண்ணிக்கொடுக்கத் தீர்மானித்திருந் தார்கள். ஆனால் அந்தப் பெண், 'புருஷர்களில் எல்லாம் உயர்ந்தவன் எவனோ அவனைத்தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்' என்று பிடிவாதம் பண்ணினாள். அவர்களும், 'உன் இஷ்டப்படியே போ' என்று விட்டுவிட்டார்கள்.

அந்தப் பெண், 'புருஷர்களுக்குள்ளேயே உயர்ந்தவன் ராஜாதான். கல்யாணம் பண்ணிக்கொண்டால் அவனைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்வேன்' என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு, அவ்வூர் ராஜா பின்னாலேயே - அவன் எங்கே போனாலும் - போய்க்கொண்டிருந்தாள். என்றைக்காவது, ''நீ ஏன் என் பின்னாலேயே வருகிறாய்?'' என்று ராஜா கேட்டால், ''புருஷர்

களுக்குள்ளேயே உயர்ந்தவனைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்கொள்வது என்று தீர்மானித்துவிட்டேன். நீதான் உயர்ந்தவன் என்பது என் அபிப்பிராயம். என்னை மணந்துகொள்'' என்று சொல்வது, அவன் மணந்துகொண்டால் மணந்து கொள்ளட்டும்; இல்லாவிட்டால் கல்யாணம் ஆகாமலேயே செத்துப் போனாலும் போகிறது என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு அந்த ராஜாவுக்குப் பின்னாலேயே போய்க்கொண் டிருந்தாள்.

ஒரு நாளைக்கு ராஜா பல்லக்கில் போய்க்கொண் டிருந்த போது ஒரு சாமியார் எதிரே வந்தார். ராஜா பல்லக்கை விட்டுக் கீழே இறங்கி அந்தச் சாமியாருக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுத் திரும்பவும் பல்லக்கில் ஏறிக்கொண்டு போனான்.

இதை அந்தப் பெண் பார்த்தாள். 'அடடா! ராஜாதான் புருஷர்களுக்குள் உயர்ந்தவன் என்று எண்ணி இத்தனை நாளும் ஏமாந்து போய்விட்டேனே! ராஜாவைக் காட்டிலும் உயர்ந்தவர் சாமியார்போல் இருக்கிறதே. கல்யாணம் பண்ணிக்கொண்டால் இந்தச் சாமியாரைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும்' என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு அந்தச் சாமியார் பின்னாலேயே சுற்ற ஆரம்பித்துவிட்டாள்.

அந்தச் சாமியாரோடு போகும்போது ஒரு நாள் அவர் தெருக்கோடியில் ஓர் ஆலமரத்தடியில் இருந்த பிள்ளையாருக்கு முன் நின்று குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போடுவதை அவள் பார்த்தாள். ''சாமியாரைவிடப் பெரியவர், உயர்ந்தவர், இந்தப் பிள்ளையார்தான் போலிருக்கிறது. சரி, பிள்ளையாரைத் தான் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும்'' என்று தீர் மானம் பண்ணிக்கொண்டாள். சாமியாரோடு போகாமல் அந்தப் பிள்ளையாருக்குப் பக்கத்தில் உட்கார்ந்துவிட்டாள். அவளைத் தவிர அந்தப் பிள்ளையாரிடம் யார் அடிக்கடி வரப் போகிறார்கள்! அவர் இருக்கும் இடம் கோயில்கூட இல்லை; மரத்தடி. தெருவோடு போகிற நாய் ஒன்று அந்தப் பிள்ளையார் மேலே காலைத் தூக்கிக்கொண்டு சிறுநீர் பெய்தது. அதைப் பார்த்தவுடன், 'அடடா! இந்தப் பிள்ளையாரையும்விட உயர்ந்தது இந்த நாய்தான்' என்று அந்த நாயைத் துரத்திக்கொண்டு அவள் போக ஆரம்பித்துவிட்டாள்.

தெருவில் ஓடுகிற அந்த நாயை ஒரு பையன் கல்லால் அடித்தான். அது 'வள் வள்' என்று குரைத்துக்கொண்டு ஓடிவிட்டது.

'ஏண்டா அந்த நாயை அடித்தாய்?' என்று அந்தப் பையனை ஒருவன் பிடித்துக்கொண்டு அதட்டினான்.

''நாயைக் காட்டிலும் நாயை அடித்தவன் பெரியவன் என்று எண்ணினேன். அடித்தவனையே திருப்பி அடிக்கிற இவன் தான் உயர்ந்தவன்' என்று தீர்மானம் பண்ணிவிட்டாளாம் அந்தப் பெண்.

கடைசியில் கண்டுபிடித்த அந்தப் பிள்ளைதான் அவளுடைய அப்பா அம்மா முதலில் அவளுக்குத் தீர்மானம் பண்ணியிருந்த பிள்ளை. 'வெகு தூரத்தில் யாரோ இருக்கிறுன் இருக்கிறுன்' என்று எண்ணிக்கொண்டே சுற்றினுள். கடைசியில் அவன் அவள் அருகிலேயே இருந்தவனுகப் போய்விட்டான். இப்படி லௌகிகமாக ஒரு கதை சொல்வது உண்டு.

'எங்கோ தூரத்தில் இருக்கிறுன் சுவாமி என்று ஊரெல்லாம் சுற்றுகிறுயே! தெரியாதவரையில் அவன் தூரத்தில் இருப்பவன்தான். ஊரெல்லாம் சுற்றினுலும் அவனைப் பார்க்க முடியாது. அவன் உன்கிட்டேயே இருப்பவன்தான்.' दूराद्दूरे अन्तिके च - தூராத்தூரே அந்திகே ச. 'தூரத்திற்கெல்லாம் தூரம், சமீபத்திற்கெல்லாம் சமீபம்' என்று சுருதி சொல்கிறது.

ஹொரைஸன் என்பார்களே, தொடுவானம்; இங்கிருந்து பார்த்தால் ஆகாசமும் பூமியும் அந்த இடத்தில் சேருவதுபோல இருக்கும். அங்கே ஒரு பனைமரம் இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். 'அந்தப் பனைமரத்தடிக்குப் போனுல் பூமியும் வானமும் சேருகிற இடத்தைப் பிடித்து விடலாம்' என்று இங்கே இருந்து பார்க்கிறபோது நமக்குத் தோன்றும். ஆனுல் அங்கே போனுல் தொடுவானமும் அங்கிருந்து வெகு தூரத்திற்குப் போய்விட்டது தெரியும். நாம் போகப் போக அது போய்க்கொண்டே இருக்கும். 'இந்தப் பனமரத்தடியில் வந்து நின்றுல் தொடுவானம் வெகு தூரத்திற்குப் போய்விட்டதே. அதைப் பிடிக்க இன்னும் நாமும் போகவேண்டும்' என்று போய்க்கொண் டிருந்தால் அதைப் பிடிக்க முடியுமா? இந்தப் பனைமரத்துக்கு வெகு தூரத்தில் இருந்து பார்க்கும்போது இந்த இடத்தில்தான் தொடுவானம் இருப்பதுபோல இருந்தது. இந்த இடத்திற்கு வந்தவுடன் அது நம்மை விட்டு இன்னும் வெகு தூரத்திற்குப் போய்விட்டது போலத் தெரிகிறது. ஆகவே அது எங்கே இருக்கிறது? 'நீ இருக்கிற இடத்தில்தான் இருக்கிறது. நீ இருக்கிற இடந்தான் அது. அப்படி அது அது என்று சொல்லப்படுகிற, வெகு தூரத்தில் இருக்கிற சுவாமி உன் கிட்டேயே—உன் உள்ளேயே இருக்கிறது.' 'தத்-த்வம், அது நீதான்' என வேதம் உணர்த்துகிறது.

தத், த்வம் என்ற இரண்டு வார்த்தைகளும் சேர்ந்துதான் தத்வம் என வழக்கில் வந்திருக்கிறது.

'நான் நான் என்று எதை நினைத்துக்கொண் டிருக்கிருயோ அதுதான், அந்த அறிவுதான், சுவாமி. அந்தப் பிரகாசம் உன்னிடத்தில் இல்லையென்றுல் உன்னுல் சுவாமி என்றே நினைக்க முடியாது. 'நான் என்று அறிகிறேன். நான் என்று நினைக்கிறேன்.' அப்படி நினைக்கிற அறிவு, அப்படி அறிகிற அறிவு எதுவோ அதுதான், வெகு தூரத்தில் இருந்து ஏதோ பண்ணிக்கொண்டு இருக்கிறது என்று நினைக்கிருயே-அது-த்வம், நீதான்.'

இதுதான் வேதத்தின் முடிவில் சொல்வது. அந்தத் தத்வத் தைத் தேடித் தேடித் தூரப் போய்க்கொண் டிருக்கிரோம். 'நான் தேடுகிறேன்' என்று அறியும்படியான சக்தி எதுவோ, அந்தச் சக்தியை உனக்குக் கொடுப்பது எதுவோ, அது உன் உள்ளேயே உட்கார்ந்துகொண் டிருக்கிறது, அது நீதான். 'தத் தத் என்று சொல்லும்படியான அந்தச் சுவாமி நீதான்' என்று வேதம் சொல்கிறது.

வேதத்தின் முடிவில் இருக்கும்படியான பாகத்திற்கு உப நிஷத்து என்று பெயர். அது, 'இது இது' என்று எதைச் சொல்லிக்கொண் டிருக்கிறதோ அந்த இதம் என்பது மூலம் இல்லாதது அன்று. மூலம் இல்லாமல் இது என்று ஒன்று தோன்றுது.

விதை இல்லாமல் மரம் தோன்றுது. இவ்வளவு பிரபஞ் சத்திற்கும் - மலைகள், சமுத்திரம், ஆகாசம், பூமி, மாடு, மனுஷன், கோபம், பயம், பிரியம், இந்திரியங்கள், சக்தி இப்படி எல்லா வற்றுக்கும் - இது என்று சுட்டப்படும் எல்லாவற்றுக்கும் மூலம் உண்டு. பார்க்கப்படுகிறது, நினைக்கப்படுகிறது, உஷ்ணம் சீத ளம் என்பதாக ஸ்பர்சிக்கப்படுகிறது, மனசினுலே இந்திரியங் களினுலே ஆராயப்படுகிறது, அநுபவிக்கப்படுகிறது - இவை எல்லாவற்றுக்கும் இதம் என்றுதான் பெயர். புத்திசாலித் தனம், ஆச்சரியமான காரியங்கள், விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள்- இன்னும் வரப்போகும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் முதலிய எல்லாம்-புலன்களால் அறியப்படுவன எல்லாம் ஒரு மூலத்தையே காரணமாக உடையன. மூலம் இல்லாது போனுல் இது என் கிறது ஒன்றுமே இராது. மூலம் இல்லாமல் ஒரு பொருள் கிடையாது. எல்லாவற்றுக்கும் ஒரு மூலம் இருக்கிறது. மனுஷ்ய சரீரம் என்றுல் பீஜம் இருக்கிறது. மரம் என்றுல் அதற்கு ஒரு விதை இருக்கிறது. மூலம் இல்லாமல் ஒன்றுமே கிடையாது.

அதற்கு என்ன வேண்டுமானாலும் பெயர் வைத்துக்கொள்ளுங் கள். என்ன என்ன சக்தி இருக்கிறதோ அவ்வளவும் அந்த மூலத்தில் இருக்கவேண்டும்.

புளியங்கொட்டை முளைக்கிறபோது பார்த்தால் தெரியும். முளை கண்டவுடன் அந்த விதையை இரண்டாகப் பிளந்து பார்த்தால் அதற்குள் ஒரு மரமே இருப்பது தெரியும். பெரிய மரமாக வளரக்கூடிய சக்தி அதனிடத்திலேயே இருக்கிறது. எல்லா விதைகளிலும் அப்படியே இருக்கும் என்றாலும் புளியங் கொட்டையில்தான் நன்றாக நாம் பார்க்க முடியும். உலகத்திற் குள் எவ்வளவு சக்தி இருக்கிறதோ, எவ்வளவு மேதை இருக் கிறதோ, சாமர்த்தியம் இருக்கிறதோ அவ்வளவும் அந்த மூல மான சாமிக்குள் இருக்கவேண்டும். மூலம் இல்லாமல் ஒன்றுமே தோன்றாது.

வேதம் முரசறைவதாவது, 'இது இது என்று தோன்றும் பொருள்கள் எல்லாம், ஒரு மூலம் இன்றித் தோன்றவில்லை.' மூலத்தில் இருக்கும்படியான சக்தி எதுவோ அதுவேதான் உலகம் முழுவதும் வியாபித்துக்கொண் டிருக்கிறது. அந்த மூலம் எங்கே இருக்கிறது? இது இது என்று பார்க்கப்படுவனவற்றுள் உள்ளே இருந்து பார்த்துக்கொண் டிருக்கிறதுதான் மூலம்.

பெரிய நிலைக்கண்ணாடியை வைத்துவிட்டு அதில் பார்க் கிறோம். நம் உருவம் அதில் தெரிகிறது. நான்கு நிலைக் கண்ணாடிகளை வரிசையாக வைத்துவிட்டுப் பார்த்தால் ஆயிரம் உருவங்கள் தெரிகின்றன. அந்த ஆயிரத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறவன் ஒருவன்தான். இப்படி உள்ளே இருந்து, 'இது இது' என்று பார்த்துக்கொண் டிருக்கிறானே, அவன்தான் சுவாமி. பார்க்கிற பொருள்தான் பார்க்கப்படுகிற வஸ்துக் களுக்கு எல்லாம் மூலம். அந்த மூலம் என்பது அறிவுதான். அறிவு என்பதே எல்லா ஜகத்திற்கும் காரணம். அந்த அறிவு எங்கே இருக்கிறது? உன்னிடமே இருக்கிறது. அகண்டமாக இருக்கக்கூடிய இது உன்னிடம் கண்டமாக இருக்கலாம்.

இது சின்ன பல்பு. அது நீல விளக்கு. இது பச்சை விளக்கு. விளக்கில் அநேக உருவங்கள் இருக்கின்றன. இருந் தாலும் அவை எல்லாவற்றுக்குள்ளும் இருக்கும் சக்தி - மின்சார சக்தி - ஒன்றுதான். எங்கும் வியாபித்திருக்கிற மின்சக்திதான் இங்கே இந்த விளக்குக்குள் இருந்து பிரகாசிக்கச் செய்கிறது; விசிறிக்குள் இருந்து சுற்ற வைக்கிறது. இந்த எல்லாக் காரியங் களுக்கும் மூலமான சக்தி ஒன்று. கம்பிக்குள் இந்தச் சக்தி வருகிறபோது கண்டமாகிறது. இயற்கையில் பளீர் பளீர் என்று

மின்னும்போது, ஜலம் அருவியாகக் கொட்டும்போது, அங்கெல்லாம் வியாபித்திருப்பது இந்தச் சக்திதான். அப்படி, வேதத்தினுடைய அந்தமாக இருக்கக்கூடிய 'தத்'தினுடைய தன்மை 'த்வம்' - நீதான். உன்னிடம் இருக்கும் மூலந்தான் ஸர்வக்ஞனாகவும் ஸர்வசக்தனாவும் இருக்கிறது. எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கிறது.

இவை எல்லாவற்றையும் சேர்த்துக் கீதையில் பகவான் ஒரு சுலோகத்தில் சொல்லியிருக்கிறார். ஒன்று என்ன, அதிலுள்ள எழுநூறு சுலோகங்களும் தத்வந்தான். ஒன்றைச் சொன்னாலே போதும்; இவ்வளவும் சொல்ல வேண்டாம். இருந்தாலும் கதாரூபமாக இத்தனையையும் சொன்னால் ஏதாவது ஒரு சுலோகத்திலாவது இதைப் படிக்கிறவர்களுடைய மனம் ஒட்டிக் கொள்ளாதா என்கிற எண்ணத்தால்தான் அத்தனை சுலோகங்களும் இருக்கின்றன.

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் |
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ||

பகவத் கீதையில் சில சுலோகங்கள் காதில் விழுந்தனவாகத் தோன்றும். சொன்னால் கேட்டாற்போல நினைவுக்கு வரும்.

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

அநந்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||

நம்முடைய யோக க்ஷேமங்களை எல்லாம் தாங்குகிறேன் என்று பகவானே சொல்வதால் இந்தச் சுலோகம் எல்லாருக்கும் தெரிந்திருக்கும்.

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத |
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ||

இந்தச் சுலோகமும் எல்லாருக்கும் ஞாபகம் இருக்கும். இப்படிச் சில சுலோகங்கள் தெரியும். சில சுலோகங்களைக் கேட்டால், முன்பு கேட்டாற் போலவே இராது.

நான் முதலில் ஒரு சுலோகம் சொன்னேனே - அதை எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? கேட்டாற் போலவாவது

இருக்கிறதா? பகவத் கீதையிலேயே இருக்கிறதோ இல்லையோ என்று சந்தேகம் வந்துவிட்டதோ? பகவத் கீதையில்தான் இருக்கிறது. வார்த்தைகளுங்கூட வாயில் நுழையாத நெரடாக இருப்பதனால்தான் இரண்டு மூன்று தரம் சொன்னேன்.

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் |
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ||

ஜ்ஞேயம் என்றால் அறிந்துகொள்ளத் தக்கது என்று பொருள். எது அறியத்தக்கது? तत् - தத் என்பது அறியத்தக்கது. அந்தத் 'தத்' என்பதற்கு 'பூதபர்த்ரு' (भूतभर्तृ), 'க்ரஸிஷ்ணு' (ग्रसिष्णु), 'ப்ரபவிஷ்ணு' (प्रभविष्णु) என்று மூன்று அடைமொழிகள், விசேஷ குணங்கள் போட்டுச் சொல்லியிருக்கிறார் பகவான்.

முதல் குணம் - பூதபர்த்ரு. பர்த்ரு என்றால் தாங்குகிறது என்று அர்த்தம். பர்த்தா என்பவன் தாங்குகிறவன். ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டுவிட்டால் அவள் பொறுப்பை இவன் தாங்கி ஆகவேண்டும்; அப்போதுதான் பர்த்தா என்ற பெயர் உண்மையாகும். அவளுடைய சுகதுக்கங்களுக்கெல்லாம் இவன் பர்த்தா ஆகவேண்டும். இவன்தான் அவளைத் தாங்குகிற பொறுப்பை உடையவன் - பர்த்தா.

பூதபர்த்ரு என்றால், பூதத்தைத் தாங்குபவன் என்று அர்த்தம். பூதம் என்றால் எல்லாப் பிராணிகளையும் சகல ஜட வஸ்துக்களையும் குறிக்கும். பூதம் என்பது ஆகாசம், பூமி, அக்கினி, வாயு, தண்ணீர் என்னும் பஞ்ச பூதங்களையும் குறிக்கும். எல்லாப் பொருள்களும் மொத்தத்தில் பூதந்தான். வேறோர் அர்த்தத்தில் பூதம் என்றால் உயிருள்ள பிராணிகள் எல்லாவற்றையும் குறிக்கும்; மரம், செடி, கொடி, பிராணி, மனிதன், எல்லாவற்றையும் குறிக்கும். நாய்க்குடை கூட அதில் சேர்ந்ததுதான். மரம் நூற்றுக்கணக்கான வருஷங்கள் இருக்கும். நாய்க்குடை தோன்றிய சில நாட்களில் அழிந்துவிடும். பூமியிலே நாம் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறோம். பட்சிகள் ஆகாசத்திலே சஞ்சரிக்கின்றன; பூமிக்கு வருகிறபோதுதான் இரண்டு கால்களை உபயோகப்படுத்திக் கொள்கின்றன. பூமிக்கே வராத பறவைகள்கூட இருக்கின்றன. சில தண்ணீருக்குள்ளேயே வசிக்கின்றன. இப்படிப் பறப்பன, ஊர்வன, நடப்பன, நீந்துவன, நிலையாக இருப்பன, எதுவாக இருந்தாலும் எல்லாவற்றுக்கும் பூதம் என்று பெயர்.

மரங்கள் ஓர் இடத்தில் இருந்துகொண்டே வளர்கின்றன. தாவரங்கள் எல்லாம் இப்படித்தான். ஆனால் பவளம் என்பது நிற்கிற நிலே, சஞ்சரிக்கிற நிலே இரண்டுக்கும் நடுவில் இருக்கிறது. அதாவது கடலில் ஓர் இடத்தில்தான் வேர் ஊன்றிக் கொண்டிருக்கும். ஆனால் அப்படியே படர்ந்துகொண்டு அநேக தூரம் சஞ்சாரம் பண்ணும். அதையும் சேர்த்துத்தான் - உயிருள்ள, வளர்ச்சியுற்ற எல்லாவற்றையும் சேர்த்தே பூதம் என்று பெயர் கொடுத்தார்கள்.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।

ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶே அர்ஜுந திஷ்டதி |

என்று பகவான் வேறோர் இடத்தில் சொல்கிறார். உணர்ச்சி இருந்தால் இருதயம் இருக்க வேண்டும். அதனால் இருதயம் உள்ளவற்றுக்கெல்லாம் பூதம் என்று பெயர். இவ்வளவு விதமான பூதங்களேயும் பர்த்ரு - தாங்கிக்கொண்டும் ரக்ஷித்துக்கொண்டும் இருக்கிற ஒரு வஸ்து எதுவோ அதுதான் 'तत्' (தத்). அப்புறம் - க்ரஸிஷ்ணு (ग्रसिष्णु). இவ்வளவும் ஜீர்ணமாகப் போய்விட்டால் - ஜீர்ணமாகப் போனபிறகு அவற்றை எது சாப்பிடுமோ அதுதான், 'தத்'. நம்முடைய உடம்பு அநேகம் பொருள்களே, காய்கறிகளே ஜீர்ணம் பண்ணிக்கொண்டுதான் வளர்கிறது. உயிருள்ளவை எல்லாம் அப்படித்தான். இந்த எல்லாப் பூதங்களும் ஜீர்ணமாகிக் கீழே விழுந்தால் அவை எல்லாவற்றையும் விழுங்குவது எது? तत् - அது க்ரஸிஷ்ணு. எல்லாவற்றையும் சாப்பிடுகிறது.

மரம் பூமியில் உற்பத்தியாகிறது. மரத்தைத் தாங்குவது-ரக்ஷிப்பது - பூமி. முடிவில் மரம் மடிந்துபோன பிறகு, அதைச் சாப்பிடுவதும் பூமிதான்.

அந்த மாதிரி எல்லாப் பூதங்களேயும் - உயிருள்ளது, உயிர் இல்லாதது - ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள் எல்லாவற்றையும் தாங்குகிறது எதுவோ, பூதபர்த்ரு எதுவோ அதுதான் க்ரஸிஷ்ணு; எல்லாவற்றையும் ஜீர்ணமாகப் போனபிறகு விழுங்கி விடுகிறது. விழுங்கின பிறகு, சாப்பிட்ட பிறகு மறுபடியும் அவை எல்லாவற்றையும் சிருஷ்டிப்பதும் உண்டாக்குவதும் அதுதான்: ப்ரபவிஷ்ணு ச (प्रभविष्णु च) - படைப்பதும் அதுதான்.

भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥

பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ||

'பூதங்களே எல்லாம் தாங்குவதும் அதுதான்; ஜீர்ணமாகப் போனபிறகு அவற்றை எல்லாம் சாப்பிடுவதும் அதுதான்;

திரும்ப எல்லாவற்றையும் படைப்பதும் அதுதான். அது அறியத் தக்கது' என்று, கீதையிலுள்ள இந்தச் சுலோகத்தின் உத்தரார்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தச் சுலோகத்தின் பூர்வபாகம் இதுதான்:

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ।

அது அறியத்தக்கது-தத் ஜ்ஞேயம் என்று சொல்லி, அது தான், 'பூதபர்த்ரு ச, க்ரஸிஷ்ணு ச, ப்ரபவிஷ்ணு ச' என்று சொல்லியாகிவிட்டது இல்லையா? அப்படியானால் அது எங்கே இருக்கிறது?

भूतेषु विभक्तं इव च स्थितम्

பூதேஷு விபக்தம் இவ ச ஸ்திதம்

எல்லாப் பூதங்களிடத்தும் பிரிந்து பிரிந்து இருக்கிற வஸ்துக்களிடத்தில் இருக்கிறது. அப்படியானால் பிரிந்து பிரிந்து இருக்கிற சாமான்கள் எல்லாம் வெவ்வேறாக இருந்தாலும் அது வேறேயோ? இல்லை, இல்லை. அது ஒன்றுதான்.

अविभक्तं

அவிபக்தம்

அது பிரிவுபடாதது; ஒன்றுதான். உலகத்தில் இருக்கும் வஸ்துக்கள் - உயிர் உடையது - உணர்ச்சி உடையது - அறிவு உடையது - ஒன்றுமே இல்லாதது - எந்த எந்த மாதிரியாக இருந்தாலும் அவை எல்லாவற்றுக்கும் மூலமான வஸ்து ஒன்றுதான். அது அவிபக்தம்; பிரிவு இல்லாதது.

அது பிரியாமல் ஒரே வஸ்துவாக இருந்தாலும் - அவன் வேறு, இவன் வேறு, மரம் வேறு, மீன் வேறு என்று இப்படி வேறு வேறுபட்டு இருக்கிற பொருள்களிடத்திலே இருக்கும் போது அந்த வேறுபடாத, பிரிவுபடாத வஸ்து பிரிவுபட்டது போல் தோன்றுகிறது.

अविभक्तं च भूतेषु विभक्तं इव च स्थितम् ।

அவிபக்தம் ச பூதேஷு விபக்தம் இவ ச ஸ்திதம் ।

பொருள்கள் வேறுபடுவதனாலே அது வேறுபடுவதில்லை; அது அவிபக்தமானதுதான்; பிரிவுபடாததுதான்; இருந்தாலும் பொருள்கள் வேறுபட்டு இருப்பதனாலே அதுவும் வேறுவேறாக இருப்பதுபோலத் தோன்றுகிறது. உண்மையில் அந்தப் பொருள் ஒன்றே. வெவ்வேறு இடத்தில் அது இருக்கிறதனால் அது விபக்தம், அதுவும் பிரிந்து இருக்கிறது என்று நினைத்துக்

கொண்டிருக்கிறார்கள் எல்லோரும். 'நான், நான்' என்கிறாயே, அதுதான் அது. அதுதான் எல்லோரிடத்திலும் இருக்கிறது.

தன்னை அறிந்துவிட்டால் தத்.

'உன்னிடத்தில் இருக்கும் வஸ்துதான் எல்லாரிடத்திலும் இருக்கிறது. தனித் தனியாக இருப்பதனாலே அது வேறுபடுவ தில்லை. அது ஒன்றுதான். அதைத்தான் அறிந்துகொள்ள வேண்டும். பூதங்களை எல்லாம் தாங்கும்படியான வஸ்து அதுதான். எல்லாவற்றையும் பக்ஷிக்கும்படியான வஸ்துவும் அதுதான்; எல்லாவற்றையும் சிருஷ்டிக்கும்படியான வஸ்துவும் அதுதான். அது ஒன்றுதான்.''

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் |
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ||

என்று பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார். இந்தச் சுலோகம் எல்லோருக்கும் தெரிந்திருக்காது என்று நினைக்கிறேன். எங்கோ ஒரு மூலையில் இருப்பது இந்தச் சுலோகம்.

மூலம் இல்லாது 'இதம்' என்பது இல்லை. அந்த மூலந் தான் 'தத், நீ' என்று நாம் சொல்லிக்கொண் டிருப்பதனால் விபக்தம். ஆனால் அதன் உண்மை ஸ்வரூபம் அவிபக்தம். அப்படிப் பட்ட ஒரு வஸ்துதான் எல்லாச் சரீரத்திற்குள்ளும் இருந்து கொண்டு, 'இது - இது' என்று பார்க்கிறது. பார்க்கிற வஸ்து தான் பார்க்கப்படுகிற பிரபஞ்சத்திற்கெல்லாம் ஆதாரம். அது அத்தனையையும் ரக்ஷிக்கிறது; அத்தனையையும் பக்ஷிக்கிறது; அத்தனையையும் சிருஷ்டிக்கிறது. வெவ்வேறு இடங்களில் அது சிதறி இருந்தாலும் அது ஒன்றுதான்.

ஒரே ஒரு சூரியன்; கையிலே கொஞ்சம் ஜலத்தை எடுத்துக் கொண்டு நல்ல வழுவழுப்பான தரையில் அதைத் தெளித்தால் ஒவ்வொரு முத்து ஜலத்திலும் பிரதிரூபமாக ஒவ்வொரு சூரியன் தெரிகிறது. ஆனால் அவை எல்லாம் பிரிந்து பிரிந்து காணப்படு வதனால் அநேகம் சூரியன்கள் ஆகா. சூரியன் ஒன்றுதான். இதையேதான் ஸ்ரீ ஆசார்யரவர்கள் अत एव च उपमा सूर्यकादिव என்ற ப்ரஹ்மஸூத்ரத்தின் பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கும் சக்தி எதுவோ, அறிவு எதுவோ, அந்த எல்லை கடந்த சக்திதான், அறிவுதான் நம்மிடத் தில் கண்டம் கண்டமாகத் தோன்றுகிறது. அந்த ஒரே வஸ்து தான் வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத் என்பது.

தத் என்றால் தூரத்தில் எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிற தென்று அர்த்தம். எல்லாமாய் இருப்பது, எல்லாவற்றையும் பார்க்கிற வஸ்துவாக இருப்பது அதுதான். அது நீதான். तत् - त्वम्. 'தத்வம்' என்பதன் உண்மை இதுதான்.

இப்போது நமக்கு எல்லாம் புரிந்துவிட்டது போல இருக்கிறது. இப்போது எப்படி இருக்கிறோமோ அப்படியே எப் போதும் இருந்தால் துக்கம் இல்லை. பொய்யினால் ஏற்படுகிற கஷ்டம் இல்லை. உண்மையில் இருப்பதற்கு உண்மையாக இருக் கிறவனைத்தான் எப்போதும் பிடித்துக்கொண் டிருக்கவேண்டும். உண்மையாக இருக்கிறவன் சுவாமி ஒருத்தன்தான். ஆசாமிகளாகிய நாம் அந்த ஸ்வாமியைத்தான் பற்றிக்கொள்ள வேண்டும். கண்டம் கண்டமாக நாம் இருக்கிறோம். கண்டம் கண்டமாக இருப்பது எல்லாம் முடிவில் அகண்டத்தோடு ஒன்று படும்போது அகண்டமாக ஆகிவிடுகிறது.

அகண்டமாக இருப்பவன் ஒருவன்தான் இருப்பு. கண்ட மாக இருப்பது நினைவு. நினைவு கனவு எல்லாம் உண்மை அல்ல. உண்மை, இருப்பு என்ற ஒன்றுக்குத்தான்.

அகண்டமாக இருக்கிற ஒருவனைக் கண்டம் கண்டமாகத் தியானம் பண்ணிக் கடைசி நிலையாக நிர்குணத் தியானம் செய்ய ஆரம்பித்தால் சண்டை, பூசல் ஒன்றுமே வராது. இதுதான் ஆசார்யரவர்கள், உபநிஷத் மரத்திலிருந்து நமக்குப் பறித்துக் கொடுத்த பழம்.

இந்தப் பழுத்த நிலையை நாம் அடைவதற்கு முன் மொட் டாக, பூவாக, பிஞ்சாக, காயாக இருந்து முதிர வேண்டும். பழுக்கும் நிலை வரைக்கும் பொறுமையாகத்தான் இருக்கவேண் டும். வெம்பி விழுந்துவிட்டால் பயன் இல்லை.

'வெம்பி விழுந்திடுமோ?' என்று இராமலிங்கர் சொல்லு கிறார். கனிந்த பழம் ஆகும் வரையில் மற்றவை - பூஜை, ஜபம், தபம் எல்லாம் - சாதனமாக இருக்க வேண்டும். வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத்வம் என்கிற உண்மை நிலைக்கு நாம் வரும் வரையில் அவை வேண்டும். அப்போது தான் வெம்பாது பழுக்கும். கடைசியில் தத்வம் - மூலம் - எங்கே இருக்கிறது? உன்னிடத்திலேயே இருக்கிறது, பார்க்கிற அறிவில் தான் இருக்கிறது என்பதை அநுபவத்தில் உணரலாம்.

கண்டம் - சாதனம்; அகண்டம் - முடிவு. பிரிவு சாதன காலத்தில் இருக்க வேண்டும். முடிவில் அகண்ட ஸ்வரூபத் தோடு ஒன்றுபடும்போது பிரிவு இல்லாமல் தானே ஒன்று சேர்ந்துவிடும். இதுதான் ஆசார்யரவர்கள் உபதேசம்.

9

# அம்பாளின் கடாக்ஷ வீக்ஷண்யம்

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।
अनेनायं धन्यो भवति न च ते हानिरियता
वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥

த்ருஶா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா
தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |
அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா
வநே வா ஹர்ம்யே வா ஸமகரநிபாதோ ஹிமகர: ||

ஆசார்யார் அவர்களிடம் அம்பாளுடைய கடாக்ஷம் பூர்ண மாக ஸ்புரித்துக்கொண் டிருந்தபோது வந்த சுலோகம் இது. இது ஸௌந்தர்ய லஹரியில் இருக்கிறது.

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।

த்ருஶா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா
தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |

அம்பாளுடைய கடாக்ஷமானது த்ராகீயஸ்யா - வெகு தூரம் விழக்கூடிய கடாக்ஷம். தாயாருடைய கடாக்ஷம் குழந்தைகளிடத்தில் விழும். பிரபஞ்சத்தில் இருக்கும் எல்லாப் பிராணிகளும் குழந்தைகள். எல்லாவற்றிற்கும் தாயாக இருப்பவள் ஜகன்மாதாதான்; புல் பூண்டு முதற்கொண்டு எல்லாம் தேவியின் குழந்தைகளே. பிரபஞ்சத்திற்கு எல்லை இல்லை; அவள் கடாக்ஷத்திற்கும் எல்லை இல்லை. எல்லையில்லாத பிரபஞ்சத்தில் இருக்கும் சகல வஸ்துக்களுக்கும் தாயாக இருக்கிற அம்பா

ளுடைய கடாக்ஷம் அவளுடைய குழந்தைகள் எல்லோரிடத்திலும் விழுகிறது. எல்லையில்லாத பிரபஞ்சத்தில் இருக்கும் எல்லா வஸ்துக்களிடத்திலும் அவளுடைய கடாக்ஷம் விழுவதனால் அவளுடைய பார்வையானது வெகு தூரம் நீண்டு போகிறதாம்.

द्राघीयस्या

த்ராகீயஸ்யா

அதற்கு எல்லை கிடையாது. அப்படிப்பட்ட கடாக்ஷம் எப்படி இருக்கிறது?

दरदलितनीलोत्पलरुचा

தரதலிதநீலோத்பலருசா

நீலோத்பல புஷ்பம் என்பது அல்லி, தாமரைபோல ஜலத்தில் மலர்வது; தாமரை சிவப்பாக இருக்கும். அல்லி வெளுப்பாக இருக்கும்; நீலோத்பல புஷ்பம் நல்ல நீலமாக இருக்கும்; முழுக்க விரிந்து இருக்காது. பாதி மூடிப் பாதி விரிந்து மலரும். நல்ல நீலமாக இருக்கும்.

दरदलितनीलोत्पलरुचा

தரதலிதநீலோத்பலருசா

தரம் என்றால் கொஞ்சம் என்று அர்த்தம். அந்த மாதிரி பாதி திறந்து பாதி மூடிக்கொண் டிருக்கிற காலத்தில் அந்த நீலோத்பல புஷ்பம் எப்படி இருக்குமோ - அதே மாதிரி மிகவும் குளிர்ச்சியாக இருக்கும் பார்வை. அப்படி அம்பாளுடைய கடாக்ஷம் வெகு தூரம் நீண்டு குளிர்ச்சியாகப் பிரபஞ்சத்தில் இருக்கும் சகல வஸ்துக்களின்மீதும் விழுகிறது.

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा

த்ருஶா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா

வெகு தூரம் விழக்கூடிய அம்பாளுடைய குளுமையான கடாக்ஷத்திற்கு உபமானமாகப் பாதி திறந்து, பாதி மறைந்திருக்கும் நல்ல நீலோத்பல புஷ்பத்தைச் சொல்கிறார் ஆதி சங்கரர். நீலோத்பலம் மிகவும் சீதளமாக இருக்கும். அம்பாளுடைய கடாக்ஷமும் குளுமையாக வெகுதூரம் நீண்டு இருக்கும்.

த்ருசா என்றால் நேத்திரத்திற்கும் சொல்லலாம். த்ருசா த்ராகியஸ்யா - நீண்ட நேத்திரத்தை உடையவள். நேத்திரம் தீர்க்கமாக இருக்கிறது என்பது மற்றோர் அர்த்தம். உத்தமமான ஸ்திரிகளுக்கு நேத்திரம் நீண்டிருப்பது ஒரு லக்ஷணம்.

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे।

த்ருஶா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா
தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |

'என்னையும் உன் கிருபையினால் உன் கடாக்ஷ ப்ரவாஹத்திலே மூழ்கும்படியாகச் செய்.' மாமபி என்றால் என்னையும் என்று அர்த்தம். தீநம் என்றால் மிக எளியவன். 'மிக எளியவனான என்னையும் உன்னுடைய கிருபையிலே மூழ்கும்படியாகச் செய்து பவித்திரமாக்கு' என்று பிரார்த்தித்துக்கொள்கிறார் ஆசாரியர்:

दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे।

தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |

'எனக்குக் கிடைக்கிறதற்கே நியாயம் இல்லை. இருந்தாலும் உன்னுடைய கடாக்ஷத்தினாலே பிறந்தவன்தானே நான்? நானும் உன் குழந்தைதான். ஆதலாலே எல்லோருக்கும் கடைசியில் இருப்பவனான - மாமபி-- என்னையும் கிருபையினாலே உன்னுடைய கடாக்ஷப் பிரவாகத்திலே மூழ்கச் செய்' என்று பிரார்த்திக்கிறார்:

'இதனாலே உனக்கு ஏதாவது சிரமம் இருக்குமோ? அதெல்லாம் ஒன்றும் கிடையாது. ஆனால் எனக்குப் பெரிய பாக்கியம் கிடைக்கும்; உன் கருணா கடாக்ஷம் பட்டவுடன் நான் கிருதார்த்தனாவேன்.'

अनेनायं धन्यो भवति

அநேநாயம் தந்யோ பவதி

அநேந - அதனாலே. தந்யோ பவதி - தன்யன் ஆகிவிடுகிறேன்; கிருதார்த்தன் ஆகிவிடுகிறேன்.

என்மேல் உன் கிருபை விழவேண்டியதே. தவிர அப்படி விழுவதனால்,

न च ते हानिरियता

ந ச தே ஹாநிரியதா

உனக்கு ஒரு குறைவும் இல்லை. எனக்கு மகாபாக்கியம், உனக்குக் கொஞ்சங்கூடக் குறைவு இல்லை:

இதற்கு ஒரு திருஷ்டாந்தம். பூர்ண சந்திரன் பிரகாசிக்கிறான்; ஒரே முட்புதர்க் காடாக இருந்தாலும், பெரிய மாடமாளிகை உப்பரிகையாக இருந்தாலும், இரண்டு இடங்களிலும்

அவனது நிலா - அமுத கிரணங்கள் தாமே விழுகின்றன. காட்டிலும் முட்புதரிலும், அவன் நிலா விழுவதனாலே அவனுக்குச் சிரமம் உண்டா? இல்லை. உப்பரிகையின்மேல் விழும்போது ஏதாவது சௌகரியமோ அநுகூலமோ உண்டா? இல்லை. 'அவனது கடாக்ஷம் லோகம் முழுவதும் எப்படி விழுகிறதோ அப்படி உன்னுடைய கருணா ப்ரபையானது எங்கும் விழுந்தாலும் அதனால் உனக்கு ஒரு ஹானியும் கிடையாது. நான் மிகவும் தீனனாக இருக்கிறேன். இப்படிப்பட்ட இடத்தில் உன் கடாக்ஷம் விழுந்தால் சகல தோஷங்களும் நிவிருத்தியாகி நான் க்ஷேமத்தை அடைந்தவனாக ஆகிறேன்.'

अनेनायं धन्यो भवति न च ते हानिरियता
वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥

அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா
வநே வா ஹர்ம்யே வா ஸமகரநிபாதோ ஹிமகர: ||

'வநே வா' என்றால் காட்டில் ஆகட்டும்; 'ஹர்ம்யே வா' என்றால் பெரிய உப்பரிகையில் ஆகட்டும். இந்த இரண்டு இடங்களிலும் பூர்ணசந்திரனுடைய நிலா சமமாகவே விழுகிறது. 'இது நல்ல கட்டிடம் ஆச்சே, இது முட்புதர் ஆச்சே' என்று அது வித்தியாசம் பார்ப்பதில்லை. எல்லா இடத்திலும் அதன் கடாக்ஷம் விழுகிறது. அப்படி எல்லாரையும்விடக் கடைசியில் உள்ள நான் தீனனாக இருந்தாலுங்கூட, உன்னுடைய பரம கிருபையினாலே வெகு தூரம் நீண்டுகொண்டே போகிறதான உன்னுடைய கடாக்ஷம் இந்த ஏழையைப் பரிசுத்தி செய்யட்டும்:

दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।

தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |

புண்ணியம் பண்ணின சாதுக்கள், பக்தர்கள், சாந்தர்கள் இவர்களெல்லாம் உன்கிட்டப் போனவர்கள்; நான் வெகு தூரத்தில் இருக்கிறேன். ஒரு வழியும் இல்லாதவன்; வெகு தூரம் எட்டி இருக்கிறேன். 'மாமபி' என்றால் என்னையும் என்று அர்த்தம். என்னையும் என்று சொல்லும்போது அவர் நம் எல்லோரையும் சேர்த்துக்கொண்டு நமக்கெல்லாம் அவள் கடாக்ஷம் விழவேண்டுமென்பதாகப் பிரார்த்தித்துக் கொள்கிறார். நமக்காகத் தம்மைத் தீனனென்று சொல்லிக்கொள்கிறார்.

அம்பாளுடைய ஸ்வரூபம் வேறு, ஈசுவரனுடைய ஸ்வரூபம் வேறு என்று கிடையாது. அப்படியே அவர்களுடைய ஸ்வரூபம் வேறு; ஆசார்யரவர்களுடைய ஸ்வரூபம் வேறு என்றும் கிடையாது. சாக்ஷாத் ஈசுவரனுடைய அவதாரந்தான் ஆசார்யாள்.

பரம கருணையினாலே நமக்காக அவரும் நம்மோடு சேர்ந்து கொண்டு இந்த ஸ்தோத்திரத்தை நமக்காகச் செய்து கொடுத்திருக்கிறார். ஸௌந்தர்யலஹரியில் இதை அநுக்கிரகம் பண்ணியிருக்கிறார்:

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।
अनेनायं धन्यो भवति न च ते हानिरियता
वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥

த்ருஶா த்ராகீயஸ்யா தரதலிதநீலோத்பலருசா
தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே |
அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா
வநே வா ஹர்ம்யே வா ஸமகரநிபாதோ ஹிமகர: ||

10

# கரும்புவில்லும் மலர்ப்பாணமும்

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखाः
वसन्तः सामन्तो मलयमरुदायोधनरथः ।
तथाप्येकः सर्वं हिमगिरिसुते कामपि कृपा-
मपाङ्गात् ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ॥

தநு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்ச விஶிகா:
வஸந்தஸ் ஸாமந்தோ மலயமருதாயோதநரத: |
ததாப்யேகஸ் ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்
அபாங்காத் தே லப்த்வா ஜகதிதமநங்கோ விஜயதே ||

மன்மதனுக்குக் கரும்பு வில் என்று சொல்கிறது வழக்கம். அந்த வில்லுக்கு நாண் தேன்வண்டுகள். வண்டுகளின் அடுக்கை நாணாக வைத்துக்கொண்டிருக்கிறான், மன்மதன்.

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखाः

தநு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்ச விஶிகா:

பாணங்கள், பஞ்சபாணம், ஐந்து பாணங்கள். பாணம் என்றால் குத்தும்படியாக இருக்கவேண்டும்; ஆனால் இவனுடைய பாணம் புஷ்பமாக இருக்கும்படியான பாணம்.

அவன் வில் மதுரமான வில்; இனிப்பான வில்; கரும்பு வில்.

வில் மிகவும் கெட்டியாக இருக்கும். அம்பு என்பது மிகவும் கூராக இருக்கும். உடம்பைத் துளைத்துக்கொண்டு போகும்படியாக இருக்கும். ஆனாலும் மன்மதனுக்கு வில்லும் அம்பும் நேர் விபரீதமாக இருக்கின்றன. அவை இனிமையாகவும் மென்மையாகவும் இருக்கின்றன. அந்த வில்லும் அம்பும் உடைய மன்மதன் சூரர்கள் அடையும் ஜயத்தைவிட அதிகமான ஜயத்தை அடைகிறான். சகலப் பிராணிகளுடைய மனசையும் காமத்திற்கு வசம் ஆக்கிவிடுகிறான். சின்னப் புழுவாக

இருந்தாலும், பட்சி, மிருகமாக இருந்தாலும் பெரிய வீரனே, மகாபுத்திமான்களான மனுஷ்யர்களோ யாராக இருந்தாலும் எல்லாருடைய மனசையும் தன்னிடமுள்ள அம்பைப் போட்டு, வென்றுவிடுகிறன். அவர்கள் மனம் அபஜயப்படும்படியாகப் பண்ணிவிடுகிறன்.

'இப்படி இந்த உலகத்தையெல்லாம் நாம்தாம் ஜயித்து விட்டோமே! இந்த மிருதுவான, சுகந்தமான அம்புகளையும் மதுரமான வில்லையும் வைத்துக்கொண்டு உலகத்தையெல்லாம் ஜயித்து வருகிற நம்மால் ஈசுவரனையும் ஜயித்துவிட முடியாதா?' என்று எண்ணி, 'ஈசுவரன்மேல் அந்த அம்பைப் போடுவோம்' என்று அவன் புறப்பட்டுப் போனன்.

'மதுரமான கரும்பு வில், மிருதுவான புஷ்ப பாணங்கள் இவற்றை வைத்துக்கொண்டு நீ உலகத்தை எல்லாம் ஜயம் பண்ணிக்கொண்டிரு' என்று அவனுக்கு அநுக்கிரகம் பண்ணினவள் அம்பாள்தான். அவளுடைய கடாக்ஷத்தினல் அவன் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள சகல ஜீவராசிகளையும் ஜயித்துக்கொண்டிருக்கிறன்.

अपाङ्गात् ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ।

அபாங்காத் தே லப்த்வா ஜகதிதம் அநங்கோ விஜயதே |

அவனே அநங்கன். ஆள் இருக்கிற இடம் தெரியாது.

நல்ல வாசனை உள்ள புஷ்பங்கள் இருக்கின்றன. ரோஜாப் பூவைப் பார்க்கும்போதே அதைத் தொட்டுப் பார்க்கவேண்டும் போல் இருக்கிறது. மல்லிகைப் பூவை மோந்து பார்க்கவேண்டும்போல் இருக்கிறது. தாமரைப் பூவைக் கண்ணில் ஒத்திக்கொண்டால் தேவலை போல் இருக்கிறது. அவற்றிற்கு நல்ல மணம் இருக்கிறது, மென்மை இருக்கிறது. அந்த இரண்டும் உள்ள பாணத்தை மன்மதன் வைத்துக்கொண்டிருக்கிறன். உலகத்தில் தித்திப்பு என்பதற்குக் கரும்புதான் காரணம். அந்த இனிமையான கரும்பையும் மென்மையான, வாசனையான பாணங்களையும் வைத்துக்கொண்டு, 'நீ, இருக்கிற இடம் தெரியாமல் எல்லாருடைய மனசையும் சுவாதீனம் பண்ணிக்கொள்; இந்த உலகத்தை ஜயித்துவிடு' என்றுள் அம்பிகை.

அம்பாளுடைய கடாக்ஷத்தினல் லோகங்கள் எல்லாவற்றையும் ஜயிக்கும் வரம் வாங்கிக்கொண்டான் மன்மதன். ஈசுவரனிடத்திலேயே கொண்டுபோய் அதைக் காட்டவேண்டும் என்று எண்ணினன்.

அம்பாள் ஒரு காலத்தில் தக்ஷனுடைய புத்திரியாக ஆவிர்ப் பவித்தாள். அதனால்தான் அவளுக்குத் தாக்ஷாயணி (दाक्षायणी) என்று ஒரு பெயர். இன்னொரு காலத்தில் காத்தியாயன மகரிஷியினுடைய பிரார்த்தனையின்படி, அவருடைய புத்திரியாக அவதாரம் பண்ணினாள். அதனால் அவளுக்குக் காத்தியாயனி (कात्यायनी) என்று பெயர். இன்னொரு காலத்தில் மதங்க ரிஷியினுடைய புத்திரியாக அவள் அவதாரம் பண்ணின காரணத்தால் அவளுக்கு மாதங்கி என்றும் ஒரு பெயர். 'மாதங்கீ மதசாலினீ' (मातङ्गी मदशालिनी) என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்புறம் ஹிமவத் பர்வதத்திற்கு அதிஷ்டான தெய்வமான ஹிமவான் சாக்ஷாத் அம்பாளைத் தன் புத்திரியாகப் பெறுவதற்குத் தவம் செய்து வரம் பெற்றான். ஆதலாலே அவனுடைய புத்திரியாகவும் ஆவிர்ப்பவித்தாள். பர்வதத்தினுடைய புத்திரியாக வந்ததனால் அவளுக்குப் பார்வதி என்று பெயர்; ஹைமவதி என்றும் பெயர்.

தக்ஷனைத் தன் தகப்பனாராகக் கொண்டு தாக்ஷாயணியாக அம்பாள் அவதாரம் பண்ணின காலத்தில் ஒரு சம்பவம் நடந்தது. தக்ஷன் ஒரு யாகம் பண்ணினான். ஈசுவரனை மதித்து அவன் அழைக்கவில்லை. தன்னுடைய மாப்பிள்ளைதானே என்று அலட்சியமாக இருந்ததோடுகூட அவரைக் கூப்பிடாமலேயே இருந்தும் விட்டான். இருந்தாலும், 'பிதாவினுடைய யக்ஞம் நடக்கிறது. நான் போய்விட்டு வருகிறேன்' என்று அம்பாள் ஈசுவரனிடத்தில் சொன்னாள்.

''வேண்டாம்; உனக்குச் சிரமம் ஏற்படும்'' என்று ஈசுவரன் சொன்னார்.

''நீங்கள் வராவிட்டாலும் நான் போய் அது எப்படி நடக்கிறது என்று பார்த்து வருகிறேன்'' என்று சொல்லிப் பிறந்தகத்து வாத்ஸல்யத்தினால் போனாள்; ஏதோ ஒரு லீலை பண்ண வேண்டும் என்று போனாள்.

மற்ற எல்லாத் தேவதைகளுக்கும் அழைப்பு அனுப்பியிருந்ததால் அவர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள். அந்த யாகத்தில் தக்ஷன் ஈசுவரனை அழைக்காததோடுகூட ஈசுவர நிந்தையும் செய்தான். 'இவன் ஈசுவர நிந்தை செய்கிறானே; இந்த இடத்திற்கு நாம் ஏன் வந்தோம்? ஈசுவர நிந்தை இவன் பண்ணுவதைக் கேட்டுக்கொண்டு நாம் இந்தச் சரீரத்தை வைத்துக்கொள்ள வேண்டுமா?' என்று பரமேசுவரி நினைத்து, தன்னுடைய சரீரத்தையே தன் பிதாவினுடைய யக்ஞ குண்டத்தில் அர்ப்பணம் பண்ணிவிட்டாள். சதி என்ற

பெயர் அம்பாளுக்கு உண்டு. அதனால்தான் பதியோடு நெருப்பில் விழுகிறவளுக்குச் சதி என்று பெயர் வந்தது. நாம் உடன் கட்டை ஏறுதல் என்கிறோம்; ஆங்கிலத்தில் எல்லாம் அதற்குச் சதி என்றுதான் பெயர்.

तव सति सतीनामचरमे

தவ ஸதி ஸதீநாம் அசரமே

என்று ஸௌந்தர்யலஹரியில் சொல்கிறார். தாக்ஷாயணிக்கு ஸதி என்று பெயர். அவள் அக்கினிப் பிரவேசம் பண்ணின காலத்திலிருந்து இப்போதும், உடன்கட்டை ஏறக்கூடாது என்று சட்டம் இருந்தாலும், வருஷத்தில் இரண்டு பேர்களாவது அக்கினிப் பிரவேசம் செய்தார்கள் என்கிற செய்தியை நாம் பத்திரிகைகளில் படித்துக்கொண் டிருக்கிறோம்.

ஈசுவர அபசாரம் பண்ணின தன் பிதாவின் யக்ஞ குண்டத்தில் தன் சரீரத்தையே அர்ப்பணம் பண்ணிவிட்டாள் தாக்ஷாயணி என்ற சமாசாரம் ஈசுவரனுக்குத் தெரிந்தது. அப்போது மகா கோபம் வந்துவிட்டது, தக்ஷன் மேல். 'என்னையும் நிந்தை பண்ணி, என்னுடைய சக்தியும் பிராணத் தியாகம் பண்ணும் படியான ஓர் இடத்தில் இவ்வளவு தேவதைகளும் எப்படிப் போனார்கள்? அவர்கள் எல்லோரையும் சிக்ஷிக்க வேண்டும்' என்று ஈசுவரன் கிளம்பிவிட்டார்.

'ஈசுவரன்தான் பிரபு. அவரைப் போய் அடைய வேண்டும்' என்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. எவன் ரக்ஷிக்கிறானோ, எவன் சிக்ஷிக்கிறானோ அவன்தான் பிரபு. அடிப்பவனும் அவனாக இருக்க வேண்டும்; அணைப்பவனும் அவனாக இருக்கவேண்டும்.

வெறும் பணத்தை மாத்திரம் கொடுத்துக்கொண்டு, அந்தப் பணத்தை நாம் எப்படித் துர்விநியோகம் செய்துவந்தாலும் ஏன் என்று கேட்காமல் இருந்தால் அவன் பிரபு அல்ல. நாம் பண்ணுகிற தப்புக்காக நம்மை எப்போது பார்த்தாலும் கண்டித்துக்கொண்டும் தண்டித்துக்கொண்டும் நமக்கு உதவியே செய்யாமல் இருக்கிறவனும் பிரபு அல்ல. நம்மை ரக்ஷிக்கவும் வேண்டும்; சிக்ஷிக்கவும் வேண்டும்; அப்படிப்பட்டவனே பிரபு. இப்படிப் பார்த்தால் ஈசுவரன் ஒருவன்தான் பிரபு.

பாற்கடலைக் கடையும்போது ஆலகால விஷம் வந்தவுடன் தேவர்கள் எல்லோருமே, 'இந்த விஷம் உலகத்தை எல்லாம் அழித்துவிடுமே, நாம் என்ன செய்யப்போகிறோம்?' என்று பயப்பட்டு ஓடினபோது, ஈசுவரன்தான் சகல உலகமும் கருகிப் போகாமல் ரக்ஷிப்பதற்காக அந்த விஷத்தைச் சாப்பிட்டான்.

பிறருடைய பாவங்களையெல்லாம் சேர்த்துச் சாப்பிட்டார்: இந்தத் தத்துவத்தை வைத்துக்கொண்டுதான் இதர மதஸ்தர்கள், 'நம்முடைய கர்த்தா எல்லோருடைய பாவங்களையும் சாப்பிட்டுவிடுகிறார்; போக்கிவிடுகிறார்' என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். நம்முடைய புராணக் கதையின் தத்துவந்தான் அது. ஈசுவரன்தான் நம்மை ரக்ஷிக்கிறார் என்பதற்கு, அவர் விஷத்தைச் சாப்பிட்டு உலகத்தைக் காப்பாற்றியதைச் சொல்லலாம்.

ஆனால் ஈசுவரன்தான் பிரபு என்றால் அவர் அணைத்தால் மாத்திரம் போதாதே! தப்புப் பண்ணினால் அடிக்கவும் வேண்டும்; சிக்ஷிக்கவும் வேண்டும், அல்லவா? அதனால்தான் தக்ஷ யாகத்திலே சிவாபசாரம் பண்ணினவர்களை யெல்லாம் சிக்ஷை பண்ணினார்.

நமக்கு ஜன்மம் வந்துவிட்டதனாலே அநேக துன்பங்கள் வருகின்றன. முடிவில் மரணம் வந்தபிறகு அடுத்த ஜன்மம் வந்துவிடப் போகிறது. பிறப்புக்குக் காரணம் காமன். இறப்புக்குக் காரணம் காலன். காமன், காலன் இரண்டு பேரையும் நாசம் பண்ணினவன் யார்? அவர்தான் ஈசுவரன்.

பிறப்பு இருக்கிறவன் பிறப்பு இல்லாதவனை அடைந்தால் தான் பிறப்பு இல்லாதவனாக முடியும். பிறப்பு இல்லாதவன் தான் பிறப்பு இருக்கிறவனுடைய பிறப்பை அறுக்க முடியும்.

காஞ்சீபுரத்தில் இருக்கும் 108 சிவாலயங்களில் - பல்லவ ராஜாக்கள் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டவை - பிறவாதான் கோயில், இறவாதான் கோயில் என்று இரண்டு ஆலயங்கள் இருக்கின்றன. அவையே பிறவாத்தானம், இறவாத்தானம் என்று சொல்லப்படுகின்றன. இரண்டும் ஈசுவரன் கோயில்கள். பிறப்பு இறப்பு இல்லாத பிரபு ஈசுவரன்தான். இந்த ஜன்மத்திலே நம்மை ரக்ஷிக்கிறவனும், தவறுதல் பண்ணிப் பாவங்கள் செய்யும் போது நம்மைச் சிக்ஷிக்கிறவனாகிய பிரபுவும் அவனே.

தாக்ஷாயணி தன் பிதாவின் யக்ஞ குண்டத்திலே சரீரத்தை அர்ப்பணம் பண்ணின பிற்பாடுதான் ஹிமவானுடைய புத்திரியாக அவதாரம் பண்ணினாள். பரமேசுவரியைத் தன் புத்திரியாக அடைவதற்கு அவன் தவம் பண்ணியிருந்தான்; பாக்கியம் பெற்றிருந்தான். பர்வதராஜனின் புத்திரியாகப் பார்வதியாக அவதாரம் பண்ணின அம்பாள், ஈசுவரனைத்தான் மணக்க வேண்டும் என்று தபஸ் பண்ணினாள். அப்போது ஈசுவரன் தக்ஷிணாமூர்த்தியாக யோகத்திலே இருந்துகொண் டிருந்தார்.

கொஞ்சங்கூடக் கண்ணைத் திறந்து பார்க்காமல் இருந்தார். வெளி விஷயத்தில் ஞாபகமே இல்லை.

தாரகாசுரன் என்பவன் தேவர்களுக்குப் பெரிய கஷ்டங்களை அளித்துக்கொண் டிருந்தான். அவனைச் சம்ஹாரம் பண்ணி எல்லோருக்கும் அருள் செய்வதற்கு மகா தேஜஸ்வியான குமாரன் அவதாரம் பண்ணவேண்டும் என்று தேவர்கள் நினைத்தார்கள். மன்மதனிடத்தில் போய், "உனக்கு லோகம் முழுக்கச் சுவாதீனம் பண்ணிக்கொள்ளக் கூடிய சக்தி இருக்கிறதே; அதைக் கொண்டுபோய் ஈசுவரனிடத்தில் அர்ப்பணம் பண்ணு" என்று வேண்டிக்கொண்டார்கள். 'பெற்ற தாயிடமே கற்ற வித்தையைக் காட்டுவது போல' மன்மதன் ஈசுவரனிடத்தில் போய் மலர் அம்புகளை விட்டான்.

"என்ன இது, மனசுக்குச் சஞ்சலம் உண்டாகிறதே!" என்று ஈசுவரன் - மூன்று கண்களையுங்கூடத் திறக்கவில்லை - ஒரே ஒரு கண்ணை - நெற்றிக்கண்ணை மாத்திரம் மெள்ளத் திறந்தார். அப்போது மன்மதன் அனங்கன் - சரீரமில்லாதவன் - ஆகிவிட்டான்; பஸ்மமாகப் போய்விட்டான்.

அப்போது ரதி மிகவும் துக்கம் அடைந்தாள். அம்பாள் அவளுக்கு அபயம் அளித்து அவள் கண்களுக்கு மாத்திரம் அவன் தெரியும்படியாக அநுக்கிரகித்தாள்.

சர்வலோகத்தையும் ரக்ஷிப்பதற்காக, தாரகாசுரனைச் சம் ஹாரம் பண்ணுவதற்காக, அம்பாள் மன்மதனுடைய கரும்பு வில்லையும் மலர்ப்பாணங்களையும் தானே எடுத்துக்கொண்டு ஈசுவரனுக்கு முன்னால் அவற்றை வைத்து நமஸ்கரித்தாள். அவர்மேல் மன்மதன் பாணங்களை விட்டான். இவள் அவர் பாதத்தில் அவற்றை அர்ப்பணந்தான் செய்தாள்.

அப்புறந்தான் குமாரசம்பவம். ராமாயணத்தில் வால்மீகி சொல்லியிருக்கிறார்.

कुमारसंभवश्चैव धन्यः पुण्यस्तथैव च ।

குமாரஸம்பவஸ்சைவ தந்ய: புண்யஸ்ததைவ ச |

—பாலகாண்டம், ஸர்க்கம் 37.

காளிதாச மகாகவி இயற்றிய குமாரசம்பவத்திலும் இந்தக் கதை வருகிறது.

"**நா**ன்தான் உனக்குக் கரும்பு வில்லையும் மலர்ப் பாணங்களையும் கொடுத்து இந்த லோகத்தில் இருக்கும்படியான சகல ஜீவராசிகளையும் காமவசப்படுத்தும்படி அநுக்கிரகம் செய்தேன். எல்லாரும் ஸனகாதி முனிவர்களாக இருந்துவிட்டால் அநேக

ஆத்மாக்கள் சரீரம் எடுத்து அதிலிருந்து சித்தசுத்தி செய்து கொண்டு ஜனன நிவிருத்தியைத் தேடிக்கொள்ள முடியாமல் போய்விடுமே என்பதற்காகத்தான், அந்தக் காரியத்திற்கு உனக்கு ஆதரவு கொடுத்தேன். நீ எனக்கு மேல் இருக்கும் ஈசுவரனிடத்தில் அந்தச் சக்தியைக் காட்டியிருக்கக் கூடாது'' என்று அம்பாள் மன்மதனிடத்தில் சொல்லிவிட்டு, அவனிடத்தில் இருந்த கரும்புவில், மலர்ப்பாணங்கள் இவற்றைத் தானே ஏற்றுக்கொண்டாள்; ஈசுவரனிடத்திலே போனாள்; தன்னைப் பார்த்தவுடன் அவருக்கே காமம் உண்டாகும்படி செய்தாள்; காமாக்ஷி என்று அதனால்தான் பெயர் வந்தது. காமத்தை உடைய கண்களைக் கொண்டு பார்த்தாள் காமாக்ஷி.

மன்மதனுக்கும் கரும்புவில்; அம்பாளுக்கும் கரும்புவில்; அவனுக்கும் பஞ்சபாணம் புஷ்பந்தான்; இவளுக்கும் பஞ்ச பாணம் புஷ்பந்தான். கரும்பு வில், பஞ்சபாணம் இவற்றோடு கூடிய காமாக்ஷி, அழகான கண்களை உடையவள், ஈசுவரனைப் பார்த்தவுடன்தான் பார்வதி கல்யாணம் ஏற்பட்டுக் குமார ஜனனம் - சுப்பிரமணிய சுவாமியின் அவதாரம் - நடந்தது. அந்தக் குழந்தை ஈசுவரனைக் காட்டிலும் மிகுந்த தேஜஸோடு இருந்தது.

पुत्रादिच्छेत् पराजयम् ।

புத்ராதிச்சேத் பராஜயம் |

ஈசுவரனுக்கே பிரணவ மந்திர உபதேசம் பண்ணினான். தாரகாசுரனைச் சம்ஹாரம் பண்ணினவன் இப்படி ஞானத்திலும் சரி, வீரத்திலும் சரி - ஈசுவரனேதான் குமாரனாக அவதாரம் பண்ணினான் என்றாலும் - இந்த ரூபத்தில் முன்பைவிட இன்னும் கொஞ்சம் அதிகமான பிரகாசத்தை எடுத்துக்கொண்டான்!

ஜனன மரணம் இருக்கிறவன் ஜனனமரணம் இல்லாதவனை அடைய வேண்டும்; ஜனன மரணத்தைக் கடந்தவன்தான் ஈசுவரன். அவன் ஞானஸ்வரூபியாய், பரதத்துவமாய் இருந்து விட்டால் போதாது; கருணைக் கடலாய் எல்லோருக்கும் கடாக்ஷம் செய்கிறவனாய் அவதாரம் பண்ணவேண்டும் என்பதற்காகத்தான் ஜகன்மாதா அந்த ஞானஸ்வரூபிக்குக் காமம் பொங்கும்படியாகக் கரும்புவில்லையும் மலர் அம்பையும் கையில் எடுத்துக்கொண்டாள்.

पुण्ड्रेक्षुपाशाङ्कुशपुष्पबाणहस्ते नमस्ते जगदेकमातः ।

புண்ட்ரேக்ஷுபாஶாங்குஶபுஷ்பபாணஹஸ்தே நமஸ்தே ஜகதேகமாத: |

'கரும்பு வில்லையும் புஷ்ப பாணங்களையும் கையில் கொண்டவளே' என்று சியாமளா தண்டகத்தில் வருகிறது.

அம்பாளுடைய சஹஸ்ரநாமம் கரும்புவில், பஞ்ச பாணங்கள் ஆகியவற்றின் சூக்ஷ்மமான தத்வம் இன்னவென்று சொல்கிறது.

### मनोरूपेक्षुकोदण्डा

#### மனோரூபேக்ஷுகோதண்டா

கரும்பு இனிமையானது; மனசும் இனிமையாக இருக்கும். அம்பாளுடைய இடக்கையில் இருக்கும்படியான கரும்பு வில் என்பது என்ன? லோகத்தில் இருக்கும் சகலப் பிராணிகளுடைய மனசுதான்; மனசை அம்பாள் தன்னுடைய இடக்கையில் பிடித்துக்கொண் டிருக்கிறாள்.

பாணங்கள் என்ன?

### पञ्चतन्मात्रसायका

#### பஞ்சதந்மாத்ரஸாயகா

ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. மனசு உள்ளே இருக்கிறது. பார்க்கிற இந்திரியம், ஸ்பர்சிக்கிற இந்திரியம், சப்தத்தைக் கேட்கிற இந்திரியம், ரசத்தை ருசிக்கிற இந்திரியம், சுகந்தத்தை மோந்து பார்க்கிற இந்திரியம் - இப்படி ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன.

நல்ல சப்தம், நல்ல ஸ்பர்சம், நல்ல ரூபம், நல்ல ரஸம், நல்ல கந்தம் - இந்த ஐந்தையும் அநுபவிக்கும்படியான ஐந்து இந்திரியங்களுக்கு விஷயமான தன்மாத்திரைகளையும் ஐந்து புஷ்ப பாணங்களாக வைத்துக்கொண் டிருக்கிறாள்.

### मनोरूपेक्षुकोदण्डा पञ्चतन्मात्रसायका ।

#### மனோரூபேக்ஷுகோதண்டா பஞ்சதந்மாத்ரஸாயகா |

மனசு, பஞ்ச இந்திரியங்கள் இவற்றுக்கு லோகம் முழுக்கக் கட்டுப்பட்டது. அவற்றை அம்பாள் தன் கையில் கட்டுப்படுத்திப் பிடித்துக்கொண் டிருக்கிறாள். காமத்தில் மூழ்கிக் கிடக்கும் மனுஷ்யர்களுக்குக் காமத்தைக் கட்டுப்படுத்தவும் மனசைக் கட்டுப்படுத்தவும் இவற்றை அம்பாள் தன் கையில் கட்டுப்படுத்தி வைத்துக்கொண்டு அநுக்கிரகம் செய்கிறாள்.

இதைப்பற்றி மூககவி அடிக்கடி சொல்கிறார்: 'உன்னுடைய கடாக்ஷம் சிவனிடம் மோகத்தை உண்டுபண்ணுகிறது. மனுஷ்யர்களுடைய மோகத்தை அடக்கிவிடுகிறது' என்கிறார்.

கேவலம் ஞானமயமாக இருக்கிற ஈசுவரனை லோகக்ஷேமத்திற்காக மோகிக்கப் பண்ணுகிற சிவகாமசுந்தரியாக இருக்கிறாள்

காமாக்ஷி. மோகத்திலேயே மூழ்கிக் கிடக்கும்படியான பக்தர்களின் மோகத்தை நிவிருத்தி பண்ணிக்கொண்டிருக்கிறாள். இதுதான் அம்பாளுடைய விசேஷம். இரண்டும் ஆத்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்வதற்காகத்தான்.

சகல விஷயங்களிலும் நமக்குள்ள சித்த விகாரங்கள் எல்லாம் நிவிருத்தியாக வேண்டும் என்பதற்காகத்தான் கரும்பு வில்லையும் புஷ்ப பாணங்களையும் அம்பாள் தன் கையில் வைத்துக்கொண்டிருக்கிறாள். அந்த அம்பாளுடைய கடாக்ஷம் நமக்கு ஏற்பட்டுவிடுமானால் - மூககவி சொல்கிறது போல - எல்லாவற்றையும் சமமாகப் பார்க்கிற திருஷ்டி - எந்த விஷயத்திலும் மோகம் ஏற்படாத நிலை உண்டாகிவிடும்.

அம்பாளுடைய கடாக்ஷம் கிடைத்தால், எவ்வளவு காமத்தை உண்டுபண்ணும்படியான வஸ்துவாக இருந்தாலும் அது காமத்தை உண்டுபண்ணாது. எவ்வளவு பணத்தாசையை உண்டாக்குகிற வஸ்துவாக இருந்தாலும் அது பணத்தாசையை - லோபத்தை - உண்டாக்காது. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் ஆகிய துர்க்குணங்களில் ஒன்றும் இல்லாமல் சித்தம் பரிசுத்தமாக இருப்பதற்கு அம்பாளைத் தியானிக்கவேண்டும். நித்தியம் இந்த எண்ணத்தோடு, 'அம்மா, ஒரு துர்க்குணமும் இல்லாமல் என் சித்தத்தைப் பரிசுத்தமாக்கு' என்பதாக அம்பாளின் நாமத்தை ஸ்மரிக்கும் பழக்கம் வரவேண்டும். அந்தப் பழக்கம் முற்றினால் சித்தசுத்தி தானே உண்டாகிவிடும். அதுதான் அம்பாளுடைய சரணாரவிந்தத்தை அடைவதன் பயன். நம்மிடம் குறைகள் இருக்கும்போதுதான் சித்தசுத்தி போய்விடுகிறது.

அம்பாளுடைய சரணாரவிந்தம் ஒன்றிலே நம் மனம் எப்போதும் இருப்பது ஒன்றுதான் சிரஞ்சீவித்துவம்; சித்தசுத்தியோடு இருந்துகொண்டு, அம்பிகையின் குழந்தையாக இருந்துகொண்டு, அவளுடைய சொரூபத்திலே மனசை நிறுத்தி, ஆத்மாவைப் பரமானந்தத்திலேயே இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். ஆசார்யர் அவர்கள் நமக்காக அருளியிருக்கும் ஸௌந்தர்யலஹரியின் பயன், எந்த நாளும் நாம் ஜகன்மாதாவை நமஸ்கரித்து, தோஷங்களை நிவிருத்தி பண்ணிக்கொண்டு சச்சிதானந்தஸ்வரூபமான அம்பிகைக்கு நம்முடைய ஆன்மாவை அர்ப்பணம் செய்யவேண்டும் என்பதுதான்.

## 11
# மூன்று ரத்தினங்கள்

साधारणे स्मरजये निटिलाक्षिसाध्ये
भागी शिवो भजतु नाम यशः समग्रम् ।
वामाङ्घ्रिमात्रकलिते जननि त्वदीये
का वा प्रसक्तिरिह कालजये पुरारेः ॥

ஸாதாரணே ஸ்மரஜயே நிடிலாக்ஷிஸாத்யே
பாகீ ஶிவோ பஜது நாம யஶஸ்ஸமக்ரம் |
வாமாங்க்ரிமாத்ரகலிதே ஜநநி த்வதீயே
கா வா ப்ரஸக்திரிஹ காலஜயே புராரே: ||

அம்பிகையும் ஈசுவரனும் அர்த்தநாரீசுவரக் கோலத்தில் சேர்ந்திருக்கிறார்கள்; ஒரே சரீரத்தில் ஒரு பாகம் அம்பாளாகவும், ஒரு பாகம் ஈசுவரனாகவும் ஓர் அவசரத்திலே ஆவிர்ப்பாவம் அடைந்து, குழந்தைகளான எல்லா ஜீவராசிகளுக்கும் அநுக்கிரகம் பண்ணிக்கொண் டிருக்கிறார்கள்.

ஈசுவரனுக்குத் 'தாயுமானவர்' என்று ஒரு பெயர். அம்மையப்பன் என்றும் சொல்வது உண்டு. அம்மையாகவும் அப்பனாகவும் அவர் இருப்பதால் அம்மையப்பன். ஈசுவரன்தான் நம் யாவருக்கும் தந்தை. அவர் தந்தை மாத்திரம் அல்ல, தாயுமாக இருக்கிறார். அதனால் தாயுமானவர் என்ற பெயரைப் பெற்றார். ஒரே பொருள்தான் தாயாகவும் தந்தையாகவும் இருக்கிறது என்ற தத்துவத்தை அர்த்தநாரீசுவரத் திருக்கோலம் தெரிவிக்கிறது.

அர்த்தநாரீசுவரரைப் போலவே சங்கரநாராயணர் என்ற மூர்த்தியும் இருக்கிறார். தெற்கே திருநெல்வேலி ஜில்லாவில்

சங்கரநயினார் கோயில் என்று ஊர் இருக்கிறது. அங்கே சங்கரன் ரூபமாகவும், நாராயணன் ரூபமாகவும் ஒரே ஸ்வரூபத்தில் பகவான் இருக்கிறார். அதேமாதிரி மைசூருக்கும் மகாராஷ்டிரத்திற்கும் மத்தியில் ஹரிஹரம் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. ஹரியும் ஹரனும் ஒரே ஸ்வரூபமாக இருக்கிறார்.

சங்கரநாராயணன் என்ற ஸ்வரூபம், அர்த்தநாரீசுவர ஸ்வரூபம் ஆகிய இரண்டும் ஒரே ஸ்வரூபமே என்று சொல்வதற்குச் சாஸ்திரங்களிலேயே அநேக ஆதாரங்கள் இருக்கின்றன. சாக்ஷாத் மகாவிஷ்ணு, ஈசுவரனுடைய ஒரு பாகம் ஆகும்; அதேமாதிரி ஈசுவரன் மகாவிஷ்ணுவினுடைய ஒரு பாகம் ஆகும் என்பதற்குப் புராணங்கள், மூர்த்திகள், க்ஷேத்திரங்கள் இவையே ஆதாரமாக இருக்கின்றன.

தமிழ் நாட்டில் இருந்த பெரிய பக்தர்கள் பழங்காலத்தில் விஷ்ணு க்ஷேத்திரம் போய்த் தரிசனம் பண்ணிக்கொண்டு ஒவ்வோர் இடத்தையும் மங்களாசாஸனம் பண்ணியிருக்கிறார்கள். சிவபக்தர்களும் அப்படிச் செய்திருக்கிறார்கள். அவர்களுடைய பாடல்களைத் திவ்யப்பிரபந்தமாகவும் தேவாரமாகவும் தொகுத்துப் பாராட்டி வருகிறார்கள்.

திருமங்கையாழ்வார் பெருமாளைப்பற்றிப் பாடும்போது,

"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத் தன் உந்தியிலே தோற்று வித்து"

(பெரிய திருமொழி, 3-4,9.)

என்கிறார். சந்திரனை ஜடாபாரத்திலே வைத்திருக்கிற சிவனை வலத்தே வைத்திருக்கிறாராம். உந்தி என்பது நாபிக்குப் பெயர். அதிலே தோன்றிய ஒரு தாமரைமலரில் நான்கு தலைகளையுடைய பிரம்மா ஆவிர்ப்பவித்தார். ஈசுவரனைத் தன் வலப் பாகத்திலே வைத்ததாகச் சொல்லும் கோலந்தான் சங்கரநாராயணர் அவசரம்.

அதே மாதிரியாகத் தேவாரத்தில்,

"குடமாடியை இடத்தே கொண்டு"

என்று வருகிறது. குடமாடி என்று விஷ்ணுவுக்குப் பெயர். இது கிருஷ்ண பரமாத்மாவுக்கு ஒரு பெயர். கோபிகைகளோடு சேர்ந்துகொண்டு குடத்தை வைத்துக்கொண்டு ஆடினார். இந்தக் குடமாடியைத் தன்னுடைய இடப்பாகத்திலே வைத்துக்கொண் டிருக்கிறான் ஈசுவரன் எனச் சொல்கிறார்.

ஆழ்வார் விஷ்ணுவைச் சொல்லும்போது ஈசுவரனை வலப் பாகத்தில் கொண்டிருக்கிறார் பெருமாள் என்று சொல்கிறார்.

சிவபக்தர் சிவனைச் சொல்லும்போது மகாவிஷ்ணுவை இடப் பாகத்தில் கொண்டிருக்கிறார் சிவன் என்று சொல்கிறார்.

இப்படி இவர்கள் இரண்டு பேர்களுடைய வாக்குகளைப் பார்க்கும்போதும் ஈசுவரனும் சாக்ஷாத் மகாவிஷ்ணுவும் ஒரே ஸ்வரூபத்தில் இருக்கிறார்கள். ஹரியாகவும் ஹரனாகவும், சங்கரனாகவும் நாராயணனாகவும் இருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

ஈசுவரனுடைய இடப்பாகத்தில் மகாவிஷ்ணு இருக்கிறார் என்றால் அதே வாம பாகத்தில்தானே அம்பிகை இருக்கிறாள்? ஈசுவரனுடைய வாமபாகம் அம்பாளுடையது; அம்பாளுடைய வலப் பக்கத்தில் ஈசுவரன் இருக்கிறார் என்றும் சொல்லலாம். ஆழ்வாரும், 'மகாவிஷ்ணுவினுடைய வலப் பக்கத்தில்தான் ஈசுவரன் இருக்கிறார்' என்று சொல்லியிருக்கிறார்.

இந்த இரண்டையும் சேர்த்துப் பார்த்தால் ஒரே பொருள் தான் அம்பிகையாகவும் விஷ்ணுவாகவும் தெரிகிறதோ எனத் தோன்றுகிறது. மகாவிஷ்ணு யார் என்றால் வேறு யாரும் அல்ல; சாக்ஷாத் அம்பாள்தான்.

சில இடங்களில் அம்பாளைச் சொல்கிறபோது பத்மநாப சகோதரி, கிருஷ்ணசகோதரி என்று சொல்வது உண்டு.

அதேமாதிரி மகாவிஷ்ணுவை அம்பாளின் தமையனாகச் சொல்வார்கள்.

"மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக்கண்டேன் தோழீநான்"

என்பது ஆண்டாள் பாசுரம்.

அதாவது மகாவிஷ்ணுவை மணந்துகொள்ள இருந்த பெண் ஆண்டாளுக்கு அலங்காரம் பண்ணுகிறபோது நாத்தியாகிய அம்பாள் வந்து மணமாலை சூட்டினாளாம். அந்தரி என்றால் அம்பாள்.

திருமழிசையாழ்வார், 'மாதாய மாலவனை மாதவனை' என்று பாடியிருக்கிறார். மகாவிஷ்ணு ஸ்திரீரூபமாக ஆனவர் என்பது அதன் பொருள்.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது கடைசியாக வந்த அமிர்தத்தைச் சாப்பிடத் தேவர்களும் அசுரர்களும் சண்டை போட்டுக்கொண்டிருந்தபோது மகாவிஷ்ணுதான் ஸ்திரீரூபமாக, மோகினியாக, அவதாரம் எடுத்து வந்தார் என்று ஒரு கதை உண்டு. ஒரு சமயம் பஸ்மாசுரன் ஈசுவரனைக் குறித்துப் பெரிய தபஸ்செய்தான். ஈசுவரன் அவனுக்கு அநுக்கிரகம் செய்ய வந்தபோது அவன், ''நான் யார் தலையில் கை வைத்தாலும்

அவன் அந்த க்ஷணமே பஸ்மமாகப் போகவேண்டும்'' என்று வரம் கேட்டானும். ஈசுவரன் அதைக் கொடுத்துவிட்டார். அசுரன் உடனே, ''நீர் கொடுத்த வரம் பலிக்கிறதா என்று பார்க்கிறேன். தலையை நீட்டும்'' என்று அவர் தலையிலேயே கையை வைக்கப்போனபோது ஈசுவரன் பயந்துகொண்டு ஓட, இவர் அவனைத் துரத்திக்கொண்டு ஓடினாராம். அப்போது மகா விஷ்ணுதான், ''இது என்னடா? ஈசுவரனுக்கே ஆபத்து வந்து விட்டதே!'' என்று எண்ணி, பார்த்தவுடனே மோகிக்கும்படி யான ஸ்திரீ ரூபத்தை எடுத்துக்கொண்டு பஸ்மாசுரனிடம் போனு ராம். அந்த ரூபத்தைப் பார்த்தவுடன் அவன் அப்படியே மயங் கித் தன்னை மணந்துகொள்ளும்படியாக அவரை அழைத்தானும். ''சரி, மணக்கிறேன். நீ போய் ஸ்நானம், ஆசமனம் எல்லாம் பண்ணிவிட்டு வா'' என்று சொன்னவுடன் அந்த அசுரன் ஸ்நானம் பண்ணிவிட்டு ஆசமனம் பண்ணும்போது, ''பத்ம நாப, தாமோதர'' என்று தன் தலையிலேயே கையை வைத் துக்கொள்ள, அவன் பஸ்மமாகப் போய்விட்டானும். இப்படி ஒரு கதை. அப்போதும் மகாவிஷ்ணுவே ஈசுவரனுக்குச் சகாயம் பண்ண ஸ்திரீரூபமாக வந்திருக்கிருர்.

### 'மாதாய மாலவனே'

மாலாகிய மகாவிஷ்ணு ஸ்திரீரூபமாக ஆவிர்ப்பவித்தார் என்று சொன்னதற்கு இதுவே காரணம். அம்பாளாக இருப் பவரும் அந்த மாலே என்றும் சொல்லலாம்.

ஒரே பொருள்தான் அம்பாளாகவும் மகாவிஷ்ணுவாகவும் ஈசுவரனுகவும் ஆவிர்ப்பவித்திருக்கிறது. சங்கரனுகவும் நாரா யணனுகவும் ஈசுவரனுகவும் அம்பாளாகவும் லோகானுக்கிரக காரணமாக ஒவ்வோர் அவசரத்திலே ஆவிர்ப்பாவம் செய்திருக் கிருர்கள் என்று தெரிகிறது.

ரத்னத்ரயம் என்று ஒன்று சொல்வார்கள். மூன்று ரத்னங்கள் என்று பொருள். நாம் உலகத்தில் பூஜித்துக் கொண்டிருக்கும் ரத்னங்கள் வேதத்தின் மத்தியில் இருக்கும் படியான மூன்று ரத்னங்களே. அம்பாள், ஈசுவரன், சாக்ஷாத் நாராயணன் ஆகிய இந்த மூன்று ரத்னங்களையும் பூஜை செய்வது என்று வைத்துக்கொண் டிருக்கிருேம். காஞ்சீபுரத் தில் தனியாக அம்பாளுக்குக் காமாக்ஷி கோயில் இருக்கிறது. பெருமாளுக்கு வரதராஜப் பெருமாள் கோயில் இருக்கிறது. ஈசுவரனுக்கும் ஏகாம்பரேசுவரர் கோயில் இருக்கிறது.

வாஸ்தவத்தில் அது வேறு இது வேறு என்று இல்லை என்று காட்டுவதற்காகவும் ஒரே பரமாத்ம ஸ்வரூபந்தான் என்பதை நிரூபிப்பதற்காகவும் ஒரு சரீரத்தில் அம்பாள் ஒரு பாகமும்,

ஈசுவரன் ஒரு பாகமுமாக, ஒரு சரீரத்தில் விஷ்ணு ஒரு பாகமும், ஈசுவரன் ஒரு பாகமுமாக ஆவிர்ப்பாவம் செய்திருக்கிறார்கள் என்பதற்கு அநேகம் சான்றுகள் இருக்கின்றன.

காவேரிப்பாக்கம் என்று ஓர் ஊர் இருக்கிறது. காஞ்சிபுரத்திலிருந்து வேலூருக்குப் போகிற வழியில் இருபது மைலில் இருக்கிறது. அதற்குப் பக்கத்தில் ஒன்றரை மைல், இரண்டு மைல் தூரத்தில் பாலாறு இருக்கிறது. அந்தப் பாலாற்றங் கரையில் திருப்பாற்கடல் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அந்தத் திருப்பாற்கடல் க்ஷேத்திரத்திலே ஒரு பெருமாள் கோயில் இருக்கிறது. அதைப்பற்றிப் பல நாளாக வழங்கி வருகிற கதை ஒன்று உண்டு. முதலில் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு பெருமாள் கோயில்கூடக் கிடையாதாம். ஈசுவரன் கோயில் தான் இருந்ததாம். ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அநேக க்ஷேத்திரங் களுக்குச் சென்று விஷ்ணுதரிசனம் பண்ணிக்கொண்டு வருகிற காலத்தில் அந்த ஊருக்கும் வந்தாராம். அநேகம் ஊர்களில் சிவாலயமும் இருக்கும்; விஷ்ணு ஆலயமும் இருக்கும். ஒவ்வொரு நாளும் ஓர் ஊருக்குப் போகிறபோது விஷ்ணு தரிசனம் பண்ணுமல் அவர் ஆகாரம் பண்ணுவதே இல்லை. சேர்ந்தாற்போல் நான்கு நாள் விஷ்ணுதரிசனம் இல்லை என்றால் அவர் அந்த நான்கு நாட்களும் விரதம் இருந்துவிடுவார்.

அவர் திருப்பாற்கடலுக்கு வந்து, ''எங்கே விஷ்ணு ஆலயம் இருக்கிறது?'' என்று ஒவ்வொரு கோயிலாகப் போனார். எல்லாம் சிவன் கோயிலாகவே இருந்தன. விஷ்ணு ஆலயமாகத்தான் இருக்கும் என்று ஒரு கோயிலுக்குள் நுழைந்தார். உள்ளே போனால் ஈசுவரன் இருந்தார். உடனே வெளியில் ஓடி வந்துவிட்டார். ஆகாரம் பண்ணவில்லை. 'இன்றைக்கு விஷ்ணுதரிசனம் கிடைக்கவில்லையே!' என்று துடிதுடித்துக்கொண் டிருக்கிறார். அவர் மனசு பக்தியினாலே பட்ட பாடு சகிக்கவில்லை. அதைப் பார்த்து மகாவிஷ்ணுவே ஒரு கிழவர் மாதிரி அவருக்கு முன்னால் வந்து, ''என்ன ஸ்வாமி, விஷ்ணுதரிசனம் பண்ண வருகிறீர்களா?'' என்று கேட்டார்.

''இந்த ஊரிலே எங்கே ஐயா விஷ்ணு கோயில் இருக் கிறது?'' என்று அவர் கோபமாகச் சொன்னாராம்.

''அதோ தெரிகிறதே. அது சாக்ஷாத் பெருமாள் கோயில் தான்'' என்று அவர் சொன்னாராம்.

அந்தக் கோயிலுக்குள்தான் அவர் நுழைந்து போய் ஈசுவரன் இருப்பதைப் பார்த்துவிட்டு ஓடிவந்தார். அதனால்,

"ஏன் ஐயா பொய் சொல்கிறீர்? அது ஈசுவரன் கோயில்" என்று சொன்னாராம்.

"இல்லவே இல்லை. நீர்தான் பொய் சொல்கிறீர். அது பெருமாள் கோயில்தான். வேண்டுமானால் உள்ளே வந்து பாரும்" என்று அவர் பேச, "இப்போதுதான் நான் பார்த்தேன்" என்று இவர் சொல்ல, கடைசியில் கிழவராக வந்தவர், "பந்தயம் கட்டும்; எதற்காகப் பொய் சொல்கிறீர்?" என்று கையைப் பிடித்துக்கொண்டு சண்டைக்குப் போய்விட்டாராம்.

அதற்குள் ஊரில் இருந்தவர்களுக்கு இது தெரிந்து அவர்களுக்குள் மத்தியஸ்தம் செய்துவைக்க வந்தார்களாம்.

"எதற்காக இப்படிச் சண்டை போட்டுக்கொண்டிருக்க வேண்டும்? எல்லாரும் போய்த்தான் அதைப் பார்க்கலாமே" என்று சொன்னார்கள்.

"நான் அந்தக் கோயிலுக்குள் நுழையமாட்டேன்" என்று விஷ்ணுபக்தர் சொன்னாராம்.

"வராவிட்டால் விட முடியாது. எப்படி நான் சொல்வது பொய் என்று இவர் பார்க்காமல் சொல்லலாம்? யார் பொய் என்று பார்த்துவிடவேண்டும்" என்று அந்தக் கிழவர் விடமாட்டேன் என்றாராம்.

கடைசியில் ஊரார் மத்தியஸ்தத்தின்மேல் இவர்கள் எல்லாரும் கோயிலுக்குச் சென்றார்கள். வாஸ்தவத்தில் அங்கே போய்ப் பார்த்தால் சிவலிங்கம் மாதிரி இருந்தது; கீழே பிரம்மபீடமாகிய ஆவுடையார் இருந்தது. அதன்மேல் பெருமாள் நின்றுகொண்டிருந்தார். அதைப் பார்த்தவுடன், "அடடா, நாம் ஏமாந்து போய்விட்டோமே. மகாவிஷ்ணு அல்லவா இங்கே இருக்கிறார்?" என்று அந்த விஷ்ணுபக்தர் மிகவும் மனம் உருகி அநேக ஸ்தோத்திரங்கள் பண்ணினாராம். அப்புறம் ஊர் சுற்றுவதையே விட்டு அந்த ஊரிலேயே நிரந்தரமாகத் தங்கிப் பெருமாளுக்குச் சேவை பண்ணிக்கொண்டிருந்தாராம்.

அந்தத் திருப்பாற்கடல் என்னும் ஊருக்குப் போனால் இப்போதும் பார்க்கலாம். ஆவுடையார் இருக்கும். அதற்குமேல் லிங்கம் இருக்கிற இடத்தில் பெருமாள் நின்றுகொண்டிருக்கிறார். இந்த க்ஷேத்திரமும் நமக்கு ஈசுவரன் வேறு, மகாவிஷ்ணு வேறு என்று இல்லை என்கிற தத்துவத்தை விளக்குகிறது. சங்கரநயினார் கோயிலில் ஒரே சரீரத்தில் சங்கரனும் நாராயணனும் இருக்கிறார்கள். இங்கே திருப்பாற்கடலில்

சிவலிங்க ஆவுடையாரின்மேல் பெருமாள் இருந்துகொண்டு பிரகாசிக்கிறார்.

ஆகையால் ஒரே பொருள் நமக்கு அநுக்கிரகம் பண்ணுவதற்கு இப்படி மூன்று ரூபமாக, மூன்று ரத்னங்களாகப் பிரகாசித்துக்கொண் டிருக்கிறது. சிவனுக்கும் அம்பாளுக்கும் பேதம் இல்லை என்பதை அர்த்தநாரீசுவரத் திருக்கோலம் தெரிவிக்கிறது. ஈசுவரனுக்கும் மகாவிஷ்ணுவுக்கும் பேதம் இல்லை என்பதைத் திருப்பாற்கடல், சங்கரநயினார் கோயில் எல்லாம் தெரிவிக்கின்றன. அபேதம் இல்லாத வஸ்துதான் பேதம் உடையது போல இரண்டு மூன்று ரூபமாக ஆவிர்ப்பவித்து நமக்கு அநுக்கிரகம் பண்ணிக்கொண் டிருக்கிறது என்பதைச் சாஸ்திர ரூபமாகவும் தெரிந்துகொள்ளலாம். க்ஷேத்திரங்களிலுள்ள மூர்த்திகளைப் பார்த்தும் தெரிந்துகொள்ளலாம். ரத்னத் திரயப் பரீட்சை என்ற கிரந்தத்திலே ரத்னத்தைப்பற்றிச் சொல்லும்போது, 'ஒரே ஸ்வரூபம் இரண்டு மூன்றாகப் பிரகாசிக்கும். எந்த எந்தக் காரியத்திற்கு எந்த எந்த மாதிரியாகப் பிரகாசிக்க வேண்டுமோ அந்த அந்த மாதிரியாகப் பிரகாசிக்கும். பல பல ரூபமாக வேறுபாடுடையது போல் தோன்றினாலும் உண்மையில் வேறுபாடு அற்ற ஒரு வஸ்து அது' என்று சொல்லியிருக்கிறது. மூர்த்திகளிலும் அந்தத் தத்வமே பிரகாசிக்கிறது. இந்த உண்மையை நாம் உணர்ந்துகொண்டு அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தினுடைய அநுக்கிரகத்தைப் பெற வேண்டும்.

# 12
# ஆனந்தத் தாண்டவமூர்த்தி

 

நடராஜா நர்த்தனம் ஆடிக்கொண் டிருக்கும் சமயத்தில், அவருடைய பக்கத்தில் பதஞ்சலி, வியாக்கிரபாதர், நந்திகேசுவரர், பிருங்கி ஆகிய நான்கு பேரும் நின்றுகொண் டிருக்கிறார்கள்: அந்த ஆனந்த நர்த்தனத்தைப் பார்த்து உள் ளம் பூரித்து, ஆனந்தத்தின் எல்லையை அவர்களும் அடைந்தார் கள். இது சிதம்பர க்ஷேத்திரத்தினுடைய ஐதிஹ்யம்.

சிதம்பரத்தில் மாத்திரம்தான் ஈசுவரன் நர்த்தனம் ஆடு கிறாரா? சூரியன் சிதம்பரத்தில் உதிக்கிறான் என்றால் நம் ஊரிலுந் தான் உதிக்கிறான். எல்லா இடங்களிலும் உதிக்கிறான். சந்திர சூரியர்கள் உதயமாக வேண்டிய காலத்தில் எல்லா இடங்களி லும் உதயமாவதைப் போலவேதான், சந்தியா காலத்தில் - பிர தோஷ காலத்தில் ஈசுவரன் சிதம்பரத்திலும் சரி, எல்லா இடங் களிலும் சரி, நர்த்தனம் பண்ணுகிறார். ஈசுவரன் நர்த்தனம் பண்ணுகிற இடத்தில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் இரண்டு மகரிஷிகளும், - நந்தி, பிருங்கி என்னும் தேவாம்சம் பெற்ற இரண்டு பேர்களும் இருக்கிறார்கள் என்று சொல்வது வழக்கம். அவர்களில் பிருங்கியும் நந்தியும் எப்போதும் ஈசுவர னோடேயே இருக்கிறவர்கள். நர்த்தன சமயத்தில் மாத்திரம் இருக்கிறவர்கள் பதஞ்சலியும் வியாக்கிரபாதரும்.

ஈசுவரன் நர்த்தனம் ஆடும்போது, அவருடைய நர்த்தன லயத்தை அநுசரித்து, தாளத்தை அநுசரித்து, பதஞ்சலி பகவான் ஈசுவரனை ஸ்தோத்திரம் பண்ணினார். அந்த ஸ்தோத் திர சம்பந்தமாக ஒரு விசேஷம் எனக்குத் தோன்றுகிறது.

பதஞ்சலியை ஆதிசேஷனுடைய அவதாரம் என்று சொல் வது உண்டு. சித்திரங்களில் மனுஷ்ய ரூபமாகவும், உடம்பெல் லாம் பாம்பினுடைய ரூபமாகவும் அவரைக் காட்டுவார்கள், அதேமாதிரி வியாக்கிரபாதருக்கு முகம் மனுஷ்யரூபமாகவும் கால் புலிரூபமாகவும் காட்டியிருப்பார்கள்;

பாம்பு புலி ஆகிய இரண்டு பிராணிகளின் அருகிலும் போக நாம் யோசனை பண்ணுவோம். தங்களுடைய சுபாவ உணர்ச்சி மாறிப்போகும்படியாக ஈசுவரன் ஆனந்த நடனத்தைக் காட்டினன். அவைகளும் உள்ளம் பூரித்து, ஆனந்தத்தின் எல்லையை அடைந்துவிடும்படியான நர்த்தனத்தைப் பண்ணுகிருர்.

நந்திக்கு இரண்டு கொம்புகள் உண்டு. நான்கு கால்கள் உண்டு. வியாக்கிரபாதருக்கு நகம் எல்லாம் நீட்டிக்கொண்டிருக்கும்; கால்கள் நான்கு உண்டு. பிருங்கிக்கு மூன்று கால்கள் உண்டு. அவர்கள் மூன்று பேரும் பதஞ்சலியைக் கொஞ்சம் ஏசினுர்களாம். ''உனக்குக் கொம்பும் இல்லை; காலும் இல்லை'' என்று ஏசிக்கொண் டிருந்தார்களாம்.

பாம்புக்குக் கால்களும் இல்லை; கொம்பும் இல்லை. பதஞ்சலி ஆதிசேஷ அவதாரந்தானே? அதனுல் அவர்கள் பரிகாசம் பண்ணினபோது, ''சரி, என்னவோ நான் இப்படிக் கொம்பும் இல்லாமல், கால்களும் இல்லாமல் இருக்கிறேன். இருந்தாலும் உங்களுக்குக் காது வேறு, கண் வேறு என்று இருக்கின்றன. அதனுல் ஈசுவரன் நர்த்தனத்தைக் கண்ணுல் கூர்ந்து பார்த்தால் காது கொஞ்சம் செயலற்றுப் போகும்; காதினுல் தாளத்தைக் கவனித்துக் கேட்டால் கண்ணுக்குக் கொஞ்சம் சக்தி குறைந்து போகும். எனக்குக் கண்ணும் காதும் ஒன்றுதானே? அதனுல் ஈசுவரன் நர்த்தனம் ஆடுவதைக் கூர்ந்து கவனிக்கும் போதே அந்தக் கால்களின் தாள கதியையும் நான் கூர்ந்தே கேட்க முடியும்'' என்று சொன்னுராம்.

பாம்புக்குக் காதும் கண்ணும் ஒன்றுதான். அதனுல்தான் 'கட்செவி' என்று பெயர். வியாகரண மகா பாஷ்யத்தைப் பண்ணினவர் பதஞ்சலிதான். நடராஜாவின் தாள ஸ்வரத்துக்கு ஏற்ப மாஹேசுவர சூத்திரங்கள் ஏற்பட்டன. அவற்றைக் கேட்டவராதலின் வியாகரணத்துக்குப் பாஷ்யம் செய்ய முடிந்தது.

''எனக்குக் கொம்பும் கால்களும் இல்லாவிட்டால் என்ன? கொம்பும் காலும் இல்லாமல் என்னைப் படைத்தவன் ஈசுவரன் தானே? அவனே கண்ணையும் காதையும் ஒன்ருகக் கொடுத்திருக்கிருன். ஆகவே அவன் நர்த்தனத்தைப் பார்த்து ஆனந்தம் அடையும்போதே, அவனுடைய கால்களின் தாள சப்தத்தையும் கேட்கிறேன். அதற்கு ஏற்றுற்போல நான் கொம்பும் இல்லாமல் காலும் இல்லாமல் அவனை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்'' என்று பதஞ்சலி மற்ற மூன்று பேர்களிடமும் சொன்னுராம்.

"உருவத்திலேதான் உனக்குக் காலும் இல்லை; கொம்பும் இல்லை; நீ பண்ணப்போகிற ஸ்தோத்திரத்திலேகூடக் காலும் இல்லாமல், கொம்பும் இல்லாமல் எப்படிப் பண்ணப் போகிறாய்?" என்று அவர்கள் சிரித்துக்கொண்டே கேட்டார்களாம்.

இப்போது நாம் 'கெ', 'கொ' என்று எழுதுகிறோம். 'க' வுக்கு முன்பு செம்மறியாட்டுக் கொம்பு போல ஒன்று போடுகிறோமே அதற்குக் 'கொம்பு' என்றுதான் பேர் சொல்கிறோம். அதேபோல, 'கோ' என்று போடும்போது 'க'வுக்கு முன்னால் இரண்டு கொம்புகளும் பின்பு கால்கள் போல 'ா' என்றும் போடுகிறோம். இதைக் 'கால்' என்றுதான் சொல்கிறோம். 'க'வைப் போட்டு ஒரு கால் வாங்கினால் 'கா' ஆகிறது.

"எனக்குக் கொம்பு, கால் இரண்டும் இல்லை அல்லவா? அதனால் நான் பண்ணுகிற ஸ்தோத்திரத்திலுள்ள எழுத்துக்களுக்கும் கொம்பு இல்லாமல் கால் இல்லாமலுமே பண்ணிவிடுகிறேன்" என்று பதஞ்சலி சொன்னாராம். 'அப்படி ஸ்தோத்திரம் பண்ணுவது எப்படி?' என்று மற்றவர்களுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. இவரோ, கால் போடுகிற தீர்க்கமான எழுத்துக்களோ, கொம்பு போடக்கூடிய 'ஏ, ஓ' ஆகிய உயிர்கள் சேர்ந்து வரும் எழுத்துக்களோ எதுவும் இல்லாமல், ஸ்தோத்திரம் பண்ணினார். இப்படி ஒரு கதை. இது என் கதைதான். அவர் பண்ணியிருக்கும் ஸ்தோத்திரத்தில் தீர்க்கமான கால் போட்ட எழுத்துக்கள் இல்லாமல், கொம்பு போட்ட எழுத்துக்கள் இல்லாமல் இருக்கிற விசேஷத்தைப் பார்த்துவிட்டு இந்தமாதிரி ஒரு கதை சொன்னேன்.

अनन्तनवरत्नविलसत्कटककिङ्किणिझलञ्झलझलञ्झलरवम्
मुकुन्दविधिहस्तगतमद्दललयध्वनिधिमिद्धिमितनर्तनपदम् ।
शकुन्तरथबर्हिरथनन्दिमुखदन्तिमुखभृङ्गिरिटिसङ्घनिकटम्
सनन्दसनकप्रमुखवन्दितपदं परचिदम्बरनटं हृदि भज ॥

அநந்தநவரத்நவிலஸத்கடக-
கிங்கிணிசலஞ்சலசலஞ்சலரவம் |
முகுந்தவிதிஹஸ்தகதமத்தலலய-
த்வநிதிமித்திமிதநர்த்தநபதம் |
ஶகுந்தரதபர்ஹிரதநந்திமுக-
தந்திமுகப்ருங்கிரிடிஸங்கநிகடம் |
ஸநந்தஸநகப்ரமுகவந்திதபதம்
பரசிதம்பரநடம் ஹ்ருதி பஜ ||

இது பதஞ்சலி பண்ணின ஸ்தோத்திரந்தான். இதிலே ஏதாவது ஓர் எழுத்து, கொக்கி போட்டு, கால் வாங்கி வந்திருக்

கிறதா என்று பாருங்கள். தீர்க்க அக்ஷரம் ஒன்றுகூடக் கிடையாது.

ஈசுவரன் காலிலே போட்டிருக்கும் சலங்கை அவர் நர்த்தனமாடும்போது எப்படி ஜல் ஜல் என்று ஒலிக்குமோ அந்தச் சப்தத்தையே இந்தச் சுலோகத்தில் காட்டுகிருர். சுலோகத்தின் நடைகூட ஈசுவரனுடைய நர்த்தன தாள கதிக்கு ஏற்ப அமைந்திருக்கிறது.

अनन्तनवरत्नविलसत्कटककिङ्किणिझलञ्झलझलञ्झलरवम् ।

அநந்தநவரத்நவிலஸத்கடக-
கிங்கிணிசலஞ்சலசலஞ்சலரவம் |

ரவம் என்பதற்குச் சப்தம் என்று அர்த்தம்.

मुकुन्दविधिहस्तगतमद्दललयध्वनिधिमिद्धिमितनर्तनपदम् ।

முகுந்தவிதிஹஸ்தகதமத்தலலயத்வநி-
திமித்திமிதநர்த்தநபதம் |

முகுந்தன் - விஷ்ணு. விதி - பிரம்மா. பதஞ்சலி சொல்கிருர்: பிரம்மாவும் விஷ்ணுவும் தங்களுடைய ஹஸ்தத்தினுலே மத்தளம் வாசித்துத் தாளம் போட, அவற்றிற்கு ஏற்ப ஈசுவரன் திமித்திமி திமித்திமி என்று நர்த்தனம் செய்கிருனும்.

இப்படி, திமித்திமி திமித்திமி என்று அவர்கள் வாசிக்கிற மத்தள லயம், கரதாளம் இவற்ருேடு ஈசுவரன் நடனம் ஆடும்போது அவருடைய கால்களில் உள்ள சலங்கைகள் ஜல் ஜல் என்று ஒலிக்கின்றன. இந்த நர்த்தன பாதத்தை யாரெல்லாம் கூடி இருந்து பார்த்துக்கொண் டிருக்கிருர்கள் என்பதைப் பதஞ்சலி சொல்கிருர்.

नन्दिमुखदन्तिमुखभृङ्गिरिटिसङ्घनिकटम् ।

நந்திமுகதந்திமுகப்ருங்கிரிடிஸங்கநிகடம் |

நந்தி, தந்திமுகன், ப்ருங்கி, ரிடி இவர்கள் எல்லாம் கூடியிருக்கிருர்கள். இவர்கள்தாம் பதஞ்சலியைப் பரிகாசம் செய்தவர்கள் என்ருலுங்கூட, பதஞ்சலி இவர்களையும் சேர்த்தே ஸ்தோத்திரத்தில் சொல்லியிருக்கிருர்.

ஸங்கம் - கூட்டம்; நிகடம் - சமீபம். நந்தி, தந்திமுகன், ப்ருங்கி, ரிடி இவர்கள் எல்லாம் கூட்டமாகச் சமீபத்தில் இருந்து பார்த்துக்கொண் டிருக்கும்படியான நர்த்தன பதம் அது.

सनन्दसनकप्रमुखवन्दितपदं परचिदम्बरनटं हृदि भज ॥

ஸநந்தஸநகப்ரமுகவந்திதபதம்
பரசிதம்பரநடம்ஹ்ருதி பஜ ||

இவர்கள் எல்லாரும் ஸ்தோத்திரம் பண்ணும்படியான சரணாரவிந்தத்தை உடையவர் ஈசுவரன். தில்லைவெளியில் அவர் ஆடிக்கொண்டிருப்பதை எல்லோரும் அநுபவிக்கிறார்கள். ஈசுவரன் நிறைந்த ஆனந்தத்தோடு ஆடுகின்றதனால் அதற்கு ஆனந்தத் தாண்டவம் என்று பெயர். உள்ளே இருக்கும் ஆனந்தம் ஓர் உருவத்தோடு ஆடினால் எப்படி இருக்குமோ அப்படி ஆடுகிறார் ஈசுவரன். ஆடுகின்ற அந்தப் பதத்திற்குக் 'குஞ்சித சரணம்' என்று பெயர்.

परचिदम्बरनटं हृदि भज ।

பரசிதம்பரநடம் ஹ்ருதி பஜ |

'பரதத்துவமாக இருக்கும்படியான நடராஜனை ஹ்ருதயத்தில் பஜி' என்று சொல்கிறது இந்தச் சுலோகம். இதே மாதிரியாகப் பத்துச் சுலோகங்கள் பண்ணியிருக்கிறார். இன்னொரு சுலோகம் சொல்கிறேன். இதிலும் கால் போட்ட எழுத்து, கொம்பு போட்ட எழுத்து ஒன்றாவது இருக்கிறதா என்று பாருங்கள்; இராது.

हरं त्रिपुरभञ्जनमनन्तकृतकङ्कणमखण्डदयमन्तरहितम्
विरिञ्चिसुरसंहतिपुरन्दरविचिन्तितपदं तरुणचन्द्रमुकुटम् ।
परं पदविखण्डितयमं भसितमण्डिततनुं मदनवञ्चनपरम्
चिरन्तनममुं प्रणतसञ्चितनिधिं परचिदम्बरनटं हृदि भज ॥

ஹரம் த்ரிபுரபஞ்ஜநமநந்தக்ருதகங்கண-
மகண்டதயமந்தரஹிதம்
விரிஞ்சிஸுரஸம்ஹதிபுரந்தரவிசிந்திதபதம்
தருணசந்த்ரமுகுடம் |
பரம் பதவிகண்டிதயமம் பஸிதமண்டிததநும்
மதநவஞ்சநபரம்
சிரந்தநமமும் ப்ரணதஸஞ்சிதநிதிம்
பரசிதம்பரநடம் ஹ்ருதி பஜ ||

ஹரன் என்பதற்குக் கள்வன் என்று அர்த்தம்: எல்லாவற்றையும் அபஹரித்துக்கொண்டு போகிறவன், தூக்கிக்கொண்டு போகிறவன் என்று அர்த்தம். ஈசுவரன் எதை அபஹரித்துக்கொண்டு போகிறார்? தன் பக்தர்களுடைய தாபத்ரயத்தை, கஷ்டம், துக்கம், பாவம் எல்லாவற்றையும் முதலில் அபஹரித்துக்கொண்டு போகிறார். அப்புறம் அவர்களுடைய பக்தி முற்றிவிட்டால், நிறைந்த பக்தி உள்ளத்தையே அபஹரித்துக்கொண்டு போகிறார். 'உள்ளங் கவர் கள்வன்' என்று ஞானசம்பந்தக் குழந்தை சொல்லிற்று. முடிவில் மகாப்பிரளய காலத்

தில் சராசரங்கள் எல்லாவற்றையும் அபஹரித்துத் தனக்குள் அடக்கிக்கொண்டு விடுகிறுர். இப்படி எல்லாவற்றையும் அபஹரித்துக்கொண்டு போகிறதால் ஹரன் என்ற நாமம் வந்தது.

हरं त्रिपुरभञ्जनमनन्तकृतकङ्कणमखण्डदयमन्तरहितम् ।

ஹரம் த்ரிபுரபஞ்ஜநமநந்தக்ருதகங்கண -
மகண்டதயமந்தரஹிதம் |

த்ரிபுரபஞ்ஜனம் - த்ரிபுரசம்ஹாரம்; புரம் - பட்டணம். மூன்று பட்டணங்களைச் சம்ஹாரம் பண்ணினவன் ஈசுவரன். ஸ்தூலமாக இதற்கு அர்த்தம் பண்ணுகிறபோது ஒரு புராணக் கதை தெரியவரும்.

மூன்று கோட்டைகளுடன் கூடிய பட்டணங்களில் மூன்று அசுரர்கள் இருந்தார்கள். அவர்களால் அநேக உபத்திரவம் ஜனங்களுக்கும் தேவர்களுக்கும் ஏற்பட்டன. அவர்களை எப்படி ஸம்ஹாரம் பண்ணுவது என்று தேவர்கள் யோசித்தார்கள். கடைசியில், 'ஈசுவரன்தான் சம்ஹாரம் பண்ண வேண்டும்; அவருக்கு நாம் எல்லோரும் சகாயமாக இருக்கலாம்' என்று சகல தேவர்களும் தீர்மானம் பண்ணினுர்களாம்.

ஈசுவரனுக்குப் பூமி ரதமாகவும், அந்த ரதத்திற்குச் சூரிய சந்திரர்கள் இரண்டு சக்கரங்களாகவும், பிரம்மா சாரதியாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், மகாவிஷ்ணு வில்லில் வைத்துப் பூட்டும் அம்பாகவும் இருந்து சகாயம் பண்ணுவது என்று தீர்மானம் செய்தார்கள். ஈசுவரன் இவர்கள் எல்லாருடைய சகாயத்தையும் உபயோகப்படுத்திக்கொள்ளச் சம்மதித்தார்.

ரதத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டு திரிபுரங்களைச் சம்ஹாரம் பண்ணப் புறப்பட்டபோது அவரே நினைத்தார்; 'என்னடா! நம் காரியம் இவர்கள் எல்லாருடைய சகாயத்தினுல் எப்படி நடக்கும்? இவர்கள் ஒருவரோடு ஒருவர் ஒட்டாதவர்களாக இருக்கிறுர்களே! பூமி ரதம் என்றுல் நகருமா? அதற்குச் சூரியன் ஒரு சக்கரம்; சந்திரன் ஒரு சக்கரம். இரண்டும் ஒரே சமயத்தில் ஓடுவது இல்லையே! ஒன்று காலையில் ஓடினுல் மற்றென்று ராத்திரி ஓடும். அம்பு விஷ்ணு; அது ஒரே தூக்கத்தில் இருந்துகொண் டிருக்கும் பேர்வழி. இவர்களைச் சகாயமாக வைத்துக்கொண்டு நாம் திரிபுர சம்ஹாரத்திற்குக் கிளம்பிவிட்டோமே' என்று நினைத்தான். அவனுக்கே சிரிப்பு வந்துவிட்டது. ஒரு சிரிப்புச் சிரித்தான். அந்தச் சிரிப்பினுலேயே திரிபுரங்கள் சம்ஹாரம் ஆகிவிட்டன. இது பழைய கதை.

இதற்குச் சூக்ஷ்மமான தத்துவம் ஒன்று உண்டென்று சொல்வார்கள். நம்முடைய தேஹந்தான் பட்டணம். பொதுவாகத் தேஹம் என்று சொல்லிவிட்டாலும் கவனித்துப் பார்த்தால் மூன்று பிரிவுகள் இருக்கின்றன. கை, கால், சதை, எலும்பு, நரம்பு, ரத்தம் இவைகளெல்லாம் சேர்ந்தது ஒன்று; அது ஸ்தூல சரீரம் என்பது. பார்க்கிற சக்தி, கேட்கிற சக்தி, தொடும் சக்தி, ரசிக்கிற சக்தி என்று உடம்பில் பல விதமான சக்திகள் இருக்கின்றன. மனசில் மனசு, புத்தி, சித்தம், அகங்காரம் என்று நான்கு பிரிவுகள் இருக்கின்றன. இதை எப்படிப் பண்ணலாம் என்று ஆலோசித்து நிச்சயிக்கிறது புத்தி. நின்று செய்வது சித்தம். 'நான் செய்கிறேன்' என்பதான நினைப்பு அகங்காரம். 'எப்படி முடியுமோ, என்ன பலன் வருமோ?' என்று தவிப்பது மனம். இப்படி உள்ளே இருக்கும்படியான பலவிதமான சக்திகளுக்கெல்லாம் சேர்த்துச் சூக்ஷ்ம சரீரம் என்று பெயர்.

தூங்கும்போது எல்லாம் மூடிக்கொண்டு ஒரே இருட்டாகப் போய்விடுகிறது. கண் தூங்கும்போது மூடியிருந்தாலும் திறந்திருந்தாலும் பார்ப்பதில்லை. காது திறந்திருந்தாலுங்கூடக் கேட்பதில்லை. உடம்பிலே ஒருவிதமான சக்தியும் இல்லாமல், தூங்கும்போது ஓர் ஆனந்தம் ஸ்புரித்துக்கொண்டு இருக்கிறதே, அந்த ஆனந்தமடையும் சரீரத்துக்குக் காரண சரீரம் என்று பெயர். இந்த மூன்று சரீரங்களுமே பரமாத்ம ஸ்வரூபத்தை மறைக்கின்றன. இந்த மூன்று சரீரங்களையும் அழித்துவிட்டால் நமக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. சதா ஆனந்த ஸ்வரூபத்தோடு ஒன்றுபட்டு ஆனந்தமயமாக இருக்கலாம். இந்தத் திரிபுரங்களைச் சம்ஹாரம் பண்ணுவது எப்படி? சிரித்துச் சிரித்துச் சம்ஹாரம் பண்ணவேண்டும்; சிரிப்பினாலேதான் எல்லாத் துன்பங்களையும் இடைஞ்சல்களையும் சம்ஹரித்துவிட்டு ஆனந்தமயமாக ஆனந்த ஸ்வரூபத்தோடு ஒன்றுபடவேண்டும். இதுதான் சூக்ஷ்மம்.

### अनन्तकृतकङ्कणम्

### அநந்தக்ருதகங்கணம்

கங்கணம் - கையில் போட்டுக்கொள்ளக் கூடிய கடகம். அனந்தன் - ஆதிசேஷன்; அவன் பாம்பு. பாம்பை ஈசுவரன் தன் கையில் கடகமாகப் போட்டுக்கொண்டிருக்கிறான்.

### अखण्डदयं अन्तरहितम्

### அகண்டதயம் அந்தரஹிதம்

அவருடைய தயை அகண்டமானது; எல்லையில்லாதது. நம்முடைய தயைக்கு எல்லை உண்டு. அதற்குமேல் போனால் கோபம் வந்துவிடும். வைவதற்கு ஆரம்பித்துவிடுவோம். நம்மைப் போல் கண்டமான தயை உடையவர் அல்ல ஈசுவரன். எப்படி அவர் ஆதி அந்தம் இல்லாதவரோ அப்படியே அவருடைய தயையும் ஆதி அந்தம் இல்லாமல் அகண்டமாக இருக்கிறது.

विरिञ्चिसुरसंहतिपुरन्दरविचिन्तितपदं तरुणचन्द्रमुकुटम् ।

விரிஞ்சிஸுரஸம்ஹதிபுரந்தரவிசிந்திதபதம்
தருணசந்த்ரமுகுடம்

இந்திரன் முதலான சகல தேவர்களுடைய இருதயத்திலும் இருக்கும் சரணத்தை உடையவர்; தருணசந்திரனை, பிஞ்சான சந்திரனை ஜடாமகுடத்திலே ஒட்டி வைத்துக்கொண் டிருக்கிறவர். தருணசந்திரன் என்பதைத்தான் தமிழில் பிறைச் சந்திரன் என்பார்கள்.

சம்பந்த சுவாமிகள் அழகாகப் பாடுகிறார்—

கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

சிதம்பர க்ஷேத்திரத்தில் தில்லை அம்பலத்தில் நர்த்தனமிடும் பெருமானைப்பற்றிப் பாடுகிறார். நாயன்மார்கள், ஆழ்வார்கள் எல்லோரும் ஒரு க்ஷேத்திரத்திற்குப் போனால் அந்த க்ஷேத்திரத்தில் உள்ள ஈசுவரனையோ பெருமாளையோ பற்றிப் பாடுவதற்கு முன்னால், அந்த ஊரில் எழும்படியான வேத ஒலி, ஹோமப் புகை, தானதர்மங்களின் பெருமை இவை எல்லாவற்றையும் சேர்த்துப் பாடியிருப்பார்கள்.

'நான்கு வேதங்களும், ஆறு ஆகமங்களும், அறுபத்து நான்கு கலைகளும் இருக்கும்படியான இந்த ஊரில் விபூதி தாரணம் பண்ணிக்கொண்டு ஹோமப்புகை வானளாவ எழும்படியாக வேள்விகள் செய்துகொண் டிருக்கும் அந்தணர்களால் பூஜிக்கப்படுகிற பெருமானே' என்பதாக அநேக இடங்களில் அப்பர் சுவாமிகளும் பாடியிருக்கிறார்.

நாயக நாயகி பாவத்தில் ஆழ்வார்கள் பாடியிருக்கும் பாட்டுகளிலும் இப்படி வரும்.

ஸ்திரீகள் எப்படித் தம்மைப் பர்த்தாவுக்கு அர்ப்பணம் பண்ணிவிடுகிறார்களோ, அப்படி ஈசுவரனை நாயகனாகவும், தங்களை நாயகிகளாகவும் பாவித்துப் பாடியிருக்கிறார்கள்.

'சரீரம் இருந்தால் இருக்கட்டும்; போனால் போகட்டும். மானம் வந்தாலும், அவமானம் வந்தாலும் சரி; நமக்கென்ன? அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பது ஒன்றுதான் நம்முடைய விரதம்' என்று அநேக விரதங்களைப் போல இதையும் ஸ்திரீகள் ஒரு விரதமாக வைத்துக்கொள்வதுதான் பதிவிரதம் என்பது. பதிக்குத் தன்னை அர்ப்பணம் பண்ணிவிட்டுக் கொஞ்சங்கூடக் கர்வம் இல்லாமல் இருப்பது பதிவிரதம். அவனுக்குச் சுச்ரூஷை செய்வது ஒன்றே தன் விரதம்; அவன் தப்பான, அக்கிரமமான காரியத்தைச் சொன்னாலும் செய்யவேண்டியதுதான்' என்று இருப்பவர்கள் பதிவிரதைகள். 'எங்கேயோ தூக்கிக் கொண்டு போகச் சொன்னான்' என்று தன் பதியை ஒரு கூடையில் வைத்து ஒருத்தி தூக்கிக்கொண்டு போனாள். கழுமரத்தில் இருந்த ஒருவன் காலில் பட்டு அவன் சபித்தான். அவள் அந்தச் சாபமே பலிக்காமல் போகும்படி செய்தாள். இப்படிப் பதிவிரதத் தன்மையை விளக்க ஒரு கதை உண்டு.

ஈசுவரன்தான் புருஷன். மற்ற எல்லோரும் ஸ்திரீகளே. பகவானைப் புருஷனாக எண்ணித் தம்மைப் பெண்களாகப் பாவித்துப் பக்தி பண்ணும் நிலையே நாயகி நாயக பாவம். அந்தப் பாவத்தில் பல பாசுரங்கள் இருக்கின்றன.

ஞானம், பக்தி என்பவற்றைச் சிருங்கார ரசம் கலந்து திருக்கோவையாரில் நிறையச் சொல்லி யிருக்கிறது. மீராபாய் அப்படித்தான் கிரிதர கோபாலனுக்கே தன்னை அர்ப்பணம் பண்ணிவிட்டாள். வடமதுரையை விட்டுக் கிருஷ்ணபகவான் லீலைகள் புரிந்த இடமாகிய பிருந்தாவனத்துக்கே போய் விட்டாள்.

வட தேசத்து ஆசாரியர்களில் வல்லபாசாரியார், ஸூர் தாஸைப் போல ஒரு குரு. பிருந்தாவனத்துக்குப் போயிருந்த போது அவரைத் தரிசனம் பண்ண வேண்டுமென்று மீராபாய் கேட்டாளாம். அதற்கு அவர், ''நான் ஸ்திரீகளையே பார்ப்ப தில்லை'' என்று சொல்லி அனுப்பிவிட்டாராம்.

''இந்தப் பிருந்தாவனத்தில் ஸ்திரீகளைப் பார்ப்பதில்லை யென்றால் இவர் புருஷர்போல இருக்கிறது. இந்தப் பிருந்தாவனத்தில் புருஷன் ஒருவன்தான். அந்தக் கிருஷ்ணனைத் தவிர, பாக்கி எல்லாரும் ஸ்திரீகள்தாம். வேறு புருஷர்கள் இங்கே வரக்கூடாது. ஆகவே இவருக்குத் தாம் புருஷர் என்ற எண்ணம் இருந்தால் உடனே இந்த எல்லையை விட்டுப் போகச் சொல்'' என்று மீராபாய் சொல்லி அனுப்பினாளாம்.

அதைக் கேட்டவுடன், ''அடடா! இவள் உத்தமமான ஞானிபோல் இருக்கிறதே! என்ன அபசாரம் பண்ணிவிட்டோம்'' என்று அவர் மிகவும் துக்கப்பட்டு இவளை நமஸ்காரம் பண்ணினாராம். இவள் அவருக்கு நமஸ்காரம் பண்ணினாளாம். இவள் அவருக்குக் குருவாகவும், அவர் இவளுக்குக் குருவாகவும் ஆனதாக மீராபாய் சரித்திரத்தில் வருகிறது. இந்த மாதிரியான நாயக நாயகி பாவத்தில் பக்தி பண்ணும்போது ஸ்வாமி ஒருத்தரே புருஷர், மற்றவர்கள் எல்லாரும் ஸ்திரீகள் என்று எண்ணுவார்கள்.

ஆழ்வார் என்பதற்கே நல்ல யௌவனத்தோடு இருக்கும் நங்கை என்று அர்த்தம். ஆயிரம் வருஷங்களுக்கு முந்தின பழைய கோயில் கல்வெட்டுக்களிலே, ஒரு ராஜா ஒரு ஸ்திரீயைக் கல்யாணம் பண்ணிக்கொண்டான் என்றால், இன்ன ராஜாவுக்கும் இன்ன ஆழ்வாருக்கும் கல்யாணம் நடந்தது என்று பொறிக்கப்பட்டிருக்கும். அதிலிருந்து நல்ல யௌவனத்தோடு இருக்கும் உத்தம லக்ஷணம் உடைய ஸ்திரீயைக் குறிக்க ஆழ்வார் என்று எழுதியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

அதிலிருந்து பகவானைத் தன் நாயகனாகவும், தங்களை ஸ்திரீகளாகவும் பாவித்துப் பக்தி பண்ணிப்பல பல பாடல்களை எழுதியிருப்பவர்களுக்கு 'ஆழ்வார்கள்' என்ற பெயர் வந்துவிட்டது.

ஒரு பெண் தன் நாயகனுடைய விரகதாபத்தினால் என்ன என்ன செய்கிறாள் என்பதை அவளுடைய தாய் சொல்வது போல ஓர் ஆழ்வார் சொல்லியிருக்கிறார். அப்படிச் சொல்கிறபோது விபூதி இட்டுக்கொண்டு ஒருவன் போகிறதைப் பார்த்தால் அவன் விஷ்ணு பக்தன் என்று பின்னே ஓடுகிறாளாம். அதே மாதிரி துளசி மாலை போட்டவனைக் கண்டால் விஷ்ணு பக்தன் என்று அவன் பின்னாடியே ஓட ஆரம்பிக்கிறாளாம்.

நீறு செவ்வே இடக்காணில் திருமாலடியா ரென்றோடும்.

**து**ளசி மாலையைத் தரித்துக்கொண் டிருக்கிறவனைப் பார்த்து அவள் அவன் விஷ்ணுபக்தன் என்று நினைக்கலாம். திருநீறு அணிகிறவனைப் பார்த்தும் அவனை அவள் விஷ்ணு பக்தன் என்று நினைத்து ஓடியிருக்கிறாள் என்பதிலிருந்து, அந்தக் காலத்தில் எல்லாரும் விபூதி தரித்துக்கொண்டார்கள்; துளசி மாலை தரித்துக்கொண்டார்கள்; உடம்பிலே திருநீறு; துளசி மாலை; நாவிலே விஷ்ணு நாமம்; இருதயத்திலே விஷ்ணு ஸ்வரூபம் இப்படி இருந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது.

ஆனல் வைஷ்ணவர்களில் சிலர், ''அதெல்லாம் கிடையாது. இந்தப் பெண் ஒரு பைத்தியம்; அதனலே விபூதி தாரணக்காரனை விஷ்ணுபக்தன் என்று நினைத்து அவன் பின்னேடு ஓடியிருக்கலாம்'' என்று சொல்லலாம்;

உன்மாதம் அதிகமாக இருந்தாலும் இப்படி ஆகும் என்பது வாஸ்தவந்தான். ஆனல் அடுத்த அடியில் துளசிமாலை தரித்துக்கொண் டிருப்பவனைப் பார்க்கும்போது பைத்தியம் இல்லையா? பொதுவாக, பிராசீனப் பழக்கத்தைப் பார்த்தால் எல்லாரும் பஸ்மம் தரித்துக்கொண்டார்கள்; விஷ்ணு நாம கீர்த்தனம் செய்தார்கள் எனத் தோன்றுகிறது.

சமீப காலத்திலேகூடச் சத்குரு போதேந்திர ஸ்வாமிகள் காலத்தில் இதே மாதிரியாக பஸ்மதாரணம், ஹரிநாம சங்கீர்த்தனம் செய்திருக்கிறர்கள் என்று தெரிகிறது. கோவிந்தபுரம், மருதாநல்லூர் இங்கே மடங்கள் இருக்கின்றன. இன்றைக்கும் நாமசங்கீர்த்தனம் பண்ணுவது என்றல், போதேந்திர ஸ்வாமிகளுக்கு நமஸ்காரம் பண்ணிக்கொண்டுதான் இருக்கிறர்கள்.

यस्यांगं कनकाभकामसदृशं फालं त्रिपुण्ड्राङ्कितं
वाणी श्रीरघुनाथनामसुधयाप्यार्द्रासकृद्धारया ।
चेतस्यंबुजलोचनो यदुपतिः खेलत्यलं राधया
तं वै वेङ्कटरामदेशिकवरं सर्वात्मनाहं भजे ॥

யஸ்யாங்கம் கனகாபகாமஸத்ருசம் பாலம் த்ரிபுண்ட்ராங்கிதம்
வாணீ ஸ்ரீரகுநாதநாமஸுதயாப்யார்த்ராஸக்ருத்தாரயா |
சேதஸ்யம்புஜலோசனே யதுபதி: கேலத்யலம் ராதயா
தம் வை வேங்கடராமதேசிகவரம் ஸர்வாத்மநாஹம்பஜே ||

பஜனை செய்கிறபோது இந்தச் சுலோகத்தை இன்றைக்கும் சொல்லிக்கொண் டிருக்கிறேம். நெற்றியில் திருநீற்றுப் புண்டிரம், நாவில் விஷ்ணுவின் நாமம்; வேங்கடராமன் என்று பெயர். இவர்கள் சமீப காலத்தில்தான் இருந்திருக்கிறர்கள். தஞ்சை அரசன்கூட அவர்களுக்கு உதவி செய்ய வந்தபோது பணத்தை அவர் ஏற்கவில்லை; அதனல்தான் ஏராளமான மானியம் எழுதி வைத்து இந்தப் பாகவதர்கள் உஞ்சவிருத்திக்கு வரும்போது உஞ்சவிருத்தி போடுங்கள் என்று பாகவதபுரம், பக்தபுரி அக்கிரகாரம் ஆகியவற்றை ஏற்படுத்தினன் என்று சொல்வார்கள்.

இந்த அடிப்படையான தத்துவத்தைத்தான் ஆதி ஆசார்ய ஸ்வாமிகள் உபதேசம் பண்ணிக்கொண்டு வந்தார். தம்முடைய அவதாரத்தை முடித்துக்கொண்டு அவர் கைலாசத்திற்குப் போகும்போது சிஷ்யர்கள் எல்லாம், ''ஈசுவரனுடைய கிருபையை அடைய எங்களுக்குச் சுருக்கமாகத் தாங்கள் செய்கிற உபதேசம் என்ன?'' என்று பிரார்த்தித்துக் கொண்டார்களாம். ஆசார்ய ஸ்வாமிகள் அப்போது ஐந்து சுலோகங்களில் சுருக்கமாக உபதேசம் பண்ணினுர்.

वेदो नित्यमधीयतां तदुदितं कर्म स्वनुष्ठीयतां

வேதோ நித்யமதீயதாம் ததுதிதம் கர்ம ஸ்வநுஷ்டீயதாம்

என்று ஆரம்பித்துச் சொல்கிறுர். 'நித்தியம் வேதாத்தியயனம் பண்ணிக்கொண் டிரு. அவரவர்கள் அவரவர்களுக்குரிய கர்மாக்களைச் செய்து வருவது ஒன்றுதான் ஈசுவர பூஜை' என்று சொன்ஞர்கள்.

சம்பந்த சுவாமிகளுக்கு இது ஞாபகம் வந்ததோ என்னவோ?

'கற்ருங்கு எரியோம்பிக் கலியை வாராமே
செற்ருர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய'

எனப் பாடுகிறுர். கற்று - வேதத்தைக் கற்று, ஆங்கு - அதில் சொல்லப்பட்டபடி, எரி ஓம்பி - அக்கினிஹோத்திரம் பண்ணி; வேள்விகள் எல்லாம் செய்து. ஆசார்யரவர்களும் இதைத்தான்,

वेदो नित्यमधीयतां

வேதோ நித்யமதீயதாம்

என்று சொன்ஞர்கள். இப்படிச் செய்தால் பயன் என்ன?

கலியை வாராமே செற்ருர்

கலியினுடைய உபத்திரவம் வராது. கலியினுடைய உபத்திரவம் இல்லாமல் செய்பவர் யார்?

கற்ருங்கு எரிஓம்பிக் கலியை வாராமே
செற்ருர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய

கலியினுடைய உபத்திரவம் வாராமல் வேதத்தைக் கற்று, அதில் சொல்லியிருக்கும்படியான வேள்விகளைச் செய்து கொண்டு வருபவர்களான அந்தணர்கள் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலத்தில் தஹராகாசத்தில் நர்த்தனம் பண்ணிக்கொண் டிருக்கிறுர் ஈசுவரர்.

முற்ரு வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்ரு நின்ருரைப் பற்ரு பாவமே.

முற்றாத இளங்கீற்றுப் பிறையை அணிந்தவரும், எல்லாவற்றிற்கும் மூலமான வஸ்துவுமாகிய ஈசுவரனுடைய பாதத்தைத் தம் இருதய கமலத்திலே பற்றிக்கொண்டு விட்டவர்களுக்குப் பாவம் ஒன்றும் பற்றாது'' என்று சம்பந்தர் பாடுகிறார்.

சிறு அம்பலம் சிற்றம்பலம்; அல்ப ஆகாசம்; அம்பலம் என்றால் பொதுவாக வெளியாகிவிட்டது என்று அர்த்தம்; சித் அம்பரம் சிதம்பரம் என்று நினைப்பார்கள். அது சிறு - அம்பலம்; தப்ரசபா.

சம்பந்த சுவாமிகளுடைய இந்தப் பாட்டும்,

वेदो नित्यमधीयतां तदुदितं कर्म स्वनुष्ठीयतां
तेनेशस्य विधीयतामपचितिः

வேதோ நித்யமதீயதாம் ததுதிதம் கர்ம ஸ்வநுஷ்டீயதாம்
தேநேஶஸ்ய விதீயதாமபசிதி:

என்று ஆசார்யர்கள் சொன்னதும் ஒன்றாகவே இருக்கின்றன. அவரைப் பார்த்து இவர் இப்படி எழுதினார் என்று சொல்ல வரவில்லை. எந்த நாட்டில், எந்தக் காலத்தில் பிறந்தவர்களாக இருந்தாலும் அநுபூதிமான்களுடைய அநுபவ வாக்கு இப்படித்தான் ஒன்றைப் பார்த்து ஒன்று சொன்னது போல அமையும்; உள்ளே இருக்கிற பிரகாசம் ஒன்றாக இருந்தால் ஒரே மாதிரி வாக்கும் வந்துவிடும்.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

என்னும் பாட்டில் சம்பந்த சுவாமிகள், பதஞ்சலி மகரிஷி तरुणचन्द्रमुकुटम् (தருணசந்த்ரமுகுடம்) என்று சொல்லியிருப்பதை, வெகு அழகாக, 'முற்றா வெண்திங்கள்' என்று சொல்லியிருக்கிறார் என்று சொல்ல வந்தேன். முற்றா வெண்திங்கள் என்றால் இன்னும் முற்றாத, வளராத மூன்றாம் பிறைச் சந்திரன்; சின்னக் குழந்தை. 'முற்றா வெண்திங்கள்' எனச் சொல்லியிருப்பது மிகவும் பொருத்தமாக - அழகாக இருக்கிறது என்று சொல்ல வந்தேன்.

परं पदविखण्डितयमम्
பரம் பதவிகண்டிதயமம்

பரம் என்றால் அதற்கு மேலான நிலை ஒன்று இல்லை என்று கொள்ளவேண்டும்; மேலானது ஒன்று இல்லாத - உயர்ந்த

நிலே பரம். தன் இடக் காலாலே யமனே அடித்து வீழ்த்தினுர் ஈசுவரன். பதவிகண்டிதயமம். யமம் - யமனே.

भसितमण्डिततनुम्

பஸிதமண்டிததநும்

பஸிதம் - நீறு. நீறு ஒன்றுதான் நிலேயானது; பாக்கி எல்லாப் பொருள்களும் எப்படி எப்படி இருந்தாலும் முடிவில் நீருகப் போகின்றன. ஆனுல் நீறு நீருகத்தான் இருக்கும். பஸ்ம தாரணம் பண்ணிக்கொள்கிற அலங்காரம் ஒன்றுதான் நித்திய மான, சாசுவதமான அலங்காரம்.

भसितमण्डिततनुम

பஸிதமண்டிததநும்

தநும் - சரீரம். பஸ்மத்திஞலே பூசப்பட்டிருக்கும்.

சேக்கிழார் சுவாமிகள் அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய சரித்திரத்தை எழுதினுர். சிவனடியார் கூட்டத்தைச் சொல்லும்போது அவர்கள் எல்லாம் சாக்ஷாத் பரமேசுவரனேப் போலவே உடம்பு முழுக்கப் பஸ்மம் பூசிக்கொண் டிருந்தார்கள் என்று சொல்கிருர்.

ஈசுவரனுடைய பக்தர்களாகிய நாயன்மார்கள் அறுபத்து மூன்று பேர்கள்; இவர்கள் பெயர் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் இன்னும் எத்தனேயோ பேர்கள் இருக்கலாம். இந்தத் தமிழ்நாட்டு எல்லேயில் இல்லாமல் வேறு எந்த எந்த இடங்களிலோ இருக்கலாம் அல்லவா? அதனுல்தான் இந்தத் தமிழ் எல்லேக்கு - நமக்குத் தெரிந்தவர்களுடைய எல்லேக்கு அப்பாலே உள்ளவர்களே,

'அப்பாலும் அடிசார்ந்தார்க் கடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே"

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடினுர்.

அப்பால் எங்கெங்கே இருந்து மோக்ஷம் அடைந்திருக்கிருர்களோ அவர்களுக் கெல்லாம் அடியேன் என்று சொன்னுர்.

இந்த அர்த்தத்திலேதான் தியாகையரவர்கள்,

எந்தரோ மஹானுபாவுலு

என்று பாடினுர். அவர்களுக்கு என்ன அடையாளம்? தனியாக அவர்கள் போட்டுக்கொள்ளும் மெடல் என்ன?

முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்

நீறு - பஸ்மம். உடம்பெல்லாம் நீறு பூசிக்கொண் டிருக்கும் முனிவர்கள். இவர்கள் எல்லாராலும் தியானம் செய்யப்படு

கிற நித்தியமான, சத்தியமான வஸ்து பஸ்ம தாரண அலங்காரப் பிரியனாக இருக்கிறான்.

**भसितमण्डिततनुं मदनवञ्चनपरं चिरन्तनममुम्**

**பஸிதமண்டிததநும் மதநவஞ்சநபரம்சிரந்த நமமும்**

சிரந்தனம் - எப்போதும் இருப்பவன்.

**प्रणतसञ्चितनिधिम्**

**ப்ரணதஸஞ்சிதநிதிம்**

நமஸ்காரம் பண்ணுகிறவர்களுக்குச் சாசுவதமான நிதி - ஐசுவர்யம் அவன்தான்.

பகவான் நர்த்தனம் பண்ணுகிற காலத்தில்—ஆனந்தத் தாண்டவம், ஊர்த்துவ தாண்டவம் ஆகிய எந்த நர்த்தனமாக இருந்தாலும் வாசிக்கும் மத்தளத்துக்குச் சுத்த மத்தளம் என்று பெயர். தாளமும் சுத்த மத்தளமும் உண்டு. அவர் ஆனந்தமாக நர்த்தனம் பண்ணுகிற காலத்தில் எல்லாருடைய இருதயமும் ஒடுங்குகிறது. சித்தம், மனசு எல்லாம் அடங்குகிறது.

குழந்தைகளுக்கு ஆனந்தம் வந்துவிட்டால் அப்படித்தான் துணிகளை எல்லாம் அவிழ்த்துப் போட்டுவிட்டுக் கூத்தாடும்; ஒரு கட்டும் இல்லாமல் ஆனந்தம் பொங்கும்போது ஈசுவரனும் கூத்தாடுகிறான். அப்படிப்பட்ட ஆனந்தம் வந்தால்தான் எப்படிக் கூத்தாடுவது என்பது தெரியும். நாம் எல்லாம் அழுது கொண்டிருக்கிற சாதி. மிகவும் சந்தோஷம் வந்துவிட்டால் வெள்ளைக்காரர்கள் கூத்தாடுவார்கள்.

சந்தியா காலங்களில் ஈசுவரன் ஆனந்த நர்த்தனம் செய்கிறார்; அப்போதுதான் எல்லாம் ஒடுங்குகின்றன. அந்தச் சமயத்தில் நாம் ஈசுவரத் தியானம் பண்ண வேண்டும். மன ஓட்டம் ஒடுங்கி ஒருமைப்படும். ஈசுவரனுடைய நர்த்தனத்தின் அழகை, லயத்தை, தாளத்தை எல்லாம் ஒரே சமயத்தில் பார்த்தும் கேட்டும் பதஞ்சலி தாண்டவ ஸ்தோத்திரம் செய்தார். பத்துச் சுலோகங்கள், பல சுருதியோடு. அதற்கு 'நடேசாஷ்டகம்', ஸ்ரீ சம்பு நடனம் என்று பெயர். இன்று சோம வாரம். அதனால்தான் ஈசுவரனை நானும் கொஞ்சம் நினைத்து இதைச் சொன்னேன்.

13

# உபநிஷத்தில் வரும் உமாதேவி



வேதத்தினுடைய சிகரமாக இருப்பது உபநிஷத்து. உபநிஷத்துகள் அநேகம் உண்டு. அவற்றில் முக்கியமானவை பத்து. தசோபநிஷத் என்பார்கள்.

> ईशाकेनकठप्रश्नमुण्डमाण्डूक्यतित्तिरि ।
> ऐतरेयं च छान्दोग्यं बृहदारण्यकं दश ॥

> ஈசாகேநகடப்ரச்நமுண்டமாண்டூக்யதித்திரி |
> ஐதரேயம் ச சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம் தச ||

என்று வரும் பத்தும் அவை.

**ईशावास्यं**

**ஈசாவாஸ்யம்**

என்று முதல் உபநிஷத் ஆரம்பமாகிறது. அதனால் அந்த உபநிஷத்திற்கு ஈசாவாஸ்ய உபநிஷத்து என்று பெயர். அடுத்தது கேனோபநிஷத்து. சில உபநிஷத்துக்கள் கதைகளைச் சொல்லி அவற்றின் மூலமாகத் தத்துவத்தைத் தெரிவிக்கிறது வழக்கம். அந்தமாதிரி, கேனோபநிஷத் கதை ஒன்றைச் சொல்லுகிறது.

ஒரு சமயம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்ததாம். அந்தத் தேவாசுர யுத்தத்திலே தேவர்களுக்கு ஜயம் ஏற்பட்டது. 'நமக்கு ஜயம் ஏற்பட்டது' என்ற சந்தோஷத்திலே அந்த ஜயத்தைக் கொண்டாட, தேவர்கள் ஒரு கொண்டாட்டம் வைத்தார்கள்.

நல்லது எது வந்தாலும் உடனே ஒரு கொண்டாட்டம் கொண்டாடி, 'நம்முடைய சக்தியினாலே இது வந்தது' என்று நினைத்தால் எல்லாருக்கும் அகம்பாவந்தான் வந்துவிடும்.

அப்படி அகம்பாவப்படுவதனால் இன்னும் வீணாகத்தான் போவார்கள்.

அந்தமாதிரி தேவர்கள் ஒரு வெற்றிவிழாவை ஏற்படுத்தி, தங்களுடைய சக்திகளையே பாராட்டிக்கொண்டு, தங்களைத் தாங்களே ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு இருக்கிற காலத்தில், சாக்ஷாத் பிரம்மத்துக்கு, 'என்னடா, இவர்கள் தங்களுடைய சக்தியினாலேதான் ஜயம் ஏற்பட்டது என்று எண்ணி மிகவும் அகம்பாவத்தோடு ஆரவாரம் பண்ணிக்கொண் டிருக்கிறார்களே; இவர்களுடைய அகம்பாவத்தை அடக்கவேண்டும்' என்ற அபிப்பிராயம் ஏற்பட்டது. யார் நன்றாக இருக்கவேண்டுமென்று நினைக்கிறார்களோ அவர்களுக்கு அகம்பாவம் வரக்கூடாது. 'தேவர்கள் நன்றாக இருக்கவேண்டும்; அவர்களுக்கு அகம்பாவம் வந்துவிட்டதே! அதை அடக்கவேண்டும்' என்ற அபிப்பிராயத்தின் பேரிலே அந்தமாதிரிக் கொண்டாட்டம் கொண்டாடின இடத்திற்கு எதிராகக் கொஞ்ச தூரத்தில் ஆகாசத்திற்கும் பூமிக்கும் இன்னதென்று தெரியாமல் ஒரே பிரகாசமாய் இருக்கும் வஸ்துவாகப் பிரம்மம் நின்றது. அப்படி ஒரு வஸ்து தங்களுக்கு எதிரே வந்து நின்றவுடன், 'சமஸ்த லோகத்திற்கும் தேவதைகளாகிய நமக்குத் தெரியாமல் இவ்வளவு பிரபஞ்சத்திலும் ஒன்றும் கிடையாதே. என்னடா இது?' என்று தேவர்கள் எல்லாரும் ஆச்சரியத்தோடு அதைப் பார்த்தார்கள்.

இதுவரைக்கும் அந்த மாதிரியான ஒன்றை அவர்கள் பார்த்ததில்லை. அது இன்னது என்று அவர்களுக்குப் புரியவில்லை. அவர்களுடைய அறிவுக்கு அது கட்டுப்படவில்லை. அப்போது அந்தத் தேவதைகளின் கூட்டத்தில் இருந்தவர்கள், அக்கினி தேவனைக் கூப்பிட்டு, ''நீ போய் அது என்னது என்று பார்த்து வா'' என்று அனுப்பினார்கள்.

அக்கினியும் சரி என்று அங்கே போனான். கிட்டப் போன பிறகும் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரே ஜோதிப் பிரகாசமாய் ஆகாசத்திற்கும் பூமிக்குமாக நின்றது. அப்படி நின்றாலும் அது அவனுக்கு அறிவுள்ள ஒரு பிராணிமாதிரியே தோன்றியது. அந்த ஸ்வரூபத்தைப் பார்த்து, ''நீ யார்?'' என்று அக்கினி கேட்க வேண்டும் என்று நினைத்தான். அதற்குள் அந்த ஸ்வரூபமே அவனைப் பார்த்து, ''நீ யார்?'' என்று கேட்டது. ஆகாசத்திற்கும் பூமிக்குமாக இருந்த அந்த ஸ்வரூபத்தை யக்ஷம் என்று சொல்லியிருக்கிறது.

அக்கினிக்கு ஜாதவேதஸ் என்று ஒரு பெயர். ''நீ யார்?'' என்று யக்ஷஸ் கேட்டவுடன், ''என்னை அக்கினி என்று

சொல்வார்கள். ஜாதவேதஸ் என்றும் ஒரு பெயர் உண்டு'' என்று அவன் பதில் சொன்னான்.

''அப்படியானால் உனக்கு என்ன சக்தி உண்டு?'' என்று அந்த யக்ஷஸ் அவனைக் கேட்டது.

''பிரபஞ்சத்திலே எவ்வளவு பதார்த்தங்கள் இருக்கின்றனவோ அவ்வளவையும் பஸ்மமாகப் பண்ணிவிடக்கூடிய சக்தி எனக்கு உண்டு'' என்று அக்கினி அகம்பாவத்தோடேயே சொன்னான்.

''சரி, இந்தத் துரும்பைக் கொஞ்சம் தஹி, பார்ப்போம்'' என்று அந்த யக்ஷஸ் ஒரு சிறு துரும்பைக் கிள்ளிக் கீழே போட்டது. அக்கினி தனக்கு எவ்வளவு உஷ்ணம் உண்டோ அவ்வளவையும் காட்டி அந்தத் துரும்பைப் பஸ்மம் பண்ணப் பார்த்தான்; முடியவில்லை. முடியாது போனவுடன், ''நீ யார்?'' என்று அந்த யக்ஷத்தைப் பார்த்துக் கேட்க வெட்கப்பட்டுக் கொண்டு, கேட்பதற்கு வாய் இல்லாமலே திரும்பி வந்து விட்டான்.

மற்றத் தேவர்கள் அக்கினி திரும்பி வந்துவிட்டதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். "சரி, உன்னால் அது என்ன என்று பார்த்துவர முடியவில்லையா? ஏ வாயு, நீ போய்ப் பார்த்து வா" என்று திரும்பவும் வாயுவை அனுப்பினார்கள். அக்கினிக்கு எந்த வஸ்துவாக இருந்தாலும் அந்த இடத்திலேயே அதைப் பஸ்மம் பண்ணக்கூடிய சக்தி உண்டு. வாயுவுக்கோ எந்த வஸ்துவாக இருந்தாலும் தூக்கிக்கொண்டு வருகிற சக்தி உண்டு.

வாயு அந்த ஸ்வரூபத்தினிடம் வந்தவுடன் அந்த யக்ஷஸ் வாயுவைப் பார்த்து, ''நீ யார்?" என்று கேட்டது.

கேட்டவுடன், "நான்தான் வாயு என்கிறவன்'' என்று அவன் சொன்னான். வாயுவுக்கு மாதரிசுவா என்றும் ஒரு பெயர். "எனக்கு வாயு என்றும் பெயர். மாதரிசுவா என்றும் பெயர்'' என்று அவன் சொன்னான்.

"உனக்கு என்ன சக்தி உண்டு?" என்று உடனே அது கேட்டது.

"உலகத்தில் எந்த வஸ்துவாக இருந்தாலும் அதை நிமிஷத்திலே தூக்கிக்கொண்டு போகும் சக்தி உண்டு'' என்று அவன் கொஞ்சம் அகம்பாவமாகவே சொன்னான்.

"சரி, அத்தகைய சக்தி உனக்கு உண்டா? இந்தத் துரும்பைத் தூக்கிக்கொண்டு போ, பார்க்கலாம்" என்று அந்த யக்ஷஸ் முன்போலவே ஒரு சிறு துரும்பைக் கிள்ளிப்போட்டது.

வாயு தனக்கு எவ்வளவு சக்தி உண்டோ அவ்வளவு சக்தியினாலும் அந்தத் துரும்பைத் தூக்கிப் பார்த்தான்; முடியவில்லை. அப்போது அந்த ஸ்வரூபத்தைப் பார்த்து, ''நீ யார்?'' என்று கேட்பதற்கே வெட்கப்பட்டுக்கொண்டு அவனும் திரும்பிப் போய்விட்டான்.

தேவர்களுக்கெல்லாம் ராஜாவாக இருப்பவன் இந்திரன். 'இனிமேல் பாக்கி இருக்கும்படியான தேவதைகளை அனுப்பிப் பிரயோஜனம் இல்லை. நமக்கு எல்லாம் ராஜாவாக இருக்கிறவன்தான் போகவேண்டும்' என்று தேவர்கள் தீர்மானம் செய்தார்கள். அவர்களுக்கு மிகவும் மனசுக்குக் கஷ்டமாகப் போய்விட்டது. 'தேவாசுர யுத்தத்திலே நமக்கு வெற்றி கிடைத்துவிட்டது; இனி நம்மை மிஞ்சி இந்தப் பிரபஞ்சத்தில் யார் இருக்கிறார்கள்?' என்ற அகம்பாவத்தோடு ஜய ஆரவாரம் பண்ணிக்கொண் டிருந்தபோது, 'இந்த மாதிரியாக ஒன்றும் தெரியாத வஸ்து நமக்கு முன்னால் வந்து நிற்கிறதே; இது நம்முடைய ஜயத்தை எல்லாம் அபஜயப்படுத்திவிட்டு, நமக்கும் புரியாததாக, நம்மிலும் மேலான வஸ்துவாக இருக்கிறதே!' என்கிற நினைப்பிலேயே இந்திரனுக்கும் மற்றத் தேவதைகளுக்கும் இருந்த உற்சாகம் குறைந்து போய்விட்டது. அகம்பாவம் போய் ஒரு க்ஷணம் ஈசுவர பக்திகூட உண்டாகிவிட்டது.

''சரி, நம்மால் அறிய முடியாத வஸ்து, நமக்குத் தெரியாத வஸ்து, நம்முடைய சக்திகளுக்கு எல்லாம் மேம்பட்ட வஸ்துவாகிய அது இன்னது என்று நான் பார்த்து வருகிறேன்'' என்று இந்திரன் அங்கே போனான். தேவதைகளுக்கு எல்லாம் ராஜாவாகிய அந்த இந்திரன் கொண்டாட்டத்தை விட்டுவிட்டு அங்கே போனவுடன், ஆகாசத்திற்கும் பூமிக்குமாக அங்கே நின்றுகொண் டிருந்த ஸ்வரூபம் மறைந்து போய்விட்டது. மறைந்து போனவுடன் அந்த இடத்தில் அவனுக்கு அநுக்கிரகம் பண்ணவேண்டுமென்ற காருண்யத்தினாலே ஒரு ஸ்திரீ ரூபம் வந்து நின்றது.

அந்த உபநிஷத் வாக்கியத்திலே சொல்கிறபோது, 'அந்த ஆகாசத்திலே ஸ்வர்ணாபரணங்கள் பூண்ட ஹிமவானுடைய புத்திரியான அம்பிகை தோன்றினாள்' என்று வருகிறது. ஸ்திரீ ரூபமாக ஹைமவதியாக வந்தது உமா ஸ்வரூபம்.

ஞானமே உருவெடுத்த உருவம் உமா. உருக்கிவிட்ட தங்கத்தைப் போல மகாப்பிரகாசத்தோடு கூடினவளாக ஸாக்ஷாத் அம்பாள் உமா, ஹைமவதி என்கிற ஸ்வரூபத்தோடு ஆகாசத்திற்கும் பூமிக்குமாக யக்ஷ ஸ்வரூபம் எந்த இடத்தில் நின்றதோ

அந்த இடத்தில் தோன்றினுள். இந்திரன் அவளே நமஸ்காரம் செய்து, ''சற்று முன்னுல் இவ்விடத்தில் நின்ற ஸ்வரூபம் எது?'' என்று கேட்டான்.

''நீ பார்த்தது பிரம்ம ஸ்வரூபம். இவ்வளவு பிரபஞ்சத்திற்கும் காரணமாக, உனக்கும் சகல தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் காரணமாக, எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருப்பதும் - இவ்வளவு ஸ்வரூபமாகவும் இருப்பதுமாகிய பிரம்ம ஸ்வரூபம் அது ஒன்றுதான்'' என்று அம்பாள் அவனுக்கு அநுக்கிரகம் பண்ணினுள்.

'ஒருவனே வெறுமனே அவமானம் மாத்திரம் செய்துகொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லே. அவமானப்படுத்துவது அகம்பாவத்தை அடக்க; அகம்பாவம் அடங்கியவுடன் உடனே அவனுக்கு அநுக்கிரகமும் பண்ணினுல்தான் பிரயோஜனம்' என்கிற பரம கருணே உண்டாயிற்று அம்பிகைக்கு. யக்ஷ ஸ்வரூபம் இன்னதென்றே தெரிந்துகொள்ள முடியாமல் தேவர்கள் எல்லாம் வெட்கப்பட்டு, அவமானம் அடைந்து, அகம்பாவத்தை இழந்தவர்களாகத் தங்களுடைய ராஜாவையே அனுப்பி வைத்த காலத்தில் அவர்களுக்கு அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்ற காருண்யத்தினுலே அம்பாள் உமா ஸ்வரூபமாக, ஹைமவதீ ஸ்வரூபமாக ஆவிர்ப்பவித்தாளாம். இது உபநிஷத்திலே வருகிறது. அவள்தான் இந்திரனுக்கு அறிவு கொடுத்தாள். அதிலிருந்து இந்திரனுக்கு அகம்பாவம் போய், சகல தேவதைகளுக்கும் மேம்பட்டதான, எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமான, எல்லா வஸ்துக்களாகவும் இருக்கும்படியான பிரம்ம ஸ்வரூபத்தை உணர்ந்து இருந்தான் என்று, வேதத்திற்கு எல்லாம் சிரசாக இருக்கும்படியான உபநிஷத்துகளில் இரண்டாவதாகிய கேனுேபநிஷத்திலே சொல்லியிருக்கிறது.

இந்திரன் என்ற பெயர் தேவராஜாவுக்கு வந்த காரணமும் அதுதான் என்று சொல்லியிருக்கிறது. மற்றத் தேவதைகளேக் காட்டிலும் இந்திரனுக்கு மகிமை என்னவென்றுல் மற்றவர்கள் பிரம்ம ஸ்வரூபத்தைப் பார்த்துவிட்டு அது இன்னது என்று தெரியாமல் வந்துவிட்டார்கள். இந்திரன் மாத்திரந்தான் அம்பாளுடைய ஸ்வரூபத்தையும் பார்க்க முடிந்தது. அவளுடைய அநுக்கிரகத்தினுலேதான் ஆகாசத்திற்கும் பூமிக்குமாக நின்ற ஜோதிஸ் ஸ்வரூபந்தான் பிரம்மம் என்பதும் தெரிந்தது. அவனுக்கு ஞானேபதேசம் பண்ணினவள் சாக்ஷாத் அம்பாள். அதனுல்தான் இந்திரன் என்ற பெயர் அவனுக்கு வந்தது என்று சொல்லியிருக்கிறது.

வேதத்தின் அரசாக இருக்கும் அந்தப் பத்து உபநிஷத்துகளுக்கும் ஆதி ஆசார்ய ஸ்வாமிகள் பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். அவருடைய பாஷ்யத்திலே, 'ஞானமே வடிவாக உள்ளவள் பரமமாதா; ஞானமே உமாவின் ஸ்வரூபம்' என்று சொல்கிறார். சர்வக்ஞனாகிய பரமேசுவரனுடைய இடது பக்கத்தில் இருக்கிற ஸ்வரூபம் அது.

नित्यमेव सर्वज्ञेनेश्वरेण सह वर्तते ।

நித்யமேவ ஸர்வக்ஞேநேஶ்வரேண ஸஹ வர்த்ததே ।

நித்தியம் சகஜமாகச் சேர்ந்திருக்கிற ஸ்வரூபம் அது. அக்கினியோடு எப்படி ஒளி சேர்ந்திருக்கிறதோ, ஒரு புஷ்பத்திலே எப்படிச் சுகந்தமானது சேர்ந்திருக்கிறதோ, அமிர்தத்திலே சுவை எப்படிக் கலந்து இருக்கிறதோ அந்த மாதிரி ஈசுவரனுடைய ஸ்வரூபத்தோடு அம்பிகையின் ஸ்வரூபம் கலந்திருக்கிறது. அக்கினியோடு சேர்ந்திருக்கும்படியான பிரகாசத்தை, அக்கினி வேறு, பிரகாசம் வேறு என்று எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே ஈசுவரனையும் அம்பிகையையும் பிரிக்க முடியாது.

அக்கினிக்கு உஷ்ணம் பிரகாசம் என்று இரண்டு உண்டு. உஷ்ணம் அதிகமாக இருந்துவிட்டால் அப்போது அதன் பிரகாசத்தை நாம் அநுபவிப்பது சிரமமாகப் போய்விடும். உஷ்ணம் இல்லாமல் பிரகாசம் மாத்திரம் இருந்தால் நம்மால் சுகமாக அநுபவிக்க முடியும்.

மின்மினிப் பூச்சியை ஒரு சாமானிய திருஷ்டாந்தமாகச் சொல்லலாம். மின்மினிப் பூச்சிக்கு ஒளி அதன் சரீரத்திலேயே இருக்கிறது. ஆனால் அதைத் தொட்டால் சுடாது. அக்கினியில் ஒளி இருக்கிறது; உஷ்ணமும் இருப்பதனால் அதைத் தொட்டால் சுட்டுவிடும். மின்மினிப் பூச்சியில் பிரகாச அம்சம் மாத்திரம் அதிகமாக இருக்கிறது; உஷ்ண அம்சமோ மிகக் குறைவு.

அந்த மாதிரி, உஷ்ணம் இல்லாமல் பரம சீதளமாக இருந்துகொண்டு மகாப் பிரகாசமாக ஒரு வஸ்து இருந்தால் அதுதான் அம்பாள் ஸ்வரூபம்.

மேகத்தில் ஒரு மின்னல் ஏற்பட்டால் எப்படியோ அந்த மாதிரி இருக்கிறாள்.

நீவாரம் என்று ஒரு நெல் இருக்கிறது. அதன் நுனி மிகவும் சூக்ஷ்மமாக இருக்கும்; அதுபோல் அம்பாள் இருக்கிறாள் என்றும் வேதத்தில் வருகிறது. இன்னோர் இடத்தில், மிகவும் சூக்ஷ்மமாக ஒரு தேகத்தின் மத்தியில் உச்சந்தலையிலிருந்து மூலாதாரம் வரைக்கும் சன்னமாக இருக்கும்படி

யான ஒன்றுதான் என்று வருகிறது. வேறோர் இடத்தில் மந்திர சாஸ்திரத்தில் சொல்கிறபோது, தாமரைத் தண்டை எடுத்தால் அதன் மத்தியில் ஓடும் நூல் இழை போல இருக்கிறுள் என்று சொல்லியிருக்கிறது. தாமரைத் தண்டை ஒடிக்கும்போது நடுவில் நூல்இழை எவ்வளவு சன்னமாக இருக்குமோ, அவ்வளவு சன்னமாக அவள் இருந்தாலும் ஆயிரம் சந்திரன் சேர்ந்தால் எவ்வளவு பிரகாசம் உண்டாகுமோ அவ்வளவு பிரகாசம் இருக்கிறது. தாமரைத் தண்டினுடைய நடுவில் இருக்கும் ஒரு நூல்இழையைப்போல இருக்கும் சூக்ஷ்ம ஸ்வரூபம் சாக்ஷாத் அம்பாளுடையது. அந்த ஸ்வரூபத்தில் இருக்கும் பிரகாசம் பரம சீதளமாக உஷ்ணம் இல்லாமல் இருப்பதால் ஆயிரம் சந்திரன் உதயமானுல் எப்படிப் பரம சீதளமாக ஒரே பிரகாசமாக இருக்குமோ அப்படி இருக்கிறுள்.

பிரகாசம் இருந்து, உஷ்ணம் இல்லாததற்குத்தான் மிகச் சாமானிய உதாரணமாக மின்மினிப்பூச்சியைச் சொன்னேன்; சந்திரனையும் சொல்லலாம். உஷ்ணம் இல்லாமல் பிரகாசம் அதிகமாக இருப்பது சந்திரகிரணம். அம்பாள், மிகவும் சூக்ஷ்மமாக இருக்கும் எல்லாவற்றைக் காட்டிலும் பரம சூக்ஷ்மமாய் இருக்கிறுள்; உஷ்ணம் இல்லாமல், தாபத்தை உண்டாக்காமல் இருக்கிறுள்; ஒரே சீதாளமான பிரகாசத்தோடு கூடினவளாக இருக்கிறுள் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

அவளுக்கு நிறையச் சக்தி இருக்கிறது; ஆனுல் கருணை மிதமிஞ்சி இருக்கிறது என்று சொல்கிற மாதிரியாக, ஆயிரம் சூரியனைப்போலப் பிரகாசிக்கிறுள்; ஆனுல் தாபத்தை உண்டாக்காமல், உஷ்ணத்தை உண்டாக்கிச் சிரமப்படுத்தாமல் பரம சீதளமாக இருக்கிற ஸ்வரூபம் என்று சொல்கிறது. அது பரமாத்ம ஸ்வரூபத்தோடு பிரிக்க முடியாமல் சேர்ந்தே இருக்கிறது. அவள்தான் ஜகன்மாதா. சகல தேவதைகளையும் பிரபஞ்சத்தையும் ரக்ஷித்துக்கொண் டிருக்கும் வஸ்து. தேவர்களுடைய அகம்பாவத்தை நிவர்த்திக்கப் பரமாத்ம ஸ்வரூபம் ஒரே ஜோதிஸ்மயமாக ஆகாசத்திற்கும் பூமிக்குமாக நின்றபோது அதனேடு ஐக்கியமாகி நின்றவள், தேவர்களுடைய அகம்பாவம் நீங்கியவுடன், அவள் பரம மாதாவாகையால், கருணையோடு அநுக்கிரகம் செய்யவேண்டுமென்பதாகத் தன் ஸ்வரூபத்தை வெளிப்படுத்திக்கொண்டு இந்திரனுக்கு முன்பாக நின்றுள் என்று கேனேபநிஷத்தில் ஒரு கதை சொல்லியிருக்கிறது.

அம்பாளுடைய தத்துவத்தை, வேதத்தின் சிரசாக இருக்கும் படியான கேனோபநிஷத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஆசார்யாள் ஒரு சுலோகத்தில் நமக்கு அநுக்கிரகம் செய்திருக்கிறார். வேதம் அந்தக் காலத்தில் நமக்கு மிகவும் பிரதானமாக இருந்திருக்கிறது என்பதற்கு அநேக ஆதாரங்கள் உண்டு. நம் நாட்டில் ஒரு பர்வதத்திற்கு வேதகிரி, வேதாசலம் என்று பெயர். திருக்கழுக்குன்றம் என்று அதைத்தான் சொல்கிறோம். வேதாரண்யம் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. வேதபுரி என்று ஒரு க்ஷேத்திரம். செய்யாற்றுக்குப் பக்கத்தில் திருஓத்தூர் என்று ஒரு க்ஷேத்திரம். ஒத்து என்றால் வேதம்; ஓதுவது என்கிற பொருளில் ஏற்பட்டது. இன்னும் தனித்தனியாக இருக்கும் க்ஷேத்திரங்களில் உள்ள ஸ்வாமிக்கு ருக்வேதீசுவரர், சாம வேதீசுவரர் என்கிற நாமங்கள் இருக்கின்றன. க்ஷேத்திர ஸ்வரூபமாகவும், மகாலிங்க ஸ்வரூபமாகவும் வேதமே இருக்கிறது என்பதற்கு இப்படிப் பல சான்றுகள் உண்டு.

கேனோபநிஷத்திலே சொல்லப்பட்டுள்ள கதையிலிருந்து நமக்குத் தெரிகிற தத்துவம் பிரம்ம ஸ்வரூபமாக நின்றதே, அநுக்கிரகம் செய்கிற காலத்தில் சாக்ஷாத் அம்பிகையாக, உமாவாக ஆவிர்ப்பவித்தது எனத் தெரிகிறது.

பரப்பிரம்மத்தைச் சொல்கிறபோது 'ஓம்' என்று ஆரம்பிப்பது வழக்கம். அகாரம், உகாரம், மகாரம் மூன்றும் சேர்ந்து ஓம் என்று வருகின்றன என்று சொல்வார்கள். அநுக்கிரக காலத்தில் அவையே உமா என்று உகாரம், மகாரம், அகாரமாக மாறி வருகின்றன.

उमाम् - ॐ इत्युमेति ।

உமாம் - ஓம் இத்யுமேதி.

என்று ப்ரணவ ஸ்வரூபமாகவே இருக்கிறாள். பதஞ்சலி தம் யோக சூத்திர பாஷ்யத்தில் மூலபரஸ்வரூபத்திற்கு ஓங்காரந்தான் பெயர் என்கிறார். வேதத்தின் முடிவில் இவ்வுண்மை அறிவுறுத்தப்படுகிறது. ஆதி ஆசார்யரவர்களும் அதனால்தான்

श्रुतीनं मूर्द्धानो दधति तव यौ शेकरतया
ममाप्येतौ मातः शिरसि दयया धेहि चरणौ ॥

ஶ்ருதீனாம் மூர்த்தானோ தததி தவ யௌ ஶேகரதயா
மமாப்யேதௌ மாத: ஶிரஸி தயயா தேஹி சரணௌ ||

என்று சொல்கிறார்.

மூர்த்தா என்பது சிரசு; ச்ருதி என்பது வேதம். வேதத்திற்கு எழுதாக் கிளவி என்று பெயர். காதினால் கேட்டுக்

கேட்டு ஓதப்படுவது அது. 'வேதத்தின் சிரசிலே - ச்ருதீநாம் மூர்த்தாநோ' என்று ஆசாரியாள் சொல்ல ஆரம்பிக்கிற போதே, அவர் கேனோபநிஷத்தை மனசில் வைத்துக்கொண்டு சொல்வதாகத் தெரிகிறது. அப்படியான இரண்டு சரணங்களை

समाप्येतौ मातः शिरसि दयया धेहि ।

மமாப்யேதௌ மாத: ஶிரஸி தயயா தேஹி |

'என்னுடைய சிரசிலும் உன்னுடைய தயையினால் வைப்பாயாக' என்று சொல்கிறார்.

स्नपय कृपया मामपि शिवे

ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே

என்று அந்த இடத்தில் மாமபி - என்னையும் என்று சொன்னதுபோல, இங்கும் 'மாமபி' என்று சொல்கிறார். தேவர்களுடைய அகம்பாவத்தைப் போக்கி அநுக்கிரகம் செய்தது போல, என்னிடம் உள்ள சகல துரிதங்களையும் நிவிருத்தி செய்து - அஞ்ஞானம், மோகம், காமம் போன்ற சித்த அசுத்தம் எல்லாவற்றையும் போக்கி - அநுக்கிரகிக்கும்படியான உன் சரணகமலங்கள் இரண்டையும் என்னுடைய சிரசில் வைப்பாயாக என்கிறார்.

ययोः पाद्यं पाथः पशुपतिजटाजूटतटिनी
ययोर्लाक्षालक्ष्मीररुणहरिचूडामणिरुचिः ।

யயோ: பாத்யம் பாத: பஶுபதிஜடாஜூடதடிநீ
யயோர்லாக்ஷாலக்ஷ்மீரருணஹரிசூடாமணிருசி: |

என்று ஆசார்யரவர்கள் அநுக்கிரகம் பண்ணியிருக்கிறார்.

சுக்கிரவாரத்தில் நல்ல உத்தமமான காலம் இது. இப்போது தேவர்களுடைய அகம்பாவத்தைப் போக்கி அநுக்கிரகம் பண்ணினவளும் ஞானஸ்வரூபியுமான சாக்ஷாத் அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத்தான் நாமும் தியானம் பண்ணி நம்முடைய ஜன்மத்தை ஸபலமாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்துச் சொன்னேன்.

14

# வேதமும் தர்மமும்

வேதத்தில் அநேக விஷயங்கள் இருக்கின்றன. அக்கினி ஹோத்திரம், சோம யாகங்கள், அநேக இஷ்டிகள், பல விதமான கர்மாக்கள், ஹோமங்கள் முதலியவைகளைச் செய்யும் மந்திரங்கள் போன்ற பல விஷயங்கள் இருக்கின்றன.

பெரிய யாகத்திற்கு ஸத்ரம் என்று பெயர். யாகம் என்றால் பொதுவாக ஒருவர் பண்ணுவார். அந்த யாகத்தை அநேகம் வேதவித்துகளாகிய பிராமணர்கள் வந்து நடத்தி வைப்பார்கள். ருக்வேதம் தெரிந்தவர்கள், யஜுர்வேதம் தெரிந்தவர்கள், சாமவேதம் தெரிந்தவர்கள் இவர்களை வைத்துக் கொண்டு, சாமவேதிகள் கானம் பண்ண, ருக் வேதம் தெரிந்தவர்கள் ஹோமம் பண்ண, யஜுர்வேதம் தெரிந்தவர்கள் மந்திரங்கள் ஜபிக்க, அந்த யாகத்திற்குக் கர்த்தாவாக இருக்கிறவர் அதை நடத்திக்கொள்கிறார். அவர் தம்முடைய பணத்தை வைத்துக்கொண்டோ வெளியில் பணம் வசூல் பண்ணியோ செய்கிறார். அதனால் அந்த யாகத்தினால் ஏற்படுகிற புண்ணியம், அதனால் ஏற்படுகிற பலன் எல்லாம் அவர் ஒருவருக்குத்தான். பாக்கி வந்திருக்கக்கூடிய பிராமணர்களுக்கு ரித்விக்குகள் என்று பெயர். அந்த யாகத்திற்கு எஜமானராக இருக்கக்கூடியவர், அவர்களுக்குத் தட்சிணை கொடுத்துவிடுகிறார்.

சோமயாகங்களில் கலந்துகொள்கிற ரித்விக்குகளுக்குச் சாஸ்திரங்களில் நிர்ணயித்திருக்கிறபடி பசுக்களையும் பொன்னையும் நிர்ணயிக்கப்பட்டுள்ள வேறு பொருள்களையும் அவற்றின் எஜமானர்கள் சம்மானங்களாகக் கொடுத்துவிடுகிறார்கள். அநேக சோமயாகங்கள் வேதத்திலே சொல்லப்பட் டிருக்கின்றன. இன்னொரு விதமான யாகத்திற்குப் பெயர் ஸத்ரம். ஸத்ரம் என்றால் அநேகம் பேருக்குப் புரியாது; சாப்பாடு

போடுகிற இடந்தான் ஸத்ரம் என்று நம்மில் பலர் நினைத்துக் கொண்டிருப்பார்கள். அதுவும் அடுத்த தலைமுறையில் தெரியாது போய்விடும். காரணம், அநேக ஸத்ரங்கள் இப்போது மூடப்பட்டு வருகின்றன. வேதத்தில் சோமயாகங்களில் அநேக வகை இருக்கிறமாதிரியே ஸத்ரம் என்ற யாகத்திலும் அநேக வகைகள் இருக்கின்றன. இது கூட்டாகச் செய்யப் படுவது; நீண்ட காலம் நடப்பது. அந்த ஸத்ரத்தில் யார் யார் ரித்விக்குகளாக இருந்து, வேதகானம் பண்ணி, ஹோம ஆஹுதிகளை எல்லாம் செய்கிறார்களோ அவர்கள் அத்தனை பேருக்கும் அந்த யாகத்தின் பலன் போய்ச் சேருகிறது. அந்த யாகத்தைப் பண்ணுகிற எல்லா ரித்விக்குகளுக்கும் புண்ணியம் உண்டு; சிரேயஸ் உண்டு; சித்த சுத்தி கிடைக்கும்; உத்தமமான லோகம் கிடைக்கும் என்று சொல்வார்கள்.

**सत्रे सर्वे यजमानाः**

**ஸத்ரே ஸர்வே யஜமானா:**

ஸத்ர யாகத்திலே சம்பந்தப்படுகிறவர்கள் எல்லாரும் அதற்கு எஜமானர்கள். எல்லோருக்கும் பலன் உண்டு. அதனால் தான் எல்லாரும் உரிமையோடு எஜமானர்களாகச் சேர்ந்து சாப் பிடுகிற ஓர் இடத்திற்கு ஸத்ரம் என்று பெயர் வந்தது. ஸத்ரத்தில் வந்து சாப்பிடுகிறவர்கள் அத்தனை பேரும் எஜமானர்கள்.

யாகம், யக்ஞம் இவற்றையெல்லாம் தவிர அநேக உபாசனா மார்க்கங்கள் வேதத்தில் சொல்லப்படுகின்றன. தனித்தனி யாகத் தியானம் சொல்லி இருக்கும். 'இந்தச் சரீரத்திற்குள் ஆத்மா எப்படிப் போகிறது, கடைசியில் சரீரம் என்னவாகப் போகிறது, திரும்பியும் மனுஷ்ய சரீரத்தில் எப்படியெல்லாம் பிரவேசிக்கிறது' என்பன போன்ற விஷயங்களும் அதில் காணப் படுகின்றன.

இன்னும், சரீர ஆரோக்கியத்திற்கு வேண்டிய வைத்திய சிகிச்சைகள், சத்துருக்களினால் ஹிம்சை வந்தால் அதை நிவிருத்தி பண்ணுவதற்கான சாந்திகள், இப்படி வேறே பல சமாசாரங் களும் வேதத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன. இவற்றையெல் லாம் பார்க்கும்போது நமக்கு ஒரு சந்தேகம் வருகிறது.

வேதத்தின் உத்தேசம் என்ன? எதற்காக வேதம் ஏற் பட்டது? சில உபநிஷத்துகளில் சொல்லியிருப்பதுபோல, 'எல்லா வேதங்களும் சேர்ந்து ஒரு பொருளைத்தான் சொல் கின்றன' என்பதாகத் தெரிகிறது. அந்த ஒரு பொருள் என்ன? 'ஓங்கார அர்த்தமாக இருக்கும்படியான ஒரு பரம்பொருளைத்

தான் எல்லா வேதங்களும் சேர்ந்து சொல்கின்றன' என்பது உபநிஷத்து வாக்கியம்.

'வேதம் வெவ்வேறு விஷயங்களைச் சொல்கிறதே. வெவ் வேறு தேவதைகளைப்பற்றியும் சொல்கிறதே!' என்று நமக்குச் சந்தேகம் வருகிறது.

இந்த ஊரில் ஜட்ஜ் சதாசிவ ஐயர் என்று ஒருவர் இருந் தார். மைசூர் ராஜ்யத்தில் இருந்த பரமசிவ ஐயர் அவர் சகோ தரர். 'வேதங்கள் என்றால் பௌதிக சாஸ்திரந்தான். வேதம், ஜியாலஜியைப்பற்றிச் (பூகர்ப்ப சாஸ்திரம்) சொல்கிறது' என்று அவர் எழுதியிருக்கிறார்.

இன்னும் பல பேர் பல பிரகாரமாகச் சொல்கிறார்கள். 'அந்தக் காலத்தில் இந்தியாவில் உள்ளவர்களுக்குச் சூரியனையும் சந்திரனையும் பார்த்து ஆச்சரியமாக இருந்தது. அதிகமாக விஞ்ஞானம் விருத்தி அடையாத காலம் அது. அதனால் அவரவர்களுக்குத் தகுந்தாற்போல் அவரவர்கள், இயற்கைத் தோற்றங்களைப் பார்த்துப் பல விஷயங்களைச் சொன்னார்கள். அதைப் பாட்டாகப் பாடும்படியான சக்தி எல்லாருக்கும் இல்லை; சில பேருக்குத்தான் இருந்தது. இவர்கள் பாடிய பாட்டுக்களையே மந்திரங்கள் என்று தொகுத்து, வேதமாக வைத்துக்கொண் டிருக்கிறார்கள்' என்று வெள்ளைக்காரர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இவற்றையெல்லாம் பார்த்தால், 'எல்லா வேதமும் ஒரு பொருளைத்தான் (பரே பும்ஸி) சொல்கிறது' என்று உபநிஷத்துக் கள் சொன்னாலும், வெவ்வேறு பதார்த்தத்தைத்தான் அது சொல்வதாகத் தெரிகிறதே தவிர ஒரு பொருளைச் சொல்வதாக நமக்குத் தோன்றவில்லை.

ராமாயணத்தைப்பற்றி ஒரு சுலோகம் இருக்கிறது:

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षाद् रामायणात्मना ॥

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே |
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா ||

வேதவேத்யே - வேதத்தினால் அறியப்படவேண்டிய ஒரு வன். அவன் யார்? பரே பும்ஸி - பரம புருஷன்; சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணன்தான். வேதத்தினாலே அறியப்படவேண்டிய பரம புருஷனான ஸாக்ஷாத் நாராயணன் ராமனாக உலகத்தில் அவ தாரம் செய்தார். அவர் தசரதனுடைய புத்திரனாக வந்த வுடன், வேதம், 'ராமாயணமாக அவதாரம் பண்ணுவோம்' என வால்மீகியின் குழந்தையாக வந்தது.

'நமக்குப் பொருளாக இருக்கிறது, தசரதனுக்குப் பிள்ளையாகப் போய்விட்டது. நாமும் வால்மீகியின் குழந்தையாக அவதாரம் பண்ணிவிடுவோம்' என்று வேதம் ராமாயணமாக அவதாரம் செய்தது என்பது இந்தச் சுலோகம்.

ப்ராசேதஸ் என்று வருணனுக்குப் பெயர். வருணன் பிள்ளை வால்மீகி. அந்த வால்மீகியினிடத்தில் ராமாயணமாக வேதம் ஆவிர்ப்பவித்தது.

'வேதத்தில் அநேக சமாசாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இருந்தாலும் வேதங்கள் எல்லாம் சேர்ந்து சொல்வது ஒரு பொருளைத்தான்' என்று முதலிலே நான் சொன்னேன்.

இந்தச் சுலோகமும் அதைத்தான் சொல்கிறது. அப்படியானல், 'ஒரு பொருளைச் சொல்வதற்கு அநேகம் பொருளை வேதம் எதற்காகச் சொல்கிறது?' என்று நமக்குத் தோன்றும். அநேகம் பொருள்கள் மூலமாகத்தான் அந்த ஒரு பொருளை அறிய முடியும்; யோகம், தியானம், தபஸ், யக்ஞம், கர்மாநுஷ்டானம் இவை எல்லாம் முடிந்த முடிவில் சுட்டிக்காட்டுகிற ஒரு பொருள் எதுவோ அந்த ஒரு பொருள்தான் வேதத்தின் உண்மையான தத்துவமாக இருக்கிறது. அந்த உண்மையான பொருள் ஒன்றைத் தவிரப் பாக்கி எல்லாம் மாறிமாறிப் போகும்படியான பொருள்கள்; கதையாகப் போகிற பொருள்கள்; பின்னும் அந்தக் கதையும் மறைந்துபோகிறது.

வேதத்தினல் சுட்டிக்காட்டப்படுகிற மெய்யான ஒரு பொருளை அறிந்துகொள்ள வேண்டுமானல் அந்த ஒன்றைப் பற்றிய நினைவு நமக்கு வருவதற்குச் சித்தத்திற்குச் சில பழக்கங்கள் (Discipline) வரவேண்டும். யாகங்கள் பண்ணுவது, தபஸ் பண்ணுவது, தர்மங்களையெல்லாம் செய்வது, கோபுரம் கட்டுவது, குளம் வெட்டுவது ஆகிய எல்லாம் சித்தத்தைச் சுத்தி செய்து, சித்தவிருத்தி நிரோதம் செய்வதற்காகத்தான். பல்வேறு கர்மாக்களின் நோக்கம் பரமாத்மாவை அடைவதற்குத் துணை புரிவதுதான்.

பிரபஞ்சத்திலே எந்தச் சின்னத் துக்கம் வந்தாலும் நாம் அழுகிறோம்; கஷ்டப்படுகிறோம். எப்படிப்பட்ட துக்கம் வந்தாலும், அவமானம் வந்தாலும் அவற்றல் சலிப்படையாமல், தளர்ச்சி அடையாமல் இருக்கிற சித்தம் வருவதற்குப் பல பயிற்சிகள் வேண்டி யிருக்கின்றன. உடம்பை வளர்ப்பதற்குத் தண்டால் போடுகிறோம்; பஸ்கி போடுகிறோம்; இவற்றையெல்லாம் மிகவும் நியமமான காரியமாகச் செய்தால்தான் உடம்பு வளருகிறது. அப்படி ஆத்மாவை வளர்ப்பதற்கும் சில

கட்டுப்பாடுகள், சில பயிற்சிகள் அவசியமாகின்றன. அவற்றை யெல்லாம் வேதம் சொல்கிறது. வேதம் சொல்கிறபடி யெல்லாம் கர்மாநுஷ்டானங்களைச் செய்வதன் பிரயோஜனம் என்ன? எந்தத் துக்கமும். நம் கிட்டே வராது; அதுதான் 'யோகம்' என்று கீதையில் சொல்லியிருக்கிறது.

तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥

தம் வித்யாத் து:க்கஸம்யோகவியோகம் யோகஸம்ஞிதம் |
ஸ நிஸ்சயேந யோக்தவ்யோ யோகோநிர்விண்ணசேஸா ||

ஸம்யோகம் என்பதற்குச் சேர்க்கை என்று அர்த்தம். வியோகம் என்றால் விட்டுப்போகிறது என்று அர்த்தம். 'வியோகம் ஆகிவிட்டார்' என்றால் சரீரத்தை விட்டுப் போய்விட்டார் என்று அர்த்தம் இருக்கிறது அல்லவா?

பகவான் கீதையில்,

तं विद्याद् दुःखसंयोगवियोगम्

தம் வித்யாத் து:க்கஸம்யோகவியோகம்

என்று சொல்லிவிட்டார். 'துக்கத்தின் கூட்டுறவு நீங்குதலைத் தான் யோகம், யோகம் என்று குறிப்பிட்டதாக அறிவாய்' என்று உபதேசம் செய்கிறார். அநேக துக்கம் நம்மிடம் வந்து சேருகின்றன. அப்படிச் சேருகிறவற்றை யோகம், வியோகம் செய்துவிடுகிறது. எந்தத் துக்கம் வந்தாலும் பிரித்துவிடு கிறது. துக்கம் வராமலேயே பண்ணிவிடுவது என்பது முடியாது. நிறையத் துக்கம் வந்துகொண்டுதான் இருக்கும். யோகம் இருந்தால், எந்தத் துக்கம் வந்தாலும் அந்தத் துக்கத்தை நம் மிடத்தில் ஒட்டாமல் வியோகம் பண்ணிவிடும். கழற்கோடி யில் விபூதி ஒட்டினாலும் போய்விடுவதுபோல, தாமரையிலையில் தண்ணீர் விழுந்தாலும் முத்து முத்தாக உதிர்ந்துவிடுவதைப் போல நமக்கு வருகிற துக்கம் நம்மிடத்தில் ஒட்டாமல் போய் விடும். நம்மிடம் வருவதற்குள்ளேயே பிரித்து வைத்துவிடும். 'அதற்குத்தான் யோகம் என்று பெயர்' என்று பகவான் சொல்லியிருக்கிறார்.

அதற்கு அடையாளங்கள் என்ன?

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।

யம் லப்த்வா சாபரம் லாபம் மங்யதே நாதிகம் தத:|

எது ஒன்றை அடைந்துவிட்டால் வேறு லாபத்தை, அதைக் காட்டிலும் பெரிதாக மதிக்கமாட்டானோ அது ஒன்றுதான் அடையத்தக்க பொருள். அந்த ஒரு பொருளை அடைவ

தற்குச் சித்தசுத்தி வேண்டும்; ஏகாக்கிர சித்தம் வேண்டும். சித்தத்தின் சுபாவம் சதா அலேவதுதான்; ஒரு நிமிஷங்கூட நிற்காமல் எங்கெங்கோ அது சுற்றிக்கொண் டிருக்கும். இப்படி அலேவதனுலே அநேகம் அழுக்கு, மலம் அதற்கு வந்துவிடும். 'வேண்டாம் வேண்டாம்' என்ருலும் ஒட்டிக்கொண்டுவிடும். 'ஆசைப்பட வேண்டாம், கோபப்பட வேண்டாம்' என்று நினேத்தாலும் சித்தம் அலேவதனுலே சித்த மலமும் வந்துவிடுகிறது.

ஆசை, கோபம், மோகம் இவை எல்லாம் சித்த மலங்கள். 'சித்தமல மறுவித்துச் சிவமாக்கி' என்பது திருவாசகம். சித்த அழுக்கை அறுத்துவிட்டால் சிவம் ஆகிவிடலாம்; அதுவரைக்கும் ஜீவன்; சித்த மலம் நீங்கிவிட்டால் அவன் சிவன் ஆகிருன்.

**'அத்தனெனக் கருளியவா ருர்பெறுவார் அச்சோவே'**

என்று மாணிக்கவாசகர் சொல்கிருர்.

இந்த மாதிரி சித்தத்தினுடைய மலம் நிவிருத்தியாக வேண்டும்; சித்தம் அசையாமல் இருக்க வேண்டும் என்ருல் ஒழுங்கோடு பல காரியங்களேச் செய்ய வேண்டும். பெரிய கோபுரம் கட்டுவது; பல யக்ஞங்களேப் பண்ணுவது எல்லாம் இதற்காகத்தான்; ஒரு வருஷம் யக்ஞம், இரண்டு வருஷம் யக்ஞம் என்று பெரிய யாகங்களே யெல்லாம் நியமத்தோடு செய்வார்கள். கழுத்திலே கம்பி வளேயம் மாதிரி போட்டுக்கொண்டு விடுவார்கள். அவர்களே அறியாமல்கூடப் படுத்துக்கொள்வது என்ருலும் முடியாது. அதற்கு அரிகண்டம் என்று பெயர்.

இப்போது சின்னக் கம்பியைக் காலில் திருப்பதிப் பிரார்த்தனே என்று போட்டுக்கொள்கிருர்கள்.

கோயில் கட்டுவது, குளம் வெட்டுவது என்று ஈசுவரன் சம்பந்தமான காரியங்களேச் செய்து வந்தார்கள். இவற்றிலும் நடுவில் அநேக கஷ்டம், அநேக அவமானம் எல்லாம் வரும். எதையும் பொருட்படுத்தாமல் மன அழுக்கையும் மனச் சஞ்சலத்தையும் போக்கிக்கொண்டு ஏகாக்கிர சித்தத்துடன் அவற்றைப் பூர்த்தி செய்வார்கள். சித்தத்திற்கு ஏற்படுகிற ஒழுங்கினுல் சித்தவிருத்தி நிரோதம் பண்ணி, முடிந்த முடிபில் அறியப்பட வேண்டிய பொருளே அறிகிருர்கள். குளம் வெட்டுவது, கோபுரம் கட்டுவது முதலிய காரியங்களுக்குப் **'பூர்த்தம்'** என்று பெயர். யாகங்கள் முதலியன செய்வதற்கு **'இஷ்டம்'** என்று பெயர். **'இஷ்டாபூர்த்தம்'** என்று இரண்டையும் சொல்கிருேம்.

வேத குலத்தில் பிறந்து நன்றாக வேதத்தை அத்தியயனம் பண்ணினவர்கள் பல இஷ்டிகள் பண்ணிச் சித்தசுத்தியை அடையவேண்டும். எல்லோரும் 'பூர்த்தம்' செய்து சித்த சுத்தியை அடையலாம்.

பல யக்ஞங்கள் பண்ணுவது, விரதங்கள் இருப்பது, கோபுரம் கட்டுவது என இப்படி இஷ்டாபூர்த்தங்களினால் சரீரத்தை க்ருசம் பண்ணுகிறது; இவைகள் எல்லாம் முடிவுகள் அல்ல; சித்த மலத்தை நீக்குவதற்கு வழிகள்தாம்; சித்த விருத்தியை - சஞ்சலத்தை - நீக்குபவை; சித்த மலம் நீங்கி, ஏகாக்கிர சித்தத்தோடு அறியப்படவேண்டிய மெய்யான ஒரு பொருளை, சத்தான பரம்பொருளை அறிவது என்பதற்கான சாதனங்கள்தாம். முடிந்த முடிவாகிய பரம் பொருளை அறிந்துவிட்டால் இன்னும் ஒன்று வேண்டுமென்று தோன்றாது. இன்னும் ஒன்று வேண்டுமென்று தோன்றிற்றோ - கொஞ்சம் கொஞ்சம் தோன்றினாலுங்கூட - சுவாமியை அவன் பார்க்கவில்லை யென்று பொருள்.

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः।

யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத: |

என்கிற பகவானுடைய வாக்கிலிருந்து, ஓர் அடையாளம் 'நாம் அடையவேண்டிய பொருளை அடைந்துவிட்டோமா?' என்பதைப் பார்த்துக்கொள்ளக் கிடைக்கிறது. அடையவேண்டியதை அடைந்துவிட்டால் இன்னொன்று வேண்டுமென்றே தோன்றாதாம். தோன்றிற்றோ, நாம் அதை இன்னும் அடையவில்லை எனக் கண்டுகொள்ளலாம். இன்னும் ஓர் அடையாளம்:

यस्मिन् स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ।

யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந குருணாபி விசால்யதே |

சித்தமானது எதில் நிலைத்தபின் மிகப் பெரிய துக்கம் வந்தாலும் கொஞ்சங்கூட அசையாமல், கொஞ்சங்கூட ஆடாமல், சலிக்காமல் இருக்கிறதோ அப்போதும் நாம் அடைய வேண்டிய ஒன்றை அடைந்திருக்கிறோம் என்று தெரிந்துகொள்ளலாம். சித்தம் சலித்தால் அதை இன்னும் அடையவில்லை என்பது அர்த்தம்.

நமக்கு அநேக துக்கம் வரும். ஊருக்கெல்லாம் அது துக்கம் என்று தோன்றும்; நமக்குத் துக்கமாகத் தோன்றாது. தாமரை இலையையும் கழற்கோடியையும் போலத் துக்கம் கொஞ்சங்கூட அண்டாமல், சதா ஆனந்தமாக, வேறு ஒன்று வேண்டும் என்று கொஞ்சங்கூடத் தோன்றாமல் உட்கார்ந்துகொண்டிருந்தால் அதற்குத்தான் யோகம் என்று பெயர்.

तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।

தம் வித்யாத் து:கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் |

'துக்கம் ஒட்டாமல் பிரிக்கப்படுவதை, துக்கத்தின் கூட்டுறவு நீங்குதலே யோகம் என்று குறிப்பிட்டதாக அறிவாய்' என்று பகவான் உபதேசம் செய்கிறார்.

'கேட்டை மூட்டை செவ்வாய்க்கிழமை' என்று சொல்வார்கள். அந்தச் செவ்வாய்க்கிழமைக்கு மங்கள வாரம் என்று பெயர் வைத்திருக்கிற மாதிரி, வியோகத்திற்கு யோகம் என்று பெயர் வைத்தார்.

ஒழுங்கினாலும் கட்டுப்பாட்டினாலுந்தான் மனத்திலுள்ள எல்லா அசுத்தங்களையும் போக்கி மனச் சஞ்சலத்தை அகற்றி ஏகாக்கிர சித்தத் தியான சக்தியை வளர்க்க முடியும். இந்தச் சரீரக் கூட்டிலிருந்து ஆத்மா பிரிந்து செல்வதற்கு முன்பு, சரியான படிப்பின் மூலமும் கட்டுப்பாடுகளின் மூலமும் ஒவ்வொருவரும் யோகநிலையை அடைய வேண்டும் என்பதைக் காளிதாசன் தமது ரகுவம்சத்தில் ஒரு சுலோகத்தில் கூறியிருக்கிறார்.

வேதத்தினுடைய பொருள் ராகவன்தான். அந்த ஒரு பொருளை அறிவதற்காகத்தான் இத்தனை சாஸ்திரங்கள், யக்ஞங்கள், தபஸ், தியானம் எல்லாம். அந்த ஒரு பொருளைப் பற்றியே ஏகாக்கிர சிந்தையுடன் விசாரிக்க வேண்டும் என்றால் சித்தமலம் நீங்க வேண்டும். சித்த விருத்தி நிரோதம் ஆகவேண்டும். இது எப்படி ஆகும்? படிப்படியாக வரவேண்டும்.

ஒரு பொருளை அறிய வேண்டும். அதை அறிந்துவிட்டால் இன்னொன்றை அறியவேண்டும் என்ற ஆசை தோன்றாது. எந்தத் துக்கம் வந்தாலும் யாரிடத்திலும் கோபம் உண்டாகாது. கருணை உண்டாகும். நமக்கு எது வந்தாலும் வரட்டும்; இன்னொரு பிராணிக்கு நம்மால் துக்கம் உண்டாகக் கூடாது என்ற கருணை பிறந்துவிடும். ஈசுவரன் லோகசம்ஹாரம் பண்ணுகிற காரியங்கூடப் பரம காருண்யம் என்று சொல்ல வேண்டும். இந்தப் பரம கருணை - துக்கம் எவ்வளவு வந்தாலும் நம்மிடத்திலே அது ஒட்டாமல் வியோகம் ஆகிவிடுகிற நிலை - கொஞ்சம் கொஞ்சமாக வரவேண்டும். இதற்காகத்தான் குழந்தையாக இருக்கிறபோதே வேதாத்தியயனம் பண்ணுவது; எல்லா வித்தைகளையும் எல்லாச் சாஸ்திரங்களையும் தெரிந்துகொள்வது.

शैशवेऽभ्यस्तविद्यानां

ஶைஶவே அப்யஸ்தவித்யானாம்

குழந்தைகளாக இருக்கும்போது நல்ல ஆசாரியனிடத்தில் நல்ல கல்வியைக் கற்றுச் சன்மார்க்கத்தில் பிரவேசிக்கும் படியான ஞானத்தை அடைவது முக்கியக் கடமை.

**यौवने विषयैषिणाम् ।**

**யௌவனே விஷயைஷிணாம் |**

யௌவன நிலை வந்தவுடன் வம்சம் நம்மோடு கத்தரித்து விடாமல் இருக்க, தர்ம நெறிப்படி ஒரு ஸ்திரீயை மணந்து நல்ல வம்சத்தை விருத்தி பண்ணவேண்டும். அநேக ஜீவன்களுக்குச் சகாயம் பண்ணக் - அவை தங்களுடைய பாவத்தைக் கழுவிக் கொண்டு ஜன்மாவை நிவிருத்தி பண்ணிக்கொள்வதற்குச் சரீரத்தைக் கொடுக்கக் - கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்.

கொஞ்சம் வயசானவுடன் சித்தத்தின் மலத்தைப் போக்கிக்கொள்ளவும், அதற்கு எந்தத் துக்கம் வந்தாலும் அசையாது இருக்கும்படியான ஒரு தன்மையை உண்டாக்குவதற்காகவும் யாகங்கள், ஹோமங்கள், யக்ஞங்கள் எல்லாம் பண்ணுவார்கள்; இஷ்டா பூர்த்தங்களைச் செய்வார்கள். ஆசை வராமல், கோபம் வராமல், காமம் வராமல் சித்தத்தைப் பரிசுத்தப் படுத்திக் கொள்வார்கள்.

**वार्द्धके मुनिवृत्तीनां**

**வார்த்தகே முநிவ்ருத்தீநாம்**

வார்த்தக்ய காலத்தில் முனிகள், தபஸ்விகள் இவர்களை அடுத்து உபதேசங்களைப் பெற்றுத் தபஸ் பண்ணவேண்டும். வேதங்களிலே அறியப்பட வேண்டிய ஒரு பொருளை அறிந்து கொள்வதற்கான சாதனங்களை யெல்லாம் மேற்கொள்ள வேண்டும்.

**योगेनान्ते तनुत्यजाम् ॥**

**யோகேநாந்தே தநுத்யஜாம் ||**

முடிவில் சரீரத்தை விடுகிறபோது யோகத்தோடு விட வேண்டும். கீதையில் பகவான், 'யோகம் என்றால் வியோகந்தான் - துக்கம் கொஞ்சங்கூடச் சேராமல் சதா ஆனந்தமாக இருப்பதுதான்' என்று சொல்லியிருக்கிறார். உடம்பைவிட்டுப் பிரிகிறபோது அழுதுகொண்டு போனால் அழுகிற உடம்புதான் திரும்பவும் வரும். கொஞ்சங்கூடத் துக்கம் இல்லாமல் ஆனந்தமாக இருக்கிறபோதுதான் உடம்பை விட்டுப் பிரியவேண்டும். எத்தனையோ விதமான துக்கம் வந்த காலத்திலும் மனம் சலனம் அடையாமல் ஆனந்தமாகத் தர்மத்தையே அநுசரித்துக் கொண்டு ஒருவன் இருந்தான் என்றால் அவன்தான் ராமன்.

ராமன் என்ற சப்தத்திற்கே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம். ராமம், - ஆனந்தமாக இருப்பது.

அதனுல்தான்,

वेदवेद्ये परे पुंसि

வேதவேத்யே பரே பும்ஸி

வேதத்தினுலே அறியப்படுகிற பரமபுருஷன்,

जाते दशरथात्मजे ।

ஜாதே தசரதாத்மஜே |

தசரதனுடைய புத்திரனுக, தாசரதியாக ஆவிர்ப்பாவம் அடைந்தான். வேதத்திற்குச் சரீரியாக இருப்பவன் தசரதனுடைய பிள்ளையாகிய ராமனுக அவதாரம் செய்துவிட்டதனுல், வேதங்கள் என்ன செய்தன?

वेदः प्राचेतसादासीत् साक्षाद् रामायणात्मना ॥

வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணுத்மநா ||

வேதங்கள் வால்மீகியின் குழந்தையாக, சாக்ஷாத் ராமாயணமாக அவதாரம் செய்துவிட்டன என்று சொல்லியிருக்கிறது.

அப்படிப்பட்ட ராமாயணத்தில் என்ன சொல்லியிருக்கிறது? 'வேதம் தர்மத்தைச் சொல்கிறது. அந்தத் தர்ம ஸ்வரூபிதான் ராமன்' என்று சொல்கிறது. ராமன் தர்ம ஸ்வரூபி என்று எப்படித் தெரிகிறது? ராமனுடைய தாய் கௌசல்யா தேவி, ராமன் காட்டுக்குக் கிளம்பியபோது சொன்ன வாக்கியத்திலிருந்தே அது நன்ருகத் தெரிகிறது.

குழந்தை தாயை விட்டுப் பிரிகிறபோது தாய் குழந்தைக்குக் கொஞ்சம் பட்சணம் பண்ணிக் கட்டிக்கொடுப்பாள். பட்டணம் வருகிற குழந்தைகளுக்குக் கிராமத்தில் இருக்கும் தாய்மார்கள் பட்சணம் பண்ணிக் கொடுத்தனுப்புகிருர்கள். ராமன் காட்டுக்குப் போகிருன்; கௌசல்யா தேவி பட்சணம் பண்ணிக் கொடுத்தால் அது அவனுக்கு எத்தனே நாட்களுக்கு வரும்? பதினுன்கு வருஷம் காட்டில் அவன் இருக்கப் போகிருனே! இல்லே என்ருல் பணம் கொடுத்து அனுப்பலாம். அமெரிக்கா போன்ற இடங்களுக்கு நம் குழந்தைகளே அனுப்பும்போது பணம் கொடுத்து அனுப்புகிருேம். காட்டிலே கடைகண்ணி ஒன்றும் இருக்காது. பணம் கொடுத்து அனுப்பினுலும் ராமன் அந்தப் பணத்தைக் காட்டில் வைத்துக்கொண்டு என்ன செய்வான்? அரிசி மூட்டை அனுப்பலாம் என்ருல் எத்தனே வருஷத்திற்கு அனுப்புவது? அவன் ஒரே இடத்திலா நிலேயாகக் காட்

டில் இருக்கப்போகிறுன்? கடைசியில் எதைக் கொடுத்து அனுப்பினுள் கௌசல்யை? 'நான் உனக்குக் கொடுத்து அனுப்பும் சாமான் இதுதான்' என்று ஆசீர்வாதம் பண்ணி அனுப்பினுள்.

यं पालयसि धर्मं त्वं धृत्या च नियमेन च ।
स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षतु ॥

யம் பாலயஸி தர்மம் த்வம் த்ருத்யா ச நியமேந ச |
ஸ வை ராகவஶார்த்தூல தர்மஸ்த்வாம் அபிரக்ஷது ||

'ராகவா, நீ எந்தத் தர்மத்தை த்ருதியோடு - தைரியத்தோடு, நியமத்தோடு செய்துவருகிருயோ அந்தத் தர்மம் உன்னை ரக்ஷிக்கட்டும்' என்று ஆசீர்வாதம் செய்கிருள்.

த்ருதி என்ருல் தைரியம். 'அவன் பரிகாசம் பண்ணுகிருனே; இவன் பரிகாசம் பண்ணுகிருனே' என்று கொஞ்சங்கூட மனம் தளர்ந்துபோகாமல், 'யார் பரிகாசம் பண்ணினுலும் பண்ணட்டும்' என்ற தைரியத்தோடு இருப்பதை, 'த்ருதி' என்று சொல்வார்கள். சில பேர்இப்படிப்பட்ட தைரியத்தோடு, 'யார் என்ன சொன்னுலும் சொல்லிக்கொள்ளட்டும்' என்று தைரியமாக நான்கு நாட்களுக்குச் செய்வார்கள். அப்புறம் அவர்களே விட்டுவிடுவார்கள். ஒரு கட்டுப்பாடோ ஒழுங்கோ இராது. இப்படிச் செய்வதனுலும் பிரயோஜனம் இல்லை.

ராகவன் தர்மத்தை நியமத்தோடு, கட்டுப்பாட்டோடு ஒரு நாள், ஒரு வேளைகூட விடாமல் ரக்ஷித்து வந்தான். மனத்தளர்ச்சி இல்லாமல் செய்து வந்தான். 'யார் பரிகாசம் பண்ணினுலும், யார் இடைஞ்சல் பண்ணினுலும் பண்ணிக்கொண்டு போகட்டும்; அவர்களுக்காக, நாம் நம்முடைய தர்மத்தை விடக்கூடாது' என்பதாக அந்தத் தர்மஸ்வரூபி தர்மத்தை ரக்ஷித்து வந்திருக்கிருன். பித்ருவாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டும் என்பதான தர்மத்தை ரக்ஷிப்பதற்காகத் தன் பிள்ளை காட்டுக்குப் புறப்பட்டபோது, 'அங்கே உனக்கு அநேக விதமான ஆபத்துக்கள் வரலாம். இருந்தாலும் எந்தத் தர்மத்தைத் தைரியத்தோடும் நியமத்தோடும் நீ பரிபாலித்து வருகிருயோ அந்தத் தர்மமானது உன்னை ரக்ஷிக்கட்டும்' என்று அந்தத் தாய் பட்சணம் கட்டிக் கொடுக்கிருள்; சகல ஆபத்துக்களையும் நிவிருத்தி பண்ணும்படியான ஆசீர்வாதத்தைச் செய்கிருள்

திருடர்களிடமிருந்து ஒரு நாய் நம்மைக் காக்கவேண்டுமென்ருல், நாம் அந்த நாயை நன்ருகக் கவனித்துக்கொள்ள வேண்டும். நாம் எதைப் பரிபாலனம் பண்ணுகிருேமோ அது

நம்மைப் பரிபாலனம் செய்யும். 'நீ தர்மத்தைப் பரிபாலனம் பண்ணி வருகிறாய். அது உன்னைப் பரிபாலனம் செய்யட்டும்' என்று பிறர் ராகவனிடத்தில் சொல்வது இருக்கட்டும். சொந்தத் தாய் தன் குழந்தை காட்டுக்குப் போகிறதே என்று அழாமல் இப்படிச் சொல்கிறாள்.

கூடப் பிறந்த சகோதரனே, 'அண்ணா; தர்மம் தர்மம் என்று நீ எதைக் கட்டிக்கொண்டு அலைகிறாயோ அதனால்தான் உனக்கு இத்தனை கஷ்டங்களும் சிரமங்களும் உண்டாகின்றன. அதை விட்டுத் தொலை' என்று பல தடவைகள் சொல்கிறான். 'யார் பரிகாசம் பண்ணினாலும், ராகவா, எந்தத் தர்மத்தை நீ தைரியத்தோடு, நியமத்தோடு, விடாமல் அனுஷ்டானம் பண்ணிகொண்டு வருகிறாயோ அந்தத் தர்மமானது உன்னைக் காப்பாற்றட்டும்' என்று அவன் தாய் கௌசல்யா தேவி ஆசீர்வாதம் செய்து அனுப்புகிறாள்.

'தர்மம் தலை காக்கும்' என்பார்கள். ராகவன் தைரியத்தோடு, நியமத்தோடு பரிபாலனம் பண்ணிவந்த தர்மந்தான் எத்தனையோ ஆபத்துக்கள் காட்டில் வந்தபோதிலுங்கூட அவன் தலையை ரக்ஷித்தது. ராவணனுக்குப் பத்துத் தலைகள் இருந்த போதிலும் அவன் பண்ணிவந்த அதர்மமானது அவனுடைய ஒரு தலையைக்கூட ரக்ஷிக்கவில்லை. பத்துத் தலைகளில் ஒன்றுகூட இல்லாமல் எல்லாம் போய்விட்டது.

## वेदोऽखिलो धर्ममूलम्
### வேதோகிலோ தர்மமூலம்

வேதமே தர்மத்தைச் சொல்கிறது என்று வருகிறது. 'வேதம் பரம்பொருள் ஒன்றைத்தான் குறிக்கிறது' என்று வேதத்தின் முடிகளான உபநிஷத்துகள் சொல்கின்றன. 'வேதத்தினால் அறியப்படுகிற பரம்பொருள்தான் - பரமபுருஷன்தான் தசரதனுடைய பிள்ளை ராமனாக அவதாரம் செய்தான்' என்று ஒரு சுலோகம் சொல்கிறது. 'தர்மஸ்வரூபிதான் ராமன்' என்பது கௌசல்யா தேவியினுடைய வாக்கியத்திலிருந்து - ராமாயணத்திலேயே வரும்படியான சுலோகத்திலிருந்து - நமக்குத் தெரிகிறது. இன்னோர் இடத்தில் சொல்கிறபோது,

**रामो विग्रहवान् धर्मः ।**

**ராமோ விக்ரஹவாந் தர்ம:**

என்று வருகிறது. தர்மம் என்பது மனோபாவம். அது ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டால் எப்படி இருக்குமோ அதுதான் ராமன். கொஞ்சங்கூடத் தப்புவழிக்குப் போகாமல் ஆபத்துக் காலத்திலும் தைரியத்தோடு, நியமத்தோடு த்ருதியாக வைத்துக்

கொண்டிருக்கும்படியான ஸ்வரூபத்திற்கே தர்மம் என்று பெயர். அந்தத் தர்ம ஸ்வரூபந்தான் ராமனுக அவதாரம் பண்ணிற்று. வேதத்தினுலே அறியப்படுகிற பொருள் சகல ஜனங்களுடைய கண்களினுலும் பார்க்கப்படுகிற பொருளாக அவதாரம் செய்தது. அப்போது வேதம் ராமாயணமாக அவதாரம் செய்தது.

வேதத்தின் பெருமையைச் சொல்ல முடியாது. எது எது மிக மிக உயர்ந்ததோ அதையெல்லாம் வேதமாகவே சொல்வது வழக்கம். ஆழ்வார் பிரபந்தம் பாடினுர். அந்த நூல் வேதந்தான். 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று சொல்கிறுர்கள். 'இதை மட்டம் என்று நினைக்காதே. வேதத்தைத்தான் தமிழ்ப் பிரபந்தமாகப் பாடியிருக்கிறுர்' என்று சொல்வதிலிருந்து வேதம் உயர்ந்தது என்பது தெரிகிறது. உயர்ந்த பொருளைச் சொல்ல வேதத்தைச் சொல்லி உயர்த்திக் கொள்கிற வழக்கம் இப்படி அநேகம் உண்டு. பாரதத்தைப் பஞ்சம வேதம் என்று சொல்வார்கள். வேதம் அனந்தம் என்று சொல்லப்படுகிறது. அனந்தமாக இருக்கக்கூடியது எல்லாம் ஒரே பரம்பொருளை உணர்ந்துகொள்ளத்தான்.

அந்தப் பரம்பொருளை உணர்ந்துகொண்டவன் எப்படிப் பட்ட துன்பங்கள் வந்தாலும் கொஞ்சங்கூடச் சிந்தையில் சலனம் இல்லாமல் தர்மத்தையே ரக்ஷிப்பான். சமர்த்த ராம தாஸ் அவர்களால் அநுக்கிரகிக்கப்பட்டதனுல்தான் சிவாஜி மன்னன் மிகக் கொடூரமான எதிரிகளோடு சண்டை போட்ட காலத்திலுங்கூட, எதிரிகளுடைய ஸ்திரீகள் அநாதைகளாக அகப்பட்டபோது எவ்விதமான துன்பமும் அவமானமும் அவர்களுக்கு வராதவாறு அவர்களை அவர்கள் எந்த இடத்தில் இருக்க வேண்டுமோ அங்கேயே கொண்டுபோய்ச் சேர்த்தான். யுத்தம் என்றுல் முதலில் ஸ்திரீகளை அபகரிப்பது, அவமானம் செய்வது என்பதான அநீதியைப் பகைவர்கள் கையாண்டபோதிலும் சிவாஜி அப்படிச் செய்ததில்லை என்று அந்தப் பகைவர்களே சொல்லியிருக்கிறுர்கள். சாக்ஷாத் ராமனையே லக்ஷ்யமாக வைத்துக்கொண்டு ராம மந்திரத்தை ஜபம் பண்ணுகிறவர்களுக்குக் காமம், மோகம் ஆகியவற்றுள் எவ்விதமான சித்த மலமும் வராது. தர்மத்தை விட்டு எந்தக் காலத்திலும் அவர்கள் தவறமாட்டார்கள்.

ராமகீர்த்தனம் பண்ணுகிற இடங்களில் எல்லாம் ஆஞ்சநேயர் இருப்பதாகச் சொல்வதுண்டு. ஆஞ்சநேயர், ராமன் இவர்கள் இரண்டு பேரை நினைத்தால் போதும். அவர்கள் இரண்டு பேரும் இல்லாவிட்டால் ராமாயணம் இல்லை. ராமா

யணம் என்பதுதான் வேதம். வேதமாக இருக்கிறபோது அதன் உபதேசங்கள் ஞானமார்க்கத்தைச் சேர்ந்தவை. ராமாயணமாக அவதாரம் பண்ணின காலத்தில் அதன் உபதேசங்கள் தர்ம மார்க்கத்தைச் சேர்ந்தவை.

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षाद् रामायणात्मना ॥

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தஶரதாத்மஜே ।
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா ॥

வேதத்தினல் அறியப்பட வேண்டிய பரமபுருஷன்தான் சாக்ஷாத் ராமனுகத் தசரதன் பிள்ளையாக அவதாரம் செய்தான். அவன் தசரதன் பிள்ளையாக ஆவிர்ப்பவித்துவிட்டதனுல் வேதம் வால்மீகியிடமிருந்து அவதாரம் செய்தது என்று இந்தச் சுலோகம் சொல்கிறது.

வேதத்தின் பொருள் எல்லாம் ராமாயணத்தில் அடங்கியிருக்கிறது. இதன் சாரமாக இருக்கும் ராமநாமம் நம்முடைய சித்த மலத்தை நீக்கி, சித்தவ்ருத்தியை நிரோதம் பண்ணி, வேறு ஒன்று வேண்டும் என்பது தோன்ருமல், சதா ஆனந்தமாக இருக்கச் செய்யும்.

15

# அக்ஷமாலை

தமிழிலே பழைய நாளிலே பஞ்ச காவியங்கள் என்று ஒரு கணக்குச் சொல்வது வழக்கம். கவிகள் செய்த விசேஷ நூல்களுக்குக் காவியம் என்று பெயர். ஸம்ஸ்கிருதத்தில் காவியம் என்று சொல்வதைத் தமிழில் காப்பியம் என்று சொல்வார்கள். கவியினால் செய்யப்பட்டது காப்பியம். தமிழ் இலக்கண முறைப்படி இன்ன இன்ன ஸம்ஸ்கிருத எழுத்துக்கள் தமிழில் வரும்போது இன்ன இன்ன மாதிரியாக மாறும் என்று இலக்கணத்தில் சில விதிகள் இருக்கின்றன.

தமிழில் உள்ள பஞ்ச காவியங்களில் மூன்று, ஜைனர்களால் எழுதப்பட்டவை. இரண்டு புத்த மதச் சார்பாக உள்ளவை.

தெலுங்கிலும் பஞ்ச காவியங்கள் உண்டு; ஸம்ஸ்கிருதத்திலும் பஞ்ச காவியங்கள் உண்டு. ஸம்ஸ்கிருதத்திலுள்ள பஞ்ச காவியங்களை அநுசரித்துப் பிரதேச பாஷைகளிலுள்ள காவியங்கள் சிலவற்றைத் தனியாக எடுத்து, அவற்றை அந்த அந்த மொழியில், 'பஞ்ச காவியம்' என்று வழங்க ஆரம்பித்தனர் என்று தோன்றுகிறது. ஒவ்வொரு மொழியிலும் அந்த ஐந்து காவியங்களே இருக்கின்றன என்பது இல்லை. எவ்வளவோ கவிகள் எவ்வளவோ காவியங்களைச் செய்திருக்கிறார்கள். ஆனாலும் அவற்றில் ஐந்து காவியங்களை முக்கியமாகப் பொறுக்கிப் பஞ்ச காவியங்கள் என்று விசேஷச் சிறப்புடன் வழங்கி வரலாயினர்.

ஸம்ஸ்கிருதத்திலுள்ள பஞ்ச காவியங்களில் 'மாகம்' என்பது ஒன்று. 'மேகம்' என்பதும் ஒரு காவியத்திற்குப் பெயர். 'மாகம்' என்று பெயர் வந்ததற்குக் காரணம் அதை ஆக்கிய கவியின் பெயர். மாகன் என்னும் கவி இயற்றியதால்

அவன் பெயராலேயே அவன் ஆக்கிய காவியத்துக்கும் 'மாகம்' என்று பெயர் வந்தது. 'மேகம்' என்ற காவியத்தை ஆக்கியோன் 'மேகன்' என்ற பெயரை உடையவன் அல்ல. 'மேகம்' என்ற காவியத்தை எழுதினவன் காளிதாசன். அந்தக் காவியத்தில் மேகத்தைப்பற்றிய வரலாறு அதிகமாக இருப்பதனால் அதற்கு மேகம் என்று பெயர் வந்தது. அதன் முழுப் பெயர் மேகதூதம்; சுருக்கப் பெயர் மேகம்.

'மாகன்', தான் செய்த காவியத்திற்கு 'மாகம்' என்று பெயர் இடவில்லை; 'சிசுபால வதம்' என்று பெயர் இட்டான். சிசுபாலன் என்பவன் கிருஷ்ண பரமாத்மாவின் சொந்தக்காரன். ஆனால் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை எப்பொழுதும் நிந்தித்துக்கொண் டிருந்தான். அவன் செய்த நிந்தையையும் அதனால் அவனுக்கு ஏற்பட்ட கதியையும்பற்றி அந்தச் 'சிசுபால வதம்' என்ற காவியம் சொல்கிறது.

ஒவ்வொரு கவியும் அநேக காவியங்கள் செய்திருக்கக் கூடும். ஆனால் அவனுடைய காவியங்கள் எல்லாவற்றிலும் பெயர்பெற்று விளங்குவன சில காவியங்களே. இந்தக் காவியங்கள் இயற்கையை உள்ளது உள்ளபடியே எடுத்துக் காட்டுபவையாக இருக்கும். இந்தக் காவியங்களை ஆக்கிய கவியின் உடல் அழிந்தாலும் அவன் புகழ் அழியாமல், அவன் ஆக்கிய காவியரூபமாகவே எக்காலத்திலும் அழிவில்லாமல் விளங்கி வரும். இயற்கையின் அழகை உள்ளது உள்ளபடியே படம் பிடித்தாற்போல நம் மனக்கண்முன் எடுத்துக் காட்டி விளங்க வைப்பதனாலேயே அந்தக் காவியங்களுக்கு அழியாப் புகழ் கிடைக்கிறது.

'மாகம்' என்னும் காவியத்தில் 'மாகன்' தாம் உத்தேசித்துள்ள கதையைச் சொல்வதற்கு ஆரம்பிக்கும்போது, கிருஷ்ண பரமாத்மா, துவாரகையில் ஒரு திறந்த வெளியில் போட்டிருக்கும்படியான சிம்மாசனத்தில் வீற்றிருப்பதாகவும், வீணாகானப் பிரியரான நாரத மகரிஷி வானவெளியில் சஞ்சரித்துக்கொண்டு வருவதாகவும், கிருஷ்ண பரமாத்மாவின் பக்கத்திலுள்ள பரிவாரங்கள் எல்லாம், 'ஏதோ ஓர் ஒளி ஆகாசத்தில் சஞ்சரித்துக்கொண்டு வருவதுபோல இருக்கிறதே; அது எதுவாக இருக்கும்?' என்று ஒருவருக்கு ஒருவர் கேட்டுக்கொண்டு தீர்மானிக்க முயலுவதாகவும் ஆரம்பிக்கிறார். வெகு தூரத்தில் இருந்த நாரதரைப் பார்த்து, 'அவர் நாரதர்தாம்' என்று தீர்மானிக்க முடியாமல், 'ஏதோ ஓர் ஒளி மாதிரியாக இருக்கிறதே' என்று யோசித்துக்கொண் டிருக்கிறார்கள். அப்போது அந்த

ஒளி கொஞ்சம் கிட்டே நெருங்கி வர, 'அந்த ஒளி ஏதோ ஒரு புருஷனுகவோ ஸ்திரீயாகவோ சரீரம் உடையதாக இருக்க வேண்டும். உடல் உள்ள ஒரு பொருளாகவே இருக்க வேண்டும்' என்று தீர்மானம் செய்தனர். இன்னும் சற்று அருகில் வர ஆரம்பித்தவுடனே, 'இது ஆணுக இருக்க வேண்டும்' என்று தீர்மானித்தனர். திரும்பியும் அந்த ஆண் யாராக இருக்கலாம் என்று ஆராய்வதற்குள், 'அடேடே, இது நாரதர். கையில் வீணையை வைத்துக்கொண் டிருக்கிருரே' என்று தெரிந்துவிட்டதாம்.

चयस्त्विषामित्यवधारितं पुरा
ततः शरीरीति विभाविताकृतिम् ।
विभुर्विभक्तावयवं पुमानिति
क्रमादमुं नारद इत्यबोधि सः ॥

சயஸ்த்விஷாமித்யவதாரிதம் புரா
ததஶ்ஶரீரீதி விபாவிதாக்ருதிம் |
விபுர்விபக்தாவயவம் புமாநிதி
க்ரமாதமும் நாரத இத்யபோதி ஸ: ||

ஒரு பொருள் வெகு தூரத்தில் இருந்தால் அந்தப் பொருள் இன்னது என்று தெளிவாகத் தெரியாது. ஓர் ஒளிபோலத்தான் தோன்றும். நெருங்கி வரவர அது இன்ன சரீரம் உடையது என்று தெரிந்துகொள்ளலாம். பிற்பாடு இன்னும் அருகில் வந்தவுடன்தான் அங்க அவயவங்களைப் பார்த்து, 'அது யார்?' என்று தீர்மானம் செய்ய முடியும். இப்படி இயற்கையாக உள்ள காட்சியை வைத்து அவர் தம் காவியத்தை ஆரம்பிக்கிருர்.

चयस्त्विषामित्यवधारितं पुरा
சயஸ்த்விஷாமித்யவதாரிதம் புரா

[புரா - முதலில். சய: - நிறைந்த ஒளி.]

முதலில், நிறைந்த ஒளியின் கூட்டமாகத் தீர்மானிக்கப்பட்டது. பிரகாசங்களுடைய சேர்க்கையான ஒரு கூட்டமாக முதலில் தீர்மானம் செய்தார்கள். அவதாரிதம் - நிச்சயிக்கப்பட்டது. வெகு தூரத்தில் இருக்கும்போது நிறைந்திருக்கும்படியான ஓர் ஒளிக்கூட்டமாகத் தீர்மானிக்கப்பட்டது.

ततः शरीरीति विभाविताकृतिम् ।
ததஶ்ஶரீரீதி விபாவிதாக்ருதிம் |

அப்புறம் கொஞ்சம் உருவம் உடையதுபோலத் தோன்றியது.

தத: - அப்புறம்; ஶரீரீ - உடலோடு கூடியவன். உடலோடு கூடியதாக அப்புறம் தீர்மானம் செய்தார்கள். அது இன்னும் கொஞ்சம் நெருங்கி வர ஆரம்பித்தது.

विभुर्विभक्तावयवं पुमानिति

விபுர்விபக்தாவயவம் புமாநிதி

கொஞ்சம் நெருங்கி வந்தவுடன் தனித்தனியாக இன்ன இன்ன அவயவங்கள் என்று பார்க்க முடிந்தது. அப்போது, 'ஒரு புருஷனாக இருக்கவேண்டும்' என்று தீர்மானித்தார்கள்.

क्रमादमुं नारद इत्यबोधि सः ॥

க்ரமாதமும் நாரத இத்யபோதி ஸ: ||

'நாரதர்தாம் வந்துகொண் டிருக்கிறார்' என்று கடைசியில் தீர்மானம் செய்தார்கள்.

இப்படிக் கிரமமாக, இயற்கையாக உள்ளதைப் படம் பிடித்தாற்போலச் சித்திரித்துக் காட்டுவது கவிகளுக்கே இயற்கையாக அமைந்த சாமர்த்தியம். வெகு தூரத்தில் இருக்கும்போது ஸ்தூலமாகவும், வரவர ஒவ்வொரு விசேஷம் தெரியத் தெரியக் கடைசியில், 'நாரதர்தாம்' என்று தீர்மானித்துக்கொண்டார்கள் என்று வெகு அழகாக இயற்கையினுடைய வர்ணனையாக இந்தக் காவியத்தில் சொல்லியிருக்கிறார். அதனால்தான் இந்தக் காவியத்திற்கு இக்காலத்திலும் புகழ் இருக்கிறது. அக்காலத்தில் இதுபோன்ற காவியங்கள் எத்தனையோ இருந்திருக்கின்றன. அவை எல்லாம் இப்போது இருக்கின்றன என்று சொல்வதற்கில்லை.

நாரதர் அருகில் வந்தவுடன் அவர் எந்தக் கோலத்தில் காணப்பட்டார் என்பதை அடுத்த சுலோகத்தில் அந்தக் கவி வர்ணிக்கிறார்:

अजस्रमास्फालितवल्लकीगुण-
क्षतोज्ज्वलाङ्गुष्ठनखांशुभिन्नया ।
पुरः प्रवालैरिव पूरितार्द्धया
विभान्तमच्छस्फटिकाक्षमालया ॥

அஜஸ்ரமாஸ்பாலிதவல்லகீகுண -
க்ஷதோஜ்வலாங்குஷ்டநகாம்ஶுபிந்நயா |
புர: ப்ரவாளைரிவ பூரிதார்த்தயா
விபாந்தமச்சஸ்படிகாக்ஷமாலயா ||

நாரதர் எப்போதும் வீணையை மீட்டிக்கொண் டிருப்பார். அஜஸ்ரம் - எப்போதும்; வல்லகீ - வீணை. குணம் - தந்தி. ஆஸ்பாலிதம் - மீட்டுதல்.

अजस्रमास्फालितवल्लकीगुण-
क्षतोज्ज्वलाङ्गुष्ठनखांशुभिन्नया

அஜஸ்ரமாஸ்பாலிதவல்லகீகுண-
க்ஷதோஜ்வலாங்குஷ்டநகாம்ஶுபிந்நயா|

வீணையின் நரம்பை எப்போதும் மீட்டிக்கொண் டிருப்ப தனால் கட்டைவிரல் சிவந்து ரத்தம் கட்டினாற்போல இருக் கிறது. அங்குஷ்டம் - கட்டைவிரல். அவருடைய நகம் வெள்ளை வெளேர் என்று இருக்கிறது. அதை உடைய விரல்நுனி ரத்தம் கட்டிச் சிவந்திருக்கிறது.

நாரதர் எப்போதும் வீணை வாசித்துக்கொண் டிருப்பார்; விரல் ரத்தம் கட்டிச் சிவந்துபோய் வலிக்கிறபொழுது வீணை யைத் தொங்கவிட்டுவிட்டு ஜபமாலையை எடுத்துப் பகவந் நாமாவைச் சொல்லி உருட்டிக்கொண் டிருப்பார். அப்படி இப்போது கானம் செய்வதை விட்டு ஸ்படிகமாலையை உருட்டு கிறாராம். ஸ்படிக மாலை எப்படி இருக்கிறது? கையில் இருக்கும் செம்மை அந்த ஸ்படிக மாலையில் ஒரே சிவப்பாகப் பிரதிபலிக்கிறது. ஸ்படிகத்தைப் பச்சை இலையில் வைத்தால் ஒரே பச்சையாக இருக்கும். சிவப்பாக இருக்கும் விரல்களில் படும்போது அது ஒரே சிவப்பாகப் பவழம்போல் ஆகிவிடுகிறது. நாரதர் உருட்டுகிற இடத்தில் - அதற்குக் கீழே கொஞ்ச தூரம் வரையில் பவழம் கட்டியிருப்பதுபோல இருக்கிறது. கீழே தொங்கும்படியான மாலையைப் பார்க்கும்போது அது ஸ்படிக மாலையாகத்தான் தெரிகிறது.

पुरः प्रवालैरिव पूरितार्द्धया
विभान्तमच्छस्फटिकाक्षमालया ॥

புர: ப்ரவாளைரிவ பூரிதார்த்தயா
விபாந்தமச்சஸ்படிகாக்ஷமாலயா||

நாரதர் கையில் இருக்கும்படியான ஸ்படிகமாலையின் பாதி வரைக்கும் கையின் செம்மை அடிக்கிறது. அதனாலே அந்த மாலை பாதிப் பவழம், பாதி ஸ்படிகம் இவற்றினால் ஆனதுபோலத் தோன்றுகிறது என்று கவி வர்ணிக்கிறார்.

முதலில் ஒரே ஒளியாகத் தோன்றியது. அப்புறம் சரீரியாகத் தோன்றியது. பின்பு புமான் என்று எண்ணிக் கடைசியில் நாரதர் வந்தார் என்று தீர்மானம் செய்தார்கள் என்று சொல்லி விட்டு, அருகில் இருக்கும் நாரதரைச் சொல்லும்போது வெகு அழகாகப் பேசுகிறார். 'நாரதர் ஒன்று வீணாகானம் பண்ண வேண்டும்; இல்லையானால் பகவந்நாமாவை ஸ்மரித்துக்கொண்டு

இருக்கவேண்டும். வீணையின் தந்தியை மீட்டி மீட்டி விரலில் ரத்தம் கட்டிச் சிவந்திருக்கும்போது ஸ்படிகமாலையை அவர் உருட்டலாம். அப்போது ஸ்படிகமாலை அவர் கைவிரலின் சிவப்பினுல் பாதிப் பவழத்தினுல் கட்டிய மாலையாக இருக்கும்' என்று இயற்கையை உள்ளபடி கவி தம் கற்பனையினுல் வர்ணிக்கிருர்.

ஸ்படிகமாலையை உருட்டும்போதே பகவந்நாமா நினைவுக்கு வரவேண்டும். விபூதி பூசிக்கொள்கிறபோது பகவான் நினைவு வரவேண்டும். சாமானிய மனிதர்கள்கூடத் திருநீறு பூசிக் கொள்கிறபோது கண்ணை மூடிக்கொண்டு சூரியனைப் பார்த்தாவது இறைவனை நினைக்கிருர்கள். இதெல்லாம் இல்லையென்ருல் பகவந்நாமாவை நினைக்கிற நினைவே வராமல் போய்விடும். அதேமாதிரி கையில் மாலை இருந்தால் ஈசுவரநாமாவைச் சொல்லிக்கொண்டு உருட்டவேண்டும்.

पुरः प्रवालैरिव पूरितार्द्धया
विभान्तमच्छस्फटिकाक्षमालया ॥

புர: பிரவாளைரிவ பூரிதார்த்தயா
விபாந்தமச்சஸ்படிகாக்ஷமாலயா ||

பிரவாளம் - பவழம். அந்த ஸ்படிகமாலையை நாரதர் உருட்டும்போது அவரது கைவிரலின் சிவப்பால், ஸ்படிகமாலையின் பாதி, பவழத்தினுல் கட்டியிருப்பது போலப் பிரகாசித்தது என்று அந்தக் காவியத்தில் கவி வர்ணிக்கிருர்.

இதை எதற்குச் சொல்ல வந்தேன் என்ருல் என்னிடம் இருக்கும் இந்த ஸ்படிகமாலையை ஓர் அம்மாள் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனுள். இதிலே ஒரு பவழம் மேருவாகக் கட்டப்பட்டிருக்கிறது. 'நான் வீணை வாசிக்கிறேனு என்ன? எனக்கு வீணை வாசிக்கத் தெரியாதே!' என்று ஒரு பவழமும் இந்த ஸ்படிகமாலையில் கட்டப்பட்டிருக்கிறதோ என்று எண்ணினேன். அப்போது மாகனுடைய காவியம் நினைவுக்கு வந்தது.

अजस्रमास्फालितवल्लकीगुण-
क्षतोज्ज्वलाङ्गुष्ठनखांशुभिन्नया ।
पुरः प्रवालैरिव पूरितार्द्धया
विभान्तमच्छस्फटिकाक्षमालया ॥

அஜஸ்ரமாஸ்பாலிதவல்லகீகுண -
க்ஷதோஜ்வலாங்குஷ்டநகாம்ஶுபிந்நயா |

புர: ப்ரவாளைரிவ பூரிதார்த்தயா
விபாந்தமச்சஸ்படிகாக்ஷமாலயா ||

இந்த ஸ்லோகத்திலிருந்து பவழம் என்ற வார்த்தையின் நினைவு வந்தது. அவ் வார்த்தையைப்பற்றிக் கொஞ்சம் சொல்வதற்காகவே இவ்வளவு பூர்வ கதை சொல்லப்பட்டது 'ப்ரவாளம்' என்பதைத் தமிழில் 'பவழம்' என்று சொல்வர். 'பகடாலு' என்று தெலுங்கிலே சொல்வர். மேற்கே கன்னட தேசத்திற்குப் போனால் 'ஹவள' என்று பெயர். 'பவழம், பகடாலு, பிரவாளம், ஹவள' என்பவை எல்லாம் ஒன்றுதான்; ஒரே பொருளைக் குறிக்கும் வார்த்தைகள்தாம். கன்னடமும் ஸம்ஸ்கிருதமும் கிட்டத்தட்ட இந்த வார்த்தையைப் பொறுத்த அளவில் ஒட்டி இருக்கின்றன. தமிழில் ஒரு வார்த்தையில் வரும் 'ழ'கர எழுத்து தெலுங்கில் 'ட'கர மாகிறது. கன்னடத்தில் 'ள'கரம் ஆகிறது.

பாஷா சாஸ்திரப்படி (Philology) இதை ஆராய்ச்சி செய்து பார்த்தால் தெரியும். தமிழில் 'புகழ்' என்று சொல்கிறோம். தெலுங்கில் 'பொகடுட' என்று சொல்வர். கன்னடத்தில் 'ஹொகளு' அல்லது 'பொகளு' என்று சொல்வர்.

தமிழிலும் மலையாளத்திலும் கிட்டத்தட்ட ஒன்றாக இருக்கும். 'புழை' என்று தமிழில் சொல்வதைப் 'புழா' என்று மலையாளத்தில் சொல்வர். 'ஆலப்புழை, அம்பலப்புழை' என்பதை மலையாளத்தில், 'ஆலப்புழா, அம்பலப்புழா' என்று சொல்வர்.

தமிழில் வரும் 'ழ'கரம் தெலுங்கில் 'ட'கரமாக மாறுகிறது. கன்னடத்தில் 'ள'கரமாக மாறுகிறது. இதற்கு வேதத்தில் ஏதாவது ஆதாரம் இருக்கிறதா என்று பார்த்தேன். மேற்குப் பிரதேசங்களில் - மஹாராஷ்டிரம், கன்னடம் ஆகிய தேசங்களில் - ருக்வேதம் அதிகம். கிழக்குச் சமுத்திரக்கரை முழுவதும் யஜுர்வேதம்; கொஞ்சம் ருக்வேதமும் உண்டு. நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டுப் பேர்கள் தெலுங்கு தேசத்தில் யஜுர்வேதிகள். தமிழ்த் தேசத்தில் 80 பேர்கள் யஜுர்வேதிகள். தெலுங்கு தேசத்தில் சாமவேதம் இல்லை. தமிழ் நாட்டில் 15% சாமவேதம் இருக்கும். 5% ருக்வேதம் இருக்கலாம். மேற்குக்கரைப் பிரதேசம் முழுவதும், - பம்பாய் நாசிக்கிலிருந்து கன்னியாகுமரி வரையில், - ருக்வேதந்தான் அதிகம்.

ஆனால் பழையகாலத்தில் தமிழ்நாட்டில் சாமவேதிகள் அதிகமாக இருந்திருப்பார்கள் என்று நினைப்பதற்குச் சில சின்னங்கள் இருக்கின்றன.

சாகை என்றால் கிளை. ஒவ்வொரு வேதத்திற்கும் அநேகம் சாகைகள் இருக்கின்றன. சாமவேதத்திற்கு ஆயிரம் சாகைகள் என்று சொல்வார்கள். ஒவ்வொரு குடும்பம் ஒவ்வொரு சாகையைச் சொல்வது வழக்கம். தமிழ்நாட்டில் உள்ள சாமவேதிகள் ஆயிரம் பிரிவுகளாக இருந்திருப்பார்கள் என்று தெரிகிறது; 'ஆயிரம் சாகை உடையான்' என்று தேவாரத்தில் சில இடங்களில் ஈச்வரனைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

இப்போது நம் நாட்டில் அதிகமாக இருக்கும் சாமவேத சாகைக்குக் 'கௌதுமம்' என்று பெயர். இந் நாட்டில் இருக்கும் சோழியர்கள் என்ற வகுப்பார்களில் சிலர் சாமவேதிகள். இந்தச் சோழியர்கள் சாமவேதத்தில் ஜைமினி அல்லது தலவகாரம் என்ற சாகையைச் சேர்ந்தவர்கள்.

மலையாள நாட்டில் உள்ளவர்களிலும் தலவகார சாகையைப் பின்பற்றுகிறவர்கள் இருக்கிறார்கள். நம்பூத்ரிகள், தலவகார சாகையைச் சேர்ந்தவர்கள். பாஞ்சான் மனை என்று ஒரு நம்பூத்ரி குடும்பம் இருக்கிறது. அவர்கள் எல்லாரும் தலவகார சாகையைச் சேர்ந்தவர்கள்.

இந்தத் தேசத்தில் திருநெல்வேலிப் பக்கத்திலுள்ள சோழியர்கள் தலவகார சாகை. வடமர்களில் சாமகர்கள் கௌதும சாகை. வடமர்கள் என்று சொல்லப்படுபவர்கள் தெலுங்கு தேசத்திலிருந்தோ நர்மதா நதிப் பிரதேசத்திலிருந்தோ வந்தவர்களாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு காரணம், 'வடமர்கள்' என்ற பெயரிலிருந்தே வடக்கேயிருந்து வந்தவர்கள் என்று தெரிகிறது அல்லவா? இன்னொரு காரணம்,

नर्मदायै नमः प्रातः नर्मदायै नमो निशि ।
नमोस्तु नर्मदे तुभ्यं ॥

நர்மதாயை நம: ப்ராத: நர்மதாயை நமோ நிசி |
நமோஸ்து நர்மதே துப்யம்

என்று ஸந்த்யாவந்தனத்தில் அவர்கள் ஒரு சுலோகம் சொல்லிக் கொள்கிறார்கள். வடமர்களுக்குத்தான் இது உண்டு. இவர்கள் வடதேசத்திலிருந்து வந்தவர்கள் என்று சொல்வதற்கு அதுவும் ஒரு காரணம்.

தெற்கேயே இருந்தவர்களுக்குச் சோழியர்கள் என்று பெயர் இருக்கிறது. இவர்களில் நாயன்மார்களும் இருந்திருக்கிறார்கள். அதில் ஒருவர் பெயர் சோமயாஜிமாறர் (சோமாசிமாறர்) என்பது. அவரைப்பற்றிய சரித்திரம் ஒன்று உண்டு. அவர் தலவகார சாகையைச் சேர்ந்தவர். அவர் ஒரு சமயம்

ஒரு யாகம் பண்ணினார். யாகத்திலே ஆஹுதிகளை அக்கினிமுக மாகக் கொடுத்தால் அதைப்பரமேசுவரன் ஏற்றுக்கொள்ளுகிறான் என்பது ஓர் ஐதிஹ்யம். ஆனால் அவருக்கு ஓர் ஆசை உண்டா யிற்று: 'யாகத்தில் கொடுக்கும் ஹவிசை அக்கினி முகமாகக் கொடுப்பதைவிடப் பரமேசுவரனே நேரில் வந்து வாங்கிக் கொள்ள வேண்டும். அப்படி அவர் வாங்கிக்கொள்வதானால் யார் மூலமாக அவரை வரவழைப்பது?' என்கிற எண்ணம்தோன்றியது. 'திருவாரூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்று ஒருவர் இருக் கிறார். குங்குமப்பொட்டும் ஜவ்வாதுப் பொட்டுமாக அவர் சதா அலங்காரத்தோடு இருப்பார். அவரோடு சுவாமி தினமும் பேசுவதாகவும், அவருக்காகத் தூது போவதாகவுங்கூடச் சொல்லிக்கொள்கிறார்கள்; அவரைப் பிடித்தால் உங்கள் யாகத் திற்குப் பரமேசுவரனே நேரில் வந்து ஹவிசைப் பெற்றுக் கொள்ளலாம்' என்று யாரோ அவரிடத்தில் சொன்னார்கள்.

அவர் திருவாரூருக்குக் கிளம்பிப் போனார். 'நடவடிக்கை கள் எல்லாம் ஒரு மாதிரியாக இருக்கிற சுந்தரமூர்த்தி சுவாமி களை இந்தத் தியாகராஜர் தம்முடைய பக்தனாக ஏன் வைத்துக் கொண்டிருக்கிறார்?' என்று விறல்மிண்ட நாயனார் என்பவ ருக்குக் கோபம். அவர் ஒரு பக்தர். அவரைப்பற்றியும் ஒரு சரித்திரம் இருக்கிறது. அவர் இதற்காகச் சுவாமியிடமே கோபித்துக்கொண்டார். சுந்தரமூர்த்தியைக் கோயிலுக் குள்ளேயே விடக்கூடாது என்று சண்டை போட்டார். சுவாமி அதைக் கேட்கவில்லை. நெற்றியில் குங்குமப்பொட்டு, ஜவ்வாதுப் பொட்டு எல்லாம் வைத்துக்கொண்டு, பக்தர்களை வழிபடாமல் தினமும் தாசிவீட்டுக்குப் போகிறவரோடு பேசிக்கொண் டிருக்கிற இந்தச் சுவாமி இருக்கிற ஊரிலேயே நாம் இருக்கக் கூடாது என்று அந்த நாயனாருக்குக் கோபம் வந்துவிட்டது.

திருவாரூர் எல்லைக்கு வெளியில் உள்ள இடத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கே தங்கிக்கொண்டு அந்தப் பக்கமாக யாரா வது திருவாரூரைச் சேர்ந்தவர்கள் வந்தால் அவர்களுடைய கால்களைக் கோடரியால் பிளந்துவிடுவார். இவருக்குத் தம்மிடத்தில் உள்ள பக்தியை உணர்ந்து தியாகராஜர் அவரை ஆட்கொள்ளவேண்டும் என்கிற உத்தேசத்துடன் ஒரு சமயம் அவர் இருக்கும் இடத்திற்கு வந்தார். நாயனார் அதிதியின் கால்களை அலம்பியபடியே, ''தாங்கள் எந்த ஊர்?'' என்று கேட்டார். வந்தவர், ''திருவாரூர்'' என்று சொல்லவே அவருடைய காலை வெட்டப் போனார். வந்தவர் உடனே ஓட ஆரம்பித்தார். நாயனார் அவரைத் துரத்திக்கொண்டு போனார்.

இவர் ஓட, அவர் ஓட, சுவாமி விறல்மிண்ட நாயனுரைத் திருவாரூர் எல்லைக்குள் அழைத்து வந்துவிட்டாராம். எல்லைக் குள் வந்ததும், ''வந்தோம் இப்பாலே' என்று சொன்னுராம்; அதைக் கேட்டதும் நாயனுர், ''சரி, நான் வந்தது தப்புத்தான்'' என்று தம் காலையே வெட்டிக்கொண்டாராம். பகவான் அவரை ஆட்கொண்டார் என்பது ஒரு கதை. சுவாமி, 'வந்தோம் இப் பாலே' என்று சொன்ன இடம் இப்போது 'வண்டாம்பாலை' என்று சொல்லப்படுகிறது. இந்தக் கதையை வெகு அழகாகச் சொல் கிறவர்கள் இருக்கிருர்கள். எனக்குச் சொல்லத் தெரிந்தது இவ் வளவுதான்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம், சுவாமி அதிகமான அன்பு வைத்திருக்கிருர் என்பதை இப்படியெல்லாம் சோமயாஜி மாறர் என்ற சோழியர் தெரிந்துகொண்டார். ஆனுல் அவரை இவருக்கு முன்பின் தெரியாது. அதற்காக என்ன பண்ணினுர்? தினமும் கொஞ்சம் தூதுவிளங்கீரையைப் பறித்துக்கொண்டு போய்ச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தங்கியிருந்த பரவையார் வீட்டில் கொடுத்துவிட்டு இவர் வந்துவிடுவார். அந்த வீட்டில் இருந்த பரவை நாச்சியார், 'யாரோ பிராமணன் சிரமப்பட்டுப் பறித்துக்கொண்டு வந்து கொடுத்துவிட்டுப்போகிருனே' என்று அதைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு நித்தியம் உபயோகப் படும்படி ஏற்பாடு செய்து வந்தார்.

தூதுவிளங்கீரையைச் சாப்பிட்டால் ஞானம் வரும் என்று சொல்வது வழக்கம்; அநேகம் பேர் இதைப்பற்றிப் பாடியிருக்கி ருர்கள். சோமயாஜி மாறர் இதைத் தினமும் பறித்துக்கொண்டு போய்க் கொடுத்து வந்தார். ஒரு நாள் ஆற்றில் வெள்ளம் வந்துவிட்டது. சேர்ந்தாற்போல் நான்கைந்து நாள் வடிய வில்லை. ஆற்றுக்கு இக்கரையில் இருக்கிற அவரால் தூது விளங்கீரையை நான்கு ஐந்து நாட்களுக்குக் கொண்டுபோய்க் கொடுக்க முடியவில்லை. சுந்தரமூர்த்தி சுவாமிகள், "ஏன் தூது விளங்கீரை சமைப்பதில்லை?'' என்று கேட்டாராம்.

''ஒரு பிராமணன் கொண்டுவந்து தினமும் கொடுத்துக் கொண்டிருந்தான். நான்கைந்து நாளாக வரவில்லை'' என்று பரவையார் அப்போது சொன்னுராம்.

''அவர் யார் பிராமணன்? அவர் வந்தால் நான் பார்க்க வேண்டும்'' என்று அவர் சொன்னுராம்.

மறு நாள் சோமாயாஜி மாறர் தூதுவிளங்கீரையைப் பறித் துக்கொண்டு வந்தபோது சுந்தரமூர்த்தி சுவாமிகளே அவரைப் பார்த்து, "நீர் யார் சுவாமி? எதற்காகத் தினமும் தூதுவிளங்

கீரையைப் பறித்துக்கொண்டு வந்து கொடுத்துக்கொண்டிருக்கிறீர்?'' என்று கேட்டார்.

''அதைப்பற்றி ஏகாந்தமாகச் சொல்லவேண்டும். எனக்கு உங்களால் ஒரு காரியம் நடக்க வேண்டும். உங்கள் அன்பைப் பெறுவதற்காகத்தான் இந்தக் கைங்கரியம் செய்து வருகிறேன்'' என்று சொன்னாராம் சோமயாஜி.

''என்னால் முடியாததைச் சொன்னால்?''

''உங்களால் முடியாதது ஒன்றும் இல்லை'' என்று சொல்லித் தனியாக அவரிடத்தில் தம் ஆசையைத் தெரிவித்தாராம்.

''உங்கள் யாகத்திற்குச் சுவாமி நேரில் வந்து ஹவிசு பெறுவது என்பது சின்னக் காரியம் அல்ல. இருந்தாலும் உங்களுக்காக நான் சுவாமியிடம் கேட்டுப் பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கோயிலுக்குப் போனாராம். சுந்தரர் கேட்டுக்கொண்டதற்குச் சுவாமியும், ''சரி, உனக்காக நான் நேரில் போய் ஹவிசு வாங்கிக்கொள்கிறேன். உனக்கும் அவன் சேவை செய்திருக்கிறான் என்று சொல்கிறாய். ஆனால் ஒன்று: நான் எந்த ரூபமாக வருவேன் என்பது தெரியாது. எந்த ரூபமாக நான் வந்தாலும் அவன் ஹவிசு கொடுத்தால் வாங்கிக்கொள்கிறேன்'' என்று சொல்லி அனுப்பிவிட்டார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சுவாமி சொன்னதை அப்படியே மாறரிடம் சொல்லிவிட்டார். அவரும் மிகவும் சந்தோஷமாகத் திரும்பிச் சென்று பெரிய யாகத்தைப் பண்ணினார்.

யாகம் நடந்துகொண்டிருக்கிறது. சுவாமி ஒரு பறையனைப் போல ரூபம் எடுத்துக்கொண்டு, அம்பாளைப் பறைச்சி ஆக்கி அவள் தலையில் கள்ளுக் குடத்தைத் தூக்கி வைத்து, நான்கு வேதங்களும் நான்கு நாய்களாகப் பின்தொடர, பூத கணங்கள் எல்லாவற்றையும் சேரிக் கூட்டமாக்கிக் கள்ளுக்குடம், தம்பட்டம் முதலியவற்றுடன் திமுதிமுவென்று யாகசாலைக்குள் நுழைந்துவிட்டாராம். இந்தச் சோமயாஜி மாத்திரம் ஆனந்தமாக உட்கார்ந்துகொண்டிருந்தாராம். பாக்கி இருந்த பிராமணர்கள், 'இது என்னடா கூத்து! போச்சு போச்சு. யாகம் முழுக்க வீணாகப் போச்சு!' என்று எழுந்து ஓடிவிட்டார்களாம். இவர் மாத்திரம் - சுந்தரமூர்த்தி சொன்னதை ஞாபகம் வைத்துக்கொண்டோ என்னவோ? - ஈசுவரன்தான் இந்த வேஷத்தில் வந்திருக்கிறான் என்கிற எண்ணத்தோடு ஹவிசு கொடுத்ததாகவும், ஈசுவரன் அதை நேரில் பெற்றுக்கொண்டு அவருக்கு அநுக்கிரகம் பண்ணிவிட்டு மறைந்ததாகவும் சொல்வார்கள். அதனால்

தான் சோமயாஜிமாறர் என்பவர் அறுபத்துமூன்று நாயன்மார் களில் ஒருவர் ஆனார் என்பது சரித்திரம்.

அந்தக் காலத்தில் அநேக யாகங்கள் நடந்திருக்கின்றன. சாமத்திலும் தலவகார சாகை மலேயாளத்தில் அதிகம் இருந் திருக்கிறது. சோழ நாட்டுக்கு உரியவர்கள் - சோழியர்கள் - தலவகார சாகையைப் பின்பற்றியிருக்கிறார்கள் என்றும் தெரி கிறது. அதற்காகச் சோமயாஜியின் கதையைச் சொன்னேன். இந்த ஊகத்திற்கு இன்னொரு காரணம்: தமிழ் நாட்டில் இருக் கும்படியான வேதத்தில் எங்கெங்கே 'ழ' வருகிறதோ அதைத் தெலுங்கு தேசத்தில் 'ட'வாக உச்சரிக்கிறார்கள். ஜைமினி சாமத்திலே 'ழ' என்பது சிறப்பாக வருகிறது. கன்னடத்திலே இதையே 'ள' என்று உச்சரிக்கிறார்கள். தெலுங்கு தேசத்திலே 'ட'வாக வருகிறது. யஜுர்வேதத்தில் வரும் 'ட' என்ற எழுத்து, தலவகார சாமத்தில் 'ழ' என்று ஒலிக்கிறது. அதுவே ருக் வேதத் தில் 'ள' என்று ஒலிக்கிறது. கன்னட தேசத்தில் ருக்வேதம் அதிகம் என்பதையும் தெலுங்கு தேசத்தில் யஜுர்வேதம் அதிகம் என்பதையும் இன்றும் காண்கிறோம். பண்டைக்காலத் தில் சோழநாட்டுச் சோழியர்களில் 'ழ'கரத்தை உச்சரிக்கும் தலவகார சாமவேதிகள் அதிகமாக இருந்திருக்க வேண்டும். இந்த வேத வழக்கை அநுசரித்தே தெலுங்கு 'பகட', கன்னட, 'ஹவள' மாகித் தமிழ்ப் 'பவழ'மாய் விளங்குகின்றது. வடநாட் டில் சுக்ல யஜுர்வேதத்தைச் சேர்ந்த மாத்யந்தின சாகைக் காரர்கள் அதிகம். அந்தச் சாகையின் இலக்கணத்தில் இதர வேதங்களில் வரும் 'ய'கரம் இந்தச் சாகையில் 'ஜ' என்று ஒலிக்கும் என்ற நியமம் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால்தான் 'யமுனா - ஜமுனா', 'யோகி - ஜோகி' என்று உலக வழக்கில்கூட வேதத்தை அநுசரித்து யகரத்துக்கு ஜகரம் ஒலிக்கிறது.

பாலஸ்தீனம் முதலிய ஸெமிடிக் நாடுகளில்கூட மித்திரன், வருணன் போன்ற வைதிகத் தெய்வ வழிபாடுகள் அனுஷ்டானத் தில் இருந்திருப்பது கி. மு. 1,400-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றினால் தெரிய வருகிறது. ஆகையால் அங்கும் பண்டைக் காலத்தில் வேதம் வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். அந்நாடு களிலும் வடநாட்டைப்போல் 'யகோவா-ஜெஹோவா (Jehova)'; 'யூஸப் - ஜோஸப் (Joseph)'; 'யேசு - ஜேஸு (Jesus)' முதலிய யகர ஜகர மாறுதல்களைக் காண்கிறோம். இதனால் அந்நாடு களிலும் சுக்ல யஜுர்வேதத்தைச் சேர்ந்த மாத்யந்தின சாகை இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க வேண்டி இருக்கிறது. இதி லிருந்து வேதத்தில் எந்த எழுத்து எந்தப் பிரதேசத்தில் சிறப்

பாக இருந்திருக்கிறதோ அதே எழுத்துத்தான் அவர்களுக்கு மற்றப் பேச்சிலும் பாஷையிலும் சிறப்பாக இருந்திருக்கிறது என்பது தெரிகிறது.

மலையாளத்திலும் தமிழ்நாட்டிலும் உள்ள தலவகார சாம வேதச் சுவடிகளில் 'ழ'கரமே எழுதப்பட்டிருக்கிறது. அச்சிட்ட பிரதிகளிலும் அவ்விதமே காண்கிறோம். பரம்பரையாக அவ் வேதம் ஓதுபவர்களும் இன்றும் 'ழ'கரத்தையே உச்சரித்து வருகிறார்கள். ஆகையால் தமிழ்நாட்டில் வழங்கும் 'ழ'கரம் வேதவழக்கை அநுசரித்ததே. தலவகாரத்தைப்பற்றிய குறிப்பு களைத் தேவாரங்களிலும் திருவாய்மொழியிலும் காண்கிறோம். சங்க நூல்களின் உரையாசிரியர்களும் தலவகார சாகையைப் பற்றி ஏதோ ஒரு முறையில் கேள்விப்பட்டிருக்கிறார்களென்பது அவர்களுடைய குறிப்புகளிலிருந்து தெரியவருகிறது.

நாம், 'மார்கழித் திங்கள்' என்பதை, தெலுங்கு தேச வைஷ்ணவர்கள் 'மார்கடித் திங்கள்' என்று சொல்வார்கள். 'ழ'கரம் அவர்களுக்கு வராது. ம்ருகசீர்ஷம் என்பதை அவர் கள் 'ம்ருகசீர்டம்' என்பார்கள். தலவகார சாகைக்காரர்கள் தாம் 'ழ'கரம் என்ற சிறப்பெழுத்தை நன்றாக உச்சரிக்க முடியும்.

पुरः प्रवालैरिव पूरितार्द्धया
विभान्तमच्छस्फटिकाक्षमालया ॥

புர: ப்ரவாளைரிவ பூரிதார்த்தயா
விபாந்தமச்சஸ்படிகாக்ஷமாலயா ||

'ஸ்படிகாக்ஷமாலயா' என்று ஒரு வார்த்தை இதில் வரு கிறது. அக்ஷமாலை என்றால் 'அ' முதல் 'க்ஷ' வரையில் சொன் னால் 51 எழுத்துக்கள் ஆகும். அ, ஆ, இ, ஈ என்ற உயிரெழுத்துக் கள் 16. க வர்க்கம், ச வர்க்கம், ட வர்க்கம், த வர்க்கம், ப வர்க்கம் இவையெல்லாம் சேர்ந்து 25 எழுத்துக்கள்; ய, ர, ல, வ, ஶ, ஷ, ஸ, ஹ, ஊ, க்ஷ ஆகிய இவை 10 எழுத்துக்கள்; ஆக மெய்யெழுத்துக்கள் 35. மொத்தம் 51 எழுத்துக்கள்; க்ஷ என்பது மேரு. ஜபம் பண்ணுகிறபோது மனசில் நல்ல நிதானம் உடையவர்கள் இந்த அக்ஷரங்களைச் சொல்லிக்கொண்டே செய் வார்கள். நிதானம் இல்லாதவர்களுக்கு எண்ணிக்கையை நினைவு படுத்த இந்த மாலை. அகரம் முதற்கொண்டு ஊகரம் வரையில் உருட்டினால் 50 ஆகிறது. க்ஷ என்கிற மேருவைத் தாண்டிப் போகக் கூடாது. சூரியன் மேருவைத் தாண்டாது என்ற சம்பிர தாயத்தில் அக்ஷ மாலையை க்ஷ என்னும் மேரு வரையில் உருட் டியவுடன் அதைத் தாண்டிப் போகாமல் அப்படியே

திருப்பிக்கொண்டு மறுபடியும் உருட்ட வேண்டும். ஒரு தரம் உருட்டி, மறுபடியும் ஒரு தரம் திருப்பி உருட்டினுல் 100 ஆகிறது. இது மாதிரி 10 தரம் பண்ணினுல் ஆயிரம் ஆகிறது. அக்ஷம் என்ருல் அ முதல் க்ஷ வரையில் இருக்கும் அகராதி. ஸ்படிக அக்ஷமாலே என்னும்போது ஸ்படிகத்திஞல் அ முதல் க்ஷ வரையில் இருக்கும் மாலே என்று அர்த்தம். ருத்திராக்ஷமாலே என்ருலும் இதுதான்.

ஸ்படிகம் என்பது ஈசுவரனேப்போல ஸ்வச்சமாக, தெளிவாக இருப்பது. ஸ்வச்சம் என்ருல் தெளிவு. தெளிவாக இருப்பதற்கு அச்சா என்று வடக்கே ஹிந்தியில் சொல்லும்படியான சொல்கூட 'ஸ்வச்சம்' என்பதிலிருந்துதான் வந்திருக்கிறது என்று தோன்றுகிறது.

ஜபம் பண்ணும்போது அ முதல் க்ஷ வரையில் இருக்கும் அக்ஷரங்களே எண்ணுவதில் தவறு வந்தாலும் வரும் என்றுதான் அக்ஷமாலேயை வைத்துக்கொண்டால் சரியாக இருக்கும் என்று, ஸ்படிகத்திஞல் கட்டிய மாலேயை வைத்துக்கொள்கிருர்கள். எழுத்துக்களின் வரிசைக்கு நெடுங்கணக்கு என்று பெயர்; அரிச்சுவடியில் இருப்பது. ஆங்கிலத்திலே 'ஆல்பபெட்' (Alphabet) என்கிருர்கள். கிரீக்கில் ஆல்பா என்பதுதான் முதல் எழுத்து. பீடா என்று இரண்டாவது எழுத்தின் பெயர். அரபு எழுத்திலும் அலிப், பே, சே, தே என்றுதான் ஆரம்பம். இரண்டிலும் முதல் எழுத்து ஒரு வகையில் அல் என்று ஆரம்பிக்கிறது. எல்லாப் பாஷைகளும் ஸம்ஸ்கிருதத்திலிருந்துதான் வந்தன என்று அபிப்பிராயப்பட்டால் ஸம்ஸ்கிருதத்தில் 'அல்' என்ற எழுத்து வருகிறதா என்ற சந்தேகம் வரும்.

நடராஜாவின் சிதம்பர நர்த்தனத்தின் அவசான காலத்தில் உண்டான 14 சப்தங்களும் 14 சூத்திரங்களாக வெளிப்பட்டன. இவற்றுக்கு மாகேசுவர சூத்திரங்கள் என்று பெயர். இவைகளே மூலமாக வைத்துக்கொண்டு பாணினி என்பவர் வியாகரணத்துக்கு மூலமாகச் சூத்திரங்களே எழுதினுர். அதற்குத்தான் பதஞ்சலி, மஹாபாஷ்யப் எழுதியிருக்கிருர்.

மனே வாக்குக் காயங்களே ஸம்ஸ்கிருதத்தில் த்ரிகரணம் என்று சொல்வார்கள். பதஞ்சலி மஹரிஷி இந்தத் திரிகரணங்களுக்கும் சிகிச்சை செய்யும்படியான நூல்களே எழுதியிருக்கிருர். மனசுக்குச் சிகிச்சை செய்வதற்காக யோக சாஸ்திரம் எழுதிச் சிகிச்சை பண்ணினுர். அபத்தமான உச்சரிப்புகள் இல்லாமல் இருக்க, வாக்குக்குச் சிகிச்சை பண்ணுவதற்காக, வியாகரண மஹாபாஷ்யத்தை எழுதினுர். உடம்பு பலவிதமான

நோய்களுக்கு உட்பட்டுச் சிரமப்படாமல் இருப்பதற்காக - உடம்புக்குச் சிகிச்சை பண்ணச்-சரக ஸம்ஹிதை என்கிற வைத்திய சாஸ்திரத்தைப் பண்ணினுர் என்று சொல்வார்கள்.

நடராஜா உடுக்கை அடித்துக்கொண்டு, கூத்தாடிக்கொண்டிருக்கும்போது அந்தச் சப்தத்திலேயே

अ इ उण् । ऋऌक् । एओङ् । ऐऔच् । हयवरट् । लण् । ञमङणनम् । झभञ् । घढधष् । जबगडदश् । खफछठथचटतव् । कपय् । शषसर् । हल्—इति माहेश्वराणि सूत्राणि ।

அ இ உண் | ருலுக் | ஏ ஓங் | ஐஔச் | ஹயவரட் | லண் | ஞமஙணநம் | ஜ$_{2}$ப$_{2}$ஞ் | க$_{4}$ட$_{4}$த$_{4}$ஷ் | ஜப$_{3}$க$_{3}$ட$_{3}$த$_{3}$ஶ் | க$_{2}$ப$_{2}$ச$_{2}$ட$_{2}$த$_{2}$சடதவ் | கபய் | ஶஷஸர் | ஹல் - இதி மாஹேஶ்வராணி ஸூத்ராணி |

என்பதாக ஸூத்திரங்கள் ஏற்பட்டன.

கடைசியில்,

हल् इति माहेश्वराणि सूत्राणि

ஹல் இதி மாஹேஶ்வராணி ஸூத்ராணி

என்று முடிக்கிறுர். இவை பல பேருக்குத் தெரிந்திருக்கும், ஆவணி அவிட்டத்தின்போது இதைச் சொல்வதனுல். அப்பொழுதே இவர்கள் இதை வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டே கேட்டிருப்பார்கள். பரமேசுவரன் உடுக்கை அடித்துக்கொண்டு கிர்ர் என்று சுற்றி ஆடிக்கொண்டிருக்கிறபோதே இந்த ஸூத்திரங்கள் ஏற்பட்டன.

எழுத்துக்களைச் சேர்த்துச் சொல்ல ஒரு சுருக்கமான சமிக்ஞையை இந்த ஸூத்திரங்களிலிருந்து பாணினி ஏற்படுத்திக் கொண்டார். 14 ஸூத்திரங்களில் ஒன்றின் முதல் எழுத்தையும், மற்றென்றின் கடைசி எழுத்தையும் சேர்த்துச் சொன்னுல் நடுவில் இருக்கிற எல்லா எழுத்தையும் அது குறிக்கும்.

हयवरट् என்பதில் முதல் 'ஹ' (ह) என்பதுடன் முடிவு 'ஹல்' உடைய 'ல்'லைச் சேர்த்தால் 'ஹல்' என்று ஆகிறது. அது இடையிலுள்ள மெய்யெழுத்துக்கள் எல்லாவற்றையும் குறிக்கும். இப்படியே அச் என்பது உயிரெழுத்துக்களைக் குறிக்கும். ஸூத்திரங்களுடைய முதலெழுத்தாகிய 'அ'வையும் கடைசி எழுத்தாகிய 'ல்'லையும் சேர்த்து அல் என்றுல் எல்லா எழுத்துக்களையும் குறிக்கும்.

अलोऽन्त्यस्य

அலோந்த்யஸ்ய

என்பது ஒரு ஸூத்திரம். இதில் 'அல்' என்பதற்கு எழுத்து என்பது அர்த்தம். இப்படிப்பட்ட ஸம்க்ஞைகளாக மாஹேசுவர ஸூத்திரங்களை எடுத்துக்கொண்டு எட்டு அத்தியாயத்தில் பாணினி வியாகரணம் செய்தார்.

எல்லாப் பாஷைகளுக்கும் அகரம் ஆதியாக இருக்கிறது. இந்துஸ்தானி பாஷையில் 'அலிப்' என்பது முதல் எழுத்து. கிரீக்கில் 'ஆல்பா' என்பது முதலெழுத்து. இந்த இரண்டு எழுத்துக்களும் 'அல்' என்பதிலிருந்து வந்தவையே. இங்கிலீஷில் 'ஆல்பபெட்' என்று எழுத்துக்களைக் குறிப்பதும் 'அல்' என்பதிலிருந்து வந்ததுதான் என்பது என் அபிப்பிராயம்.

அக்ஷரம் என்பதற்கு வியாகரண சாஸ்திரத்திலே 'அல்' என்றுதான் சொல்வது. நடராஜப்பெருமானின் கையில் இருக்கும்படியான உடுக்கிலிருந்து இந்தச் சமிக்ஞைகள் வெளி வந்து பிரகாசித்துக்கொண் டிருக்கின்றன. அதற்குச் சூத்திரம் எழுதினவர் பர்ணினி. பாணி என்ருல் கை என்று ஓர் அர்த்தம். நடராஜப் பெருமானின் கை - பாணி - நினாதம் பண்ணினது பாணினி நாதமாக ஆயிற்று.

நாரதர் ஜபமாலையாகிய ஸ்படிகமாலையை ஏந்தியிருப்பதை மாகன் என்னும் கவி வருணிக்கிறதை முதலில் சொன்னேன். அவர் கைச்சிவப்பு, மாலையிலே ஏறிப் பவழமாகக் காட்டியது என்பதை எண்ணினேன். ப்ரவாளம் பவழமாக மாறியதும் பகடாலு ஆகியதும் நினைவுக்கு வந்தன. பிறகு ழகரம் டகரமாக மாறுவதுபற்றிக் கொஞ்சம் சொன்னேன். மறுபடியும் அரிச்சுவடி, அக்ஷமாலே, அக்ஷரமாலே எல்லாம் தொடர்ந்தன.

16

# 'ஒன்றநும் மனத்துள்ளி - அவா அற்று வீடு பெறுக!'

ஶிவம் என்கிற ஸ்வரூபத்தையும், விஷ்ணு என்கிற ஸ்வரூபத்தையும் ஒரே ஸ்வரூபமாக அநேக இடங்களில் சேர்த்துச் சேர்த்துச் சொல்வது வழக்கம். 'சிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணு:' ன்றும், 'விஷ்ணோஸ்ச ஹ்ருதயம் ஶிவ:' என்றும், 'இவர் அவரது பிராணன், அவர் இவரது பிராணன்' என்றும் சொல்வார்கள். இவர்கள் இரண்டு பேர்களுக்கும் உள்ள ஒற்றுமையை - வேறுபாடற்ற தன்மையை-ச் சொல்வதற்கு அநேக இடங்களில் இவர்கள் இரண்டு பேர்களுடைய நாமாக்களையும் சேர்த்துச் சொல்வதைக் கவனிக்கவேண்டும். ஹரிஹரன், சங்கரநாராயணன், ராமலிங்கம், ராமேசுவரன் - இப்படி அநேக நாமாக்கள் உண்டு. விஷ்ணுவும் ராமனும் ஒரே அம்சந்தானே?. சுவாமிக்கு அந்த ராமனோடு அதிகமாக இருக்கும் உறவை ராமலிங்கம், ராமநாதன், ராமேசுவரன் என்ற பெயர்கள் காட்டுகின்றன.

இந்த ராமேசுவரம் என்ற பதத்தைப் பார்த்துத் தேவதைகளுக்கு ஒரு பெரிய சந்தேகம் வந்துவிட்டதாம். அதாவது இலக்கணத்திலே சந்தேகம் வந்துவிட்டதாம்.

வியாகரணத்திலே மூன்று தினுசு ஸமாஸம்-தொகை-உண்டு. உதாரணமாக இப்போது, 'அரண்மனை மாடு' என்று சொல்கிறோம். இதற்கு அரண்மனையின் மாடு என்று அர்த்தம். இந்தத் தொகைக்குத் தத்புருஷம் என்று பெயர். சிவப்பு மாடு என்று சொல்கிறோம். அது 'சிவப்பான மாடு' என்பதைக் குறிக்கிறது. இந்த மாதிரியான தொகைக்குக் கர்மதாரயம்

என்று பெயர். இன்னோர் இடத்தில் சுப்பிரமணிய ஸ்வாமியைச் சொல்கிறபோது 'வடிவேல்' என்று சொல்கிறோம். 'வடிவேல்' என்றால் வடிவேலை உடையவன் என்று இந்த இரண்டினாலும் குறிக்கப்படாத வேறு ஒன்றைச் சொல்கிறது. இந்தமாதிரியான தொகைக்கு, 'பஹுவ்ரீஹி' என்று பெயர். தமிழில் அன்மொழித்தொகை என்பார்கள். பஹுவ்ரீஹி என்பதில் இரண்டு பதங்கள் இருக்கின்றன. வ்ரீஹி என்றால் நெல். பஹு - பல. ஒருவனுக்கு ஆயிரம் கலம் நெல் வந்துகொண் டிருந்தால் அவனைச் சொல்கிறபோது பஹுவ்ரீஹி என்று சொல்வது வழக்கம். நிறைய நெல்லை உடையவன். இந்த இரண்டு சொற்களும் இவை இரண்டையும் உடைய வேறு ஒருவனைக் குறிக்கின்றன. வீரசோழியம் என்ற மிகப் பழைய தமிழ் இலக்கணத்தில் இந்தச் சமாசத்தைப் 'பலநெற் சமாசம்' என் பதாகச் சேர்த்துக்கொண் டிருக்கிறார்கள். பல என்றால் பஹு, நெல் - வ்ரீஹி. பஹுவ்ரீஹி என்பதற்குப் பல நெல் என்று வைத்துக்கொண் டிருக்கிறார்கள். இப்படி வியாகரணத்திலே தத்புருஷம், கர்மதாரயம், பஹுவ்ரீஹி என்று மூன்று ஸமாஸங்கள் இருக்கின்றன.

'ராமேசுவரம்' என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. லோகம் முழுவதிலும் இது மிகவும் பிரசித்தமானது. அங்கே ராமேசுவரன் என்பது ஸ்வாமிக்குப் பெயராக இருக்கிறது. 'ராமேசுவரன் என்பது வியாகரண சாஸ்திரப்படி எந்த ஸமாஸத்தைச் சேர்ந்தது?' என்கிற சந்தேகம் தேவர்களுக்கு வந்துவிட்டதாம்.

ராஜசேவகன் என்றால் ராஜாவினுடைய சேவகன் என்று தத்புருஷ சமாசம் ஆகிறது. ராஜா வேறு; சேவகன் வேறு. சேவகன் ராஜாவுக்கு உட்பட்டவன். உயர்ந்தவன் ராஜா. அந்த மாதிரி ராமேசுவரன் என்றால் தத்புருஷ ஸமாஸமா? ராமனுடைய ஈசுவரன் 'ராமஸ்ய ஈஶ்வர:' என்று தீர்மானம் பண்ணிக்கொள்வதா? ஈசுவரன் என்றால் உயர்ந்தவன். ராமனுடைய ஈசுவரன் என்று சொல்லிவிட்டால், ராமனுக்கே ஈசுவரனா? ராமனையும் விட உயர்ந்தவனா? - இப்படி அநேகம் பேர் எண்ணிக்கொண் டிருக்கிறார்களே.

'ராமனே சர்வலோக சரண்யன் ஆயிற்றே. அவனுக்கும் மேலே வேறு ஒருவரைச் சொல்வதா? சிவதனுசை ஒடித்தவன் ராமன்; அப்படி இருக்க ராமனுக்கு ஈசுவரன், சிவன் என்று எப்படிச் சொல்வது?' இப்படி அவர்களுக்குச் சந்தேகம் வந்து விட்டதாம்.

'சரி, சந்தேகம் வந்தால் எங்கே தீர்மானம் பண்ணுவது?' என்ற யோசனை வந்தது. 'ராமனுடைய ரூபமாக இருக்கிற விஷ்ணுவின் இடத்திலேயே போய்க் கேட்டுவிடுவது' என்று தங்களுடைய யோக சக்தியினாலே வைகுண்டத்திற்குப் போய் விஷ்ணுவை நமஸ்காரம் பண்ணி, அவரையே கேட்டார்களாம். ''ராமேசுவரன் என்ற பதத்திற்கு எங்களுக்கு ஸமாஸம் தெரியவில்லை. வியாகரணம் எல்லாம் தெரிந்தவர்கள் என்று பேரே தவிர இந்த வார்த்தை எந்தப் பொருளில் ஏற்பட்டது என்று தெரியவில்லை. தாங்களே சொல்லவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்களாம்.

உடனே அவர், ''உங்களுக்கு இதிலே எதற்குச் சந்தேகம் வந்தது? இது தத்புருஷ ஸமாஸந்தான். ராமஸ்ய ஈஶ்வர: ராமேஶ்வர:'' என்று சொல்லிவிட்டாராம்.

முதலில் அவர்கள் எல்லாம் அப்படித்தான் தத்புருஷ ஸமாஸம் என்று தீர்மானம் பண்ணிப் பார்த்தார்கள்.

विष्णुस्तत्पुरुषं ब्रूते

விஷ்ணு: தத்புருஷம் ப்ரூதே

விஷ்ணுவும், ''அது தத்புருஷ ஸமாஸந்தான். ராமனுடைய ஈசுவரன். ராமனுக்கும் ஈசுவரன். எனக்கும் அவர்தான் ஈசுவரன்'' என்று சொன்னவுடன் இவர்களுக்கு இன்னொரு சந்தேகம் வந்துவிட்டது.

'இவர் தத்புருஷ ஸமாஸம் என்று சொல்கிறாரே. தாம் சிவனைவிட உயர்ந்தவர் என்று சொன்னால் அகம்பாவமாகச் சொல்வதாக இவர்கள் நினைத்துக்கொண்டுவிடப் போகிறார்களே என்று மரியாதைக்காக இப்படிச் சொல்லிவிட்டாரோ? விஷ்ணுவைக் குணபூர்ணன் என்கிறோம். குணபூர்ணன் என்றால் அதிலே தன்னடக்கத்தையும் ஒரு குணமாகத்தானே சேர்த்துச் சொல்கிறோம்? அவனது கல்யாண குணங்களுக்குள் அடக்க குணமும் ஒன்றுதானே? அந்த அடக்க குணத்தினாலே அவர் ஒருகால் இதைத் தத்புருஷ ஸமாஸந்தான் என்று சொல்லியிருப்பார் போல் தோன்றுகிறதே! என்ன செய்வது? இதை எப்படி நிச்சயம் பண்ணுவது?' என்கிற சந்தேகம் திரும்பவும் அவர்களுக்கு வந்துவிட்டது.

'சரி, ராமனுடைய ஈசுவரன், எனக்கும் ஈசுவரன் என்று இவர் யாரைச் சொன்னாரோ அவரிடமே போய்க் கேட்டுவிடுவது' என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு உடனே எல்லாரும் கைலாசத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

विष्णुस्तत्पुरुषं ब्रूते

விஷ்ணு: தத்புருஷம் ப்ரூதே

என்று இவர்கள் எழுதிக்கொண்டு கைலாசத்திற்குப் போனுர்களே தவிர, சிவனிடத்தில் விஷ்ணு என்ன சொன்ஞர் என்பதைச் சொல்லவில்லை. 'இவருடைய அபிப்பிராயத்தைத் தனியாகக் கேட்கவேண்டும். அவர் இப்படிச் சொன்ஞர் என்ருல், ''சரி. அப்படியே வைத்துக்கொள்" என்று இவரும் சொல்லிவிட்டால் என்ன செய்கிறது? இதைச் சொல்வது அவருடைய அபிப்பிராயத்தைப் பாதிப்பதாக ஆகிவிடும்' என்கிற அபிப்பிராயத்தோடு விஷ்ணு சொன்ன அபிப்பிராயத்தைச் சொல்லாமலே கைலாசபதியை நமஸ்காரம் பண்ணிவிட்டு, ''சுவாமி, எங்களுக்கு ராமேசுவரன் என்கிற பதத்தினுடைய ஸமாஸம் தெரியவில்லை. அதைச் சொல்லவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்கள்.

''இதிலே உங்களுக்கு என்ன சந்தேகம் வந்தது? அது பஹுவ்ரீஹி ஸமாஸந்தான். ராமனை ஈசுவரஞக உடையவன் நான்'' என்று அவர் சொல்லிவிட்டார்.

बहुव्रीहिं महेश्वरः

பஹுவ்ரீஹிம் மஹேஸ்வர:

'சரி, இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடாகப் போச்சு. விஷ்ணுவைப் போய்க் கேட்டோம், ''ராமனுடைய ஈச்வரன்'' என்று தத்புருஷ ஸமாஸம் சொன்ஞர். அது சரிதாஞ என்று தீர்மானம் பண்ண இவரிடம் வந்தால் இவரோ, "ராமனை ஈசுவரஞக உடையவன்'' என்று பஹுவ்ரீஹி ஸமாஸம் சொல்கிருர். அவர் இவரை உசத்தி என்கிருர். இவர் அவர்தான் உசத்தி என்கிருர். இவர்கள் இரண்டு பேர்களுடைய அபிப்பிராயமும் வெவ்வேருக இருக்கிறது. இவர்கள் இரண்டு பேரும் இந்த விஷயத்தில் தொடர்புடையவர்கள்தாமே. இவர்கள் இரண்டு பேரையும்வந்து கேட்டதே தப்பு. இவர்கள் இரண்டு பேர்களுக்கும் மத்தியஸ்தமாக இருக்கிற ஒருவரிடம் கேட்டிருக்கவேண்டும். இவர்கள் இரண்டு பேர்களோடு சேர்ந்து மூன்ருவதாக இருக்கிறவர் - இந்தச் சண்டைக்கு மத்தியஸ்தம் பண்ணி வைப்பதற்குத் தகுதியானவர் - யார்?' என்று யோசனை பண்ணிஞர்கள்.

'பிரம்மாதான். பிரம்மா, விஷ்ணு, சிவன் என்றுதானே சொல்கிருேம்? இவர்கள் இரண்டு பேரையுந்தான் கேட்டாயிற்று. பிரம்மாவையும் போய்க் கேட்டுவிடுவோம். நிறையப் படித்தவர்; நல்லவர். அவர் என்ன சொல்கிருரோ அதன்படி

தீர்மானம் பண்ணிவிடுவது' என்று யோசனை செய்துகொண்டு அங்கிருந்து பிரம்ம லோகத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அந்தத் தேவதைகளுக்கு விஷ்ணு, சிவன் இரண்டு பேர்களும் சொன்ன பதிலில் திருப்தி ஏற்படவில்லை. அந்த இரண்டு கட்சியிலும் சேராமல் மத்தியமாக இருக்கிற ஒருவரைக் கேட்டு விடவேண்டும் என்கிற எண்ணத்துடன்தான் பிரம்மாவைப் போய்க் கேட்டார்களாம்.

அவர் என்ன யோசனை பண்ணினாரோ? 'இது ஏதடா? சிவனுக்குச் சொல்வதா? விஷ்ணுவுக்குச் சொல்வதா? மத்தியஸ்தம் பண்ணிவைக்க இவர்கள் நம்மிடம் வந்துவிட்டார்களே? நாமும் மையமாகப் போய்விடுவோம்' என்று எண்ணினாரோ என்னவோ? இந்தக் கட்சி, அந்தக் கட்சி என்று ஒரு கட்சியிலும் சேர்ந்துவிடாமல் யோசனை பண்ணிப் பார்த்தார்.

विष्णुस्तत्पुरुषं ब्रूते बहुव्रीहिं महेश्वरः ।
उभयोरप्यतृप्तानां

விஷ்ணு: தத்புருஷம் ப்ருதே பஹுவ்ரீஹிம் மஹேஶ்வர: |
உபயோரப்யத்ருப்தாநாம்

இரண்டிலும் திருப்தி இல்லாமல் போய்விட்டது தேவதைகளுக்கு: பிரம்மாவுக்கு ஆத்மபூ: என்று ஒரு பெயர்.

आत्मभूः कर्मधारयम् ॥
ஆத்மபூ: கர்மதாரயம்||

''ராமேசுவரன் என்பது கர்மதாரய ஸமாஸம். வீர ராகவன் என்றால் வீரனான ராகவன் என்று பொருள். வீரன் வேறு, ராகவன் வேறு அல்ல. அதேமாதிரி: रामश्च असौ ईश्वरश्च रामेश्वरः- ராமஶ்ச அஸௌ ஈஶ்வரஶ்ச ராமேஶ்வர: என்று சொல்லிவிட்டார்: "ராமன் வேறு, ஈசுவரன் வேறு என்று இல்லை; இரண்டும் ஒன்றுதான். இது கர்மதாரய ஸமாஸம்'' என்று சொல்லிவிட்டாராம்.

विष्णुस्तत्पुरुषं ब्रूते बहुव्रीहिं महेश्वरः ।
उभयोरप्यतृप्तानामात्मभूः कर्मधारयम् ॥

விஷ்ணுஸ்தத்புருஷம் ப்ருதே பஹுவ்ரீஹிம் மஹேஶ்வர:|
உபயோரப்யத்ருப்தாநாம் ஆத்மபூ: கர்மதாரயம் ||

ராமேசுவரன் என்ற பதத்திற்கு ஸமாஸம் கண்டுகொண்டு ராமன் உயர்த்தியா, ஈசுவரன் உயர்த்தியா என்று தீர்மானம் பண்ணுவதற்கு அலைந்த தேவதைகளுக்குக் கடைசியில், 'ஈசுவரன் வேறே, ராமன் வேறே என்பது இல்லை. இரண்டும் ஒரே தத்து

வந்தான். இரண்டும் ஒரு பரதத்துவந்தான்' என்று பிரம்மா சொன்னதாக இதிலிருந்து நமக்குத் தெரிகிறது.

இந்த ஒற்றுமையை - இந்த உண்மைத் தத்துவத்தை - நாம் அநேக விதமாகத் தெரிந்துகொள்கிறோம்.

அதேமாதிரி அநேக புராணங்களில் சிவன் ஜயித்தார், விஷ்ணு தோற்றார் என்று வரும். சிலவற்றில் விஷ்ணு ஜயித்தார், சிவன் தோற்றார் என்று வரும். இவர்கள் இரண்டு பேரும் ஒருவரையொருவர் ஓரோர் இடத்தில் பூஜை பண்ணிக்கொண்டிருப்பதாக வரும். ஒருவருக்கொருவர் சகாயம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் வரும்.

விஷ்ணுபுரம் என்கிற ஊர் இருக்கிறது. அதற்கு அடுத்தாற் போல் திருவீழிமிழலை என்ற மகாஸ்தலம் இருக்கிறது. அங்கே ஒவ்வொரு நாளும் விஷ்ணு ஆயிரம் கமலத்தை எடுத்து வந்து சிவனைப் பூஜை பண்ணிக்கொண்டிருந்தார் என்றும், ஒருநாள் ஒரு கமலம் எண்ணிக்கையில் குறைந்தது, என்றும் தம்முடைய நேத்தி ரத்தையே ஒரு கமலமாகப் பறித்துப் பூஜை செய்தார் என்றும் சொல்லப்படுகிறது. அதனால்தான் நேத்ரார்ப்பணேச்வரர் என்று அந்த மூர்த்திக்குப் பெயர் வந்தது என்று ஸ்தல புராணம் சொல்கிறது.

विष्णुर्यस्य सहस्रनामनियमादम्भोरुहाण्यर्चयन्
एकोनोपचितेषु नेत्रकमलं नैजं पदाब्जद्वये ।
संपूज्यासुरसंहतिं विदलयंस्त्रैलोक्यपालोऽभवत्
तस्मिन् मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥

விஷ்ணுர்யஸ்ய ஸஹஸ்ரநாமநியமாதம்போருஹாண்யர்ச்சயன்
ஏகோனோபசிதேஷு நேத்ரகமலம் நைஜம் பதாப்ஜத்வயே |
ஸம்பூஜ்யாஸுரஸம்ஹதிம் விதலயம்ஸ்த்ரைலோக்யபாலோ(ऽ)பவத்
தஸ்மிந் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி ||

திருவையாற்றுக்குப் பக்கத்தில் திருக்கண்டியூர் என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது. அதுவும் சிவவிஷ்ணு ஸ்தலம். அங்கே இருக்கும் ஈசுவரனுக்கு, பிரம்மசிரக்கண்டீசுவரர் என்று திரு நாமம். தனக்கு இருப்பது போலவே பிரம்மாவுக்கும் ஐந்து தலை இருப்பதனால் அவன் கொஞ்சம் அகம்பாவமாக நடந்தான் என் பதற்காகப் பிரம்மாவின் தலை ஒன்றைக் கிள்ளிவிட்டார் பரமேசுவரன். அந்தப் பிரம்மஹத்தி அவருக்கு வந்து சேர்ந் தது. சாதாரணமாக ஒரு பிராமணனுடைய தலையைக் கிள்ளி விட்டாலே பிரம்மஹத்தி வருகிறது என்று சொல்கிறோம்.

பிரம்மாவின் தலையையே கிள்ளிவிட்டதனால்தான் ஈச்வரனுக்கே ஒரு காலத்தில் பிரம்மஹத்தி தோஷம் வந்துவிட்டதாம். பிரம்மாவின் கபாலம் அவர் கையிலேயே ஒட்டிக்கொண் டிருக்கும்படி சாபம் ஏற்பட்டுவிட்டது. இந்தச் சாபத்தை நிவிருத்தி பண்ணி, சிவனுக்கு அநுக்கிரகம் பண்ணினது திருக்கண்டியூர் க்ஷேத்திரத்தில் இருக்கும் பெருமாள்தான் என்பது ஒரு புராணம். அதனால்தான் அவருக்கு ஹரசாப விமோசகர் என்று பெயர். அந்த ஊரில் இருந்துகொண்டு சிவன், விஷ்ணுவைப் பூஜை பண்ணி வந்ததாகவும், விஷ்ணு அவருடைய பிரம்மஹத்தி பாபத்திற்கு விமோசனம் பண்ணினார் என்றும் ஐதிஹ்யம்.

'ராமாயணத்திலே என்ன இருக்கிறது என்று பார்த்தால், சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் ஒரு சமயம் சண்டை வந்தது. வில்லை எடுத்துக்கொண்டு வருகிற சிவனைப் பார்த்து, ''ஹூம்'' என்று விஷ்ணு ஹூங்காரம் பண்ணினார். அவ்வளவுதான். சிவன் கையில் இருந்த வில்லின் நாண் அறுபட்டுப் போய்விட்டது. சிவன் தோற்றுப் போய்விட்டார். விஷ்ணுதான் ஜயித்தார்.'

अधिकं मेनिरे विष्णुम्

அதிகம் மேநிரே விஷ்ணும்

என்று வருகிறது. அதனால்தான் தேவதைகள் எல்லாம் விஷ்ணுவையே உயர்ந்தவராக நினைத்ததாகவும் ராமாயணத்தில் சொல்லப்படுகிறது.

இப்படி அநேகம் புராணங்கள். ஆழ்வார்களும் நாயன்மார்களும் அவரவர்களுடைய தெய்வத்தை அங்கங்கே உயர்த்தி வைத்து ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார்கள். இரண்டும் ஒன்றுதான் என்பதாகவும் சில சில இடங்களில் பாடியிருக்கிறார்கள்.

அநேகம் புராணங்கள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கின்றனவே; ஒன்றாகவும் சில இருக்கின்றன. சிவன் விஷ்ணுவுக்குச் சகாயம் பண்ணினார்; விஷ்ணு சிவனுக்குச் சகாயம் பண்ணினார்; இவர் அவரோடு சண்டை போட்டார்; அவர் இவரோடு சண்டை போட்டார் என்று அநேக புராணங்கள் இருக்கின்றனவே. 'ஒன்றோடொன்று சண்டை போட்டுக்கொள்ளும் இரண்டும் எப்படி ஒன்றாகும்? இரண்டும் வெவ்வேறுதான் என்றால் இரண்டு கடவுள்களா? இரண்டு பேரும் பரதெய்வங்களா? பரதெய்வம் என்றால் ஒன்றுதானே. இரண்டு இருக்க முடியாதே' என்கிற சந்தேகம் வந்துவிடுகிறது.

'இவர்கள் இரண்டு தெய்வம் என்று சொல்கிறார்களே?' என்கிற குற்றச்சாட்டு வைஷ்ணவர்களுக்கு வராது. அவர்கள்,

'விஷ்ணுதான் பரதத்துவம், பாக்கி எல்லாரும் அவருடைய பக்தர்கள்' என்று சொல்லிவிடுகிறார்கள். சைவர்களுக்கும் வருவதற்கு வழி இல்லை. 'சிவன்தான் பரதத்துவம். இதர தெய்வங்கள் எல்லாம் இவருக்குக் கீழேதான்' என்று இவர்களும் சொல்கிறார்கள். சிவனையும் விஷ்ணுவையும் - இரண்டு பேர்களையும் - பரதெய்வமாகக் கொண்டாடுபவர்கள் அத்வைதிகள்தான். இரண்டு கடவுள்கள் என்பதனால் ஏதாவது அபசாரம் வருமானால் இவர்களுக்குத்தான் வரவேண்டும். இவர்கள்தான் இதற்குச் சமாதானம் சொல்லியாக வேண்டும்.

பரமாத்மா ஒருவராகத்தான் இருக்கவேண்டும். இரண்டாக இருக்க முடியாது. பாக்கிப் பேர்கள் எல்லாரும் ஜீவர்களாகத்தான் இருக்கவேண்டும். விஷ்ணு, சிவன் என்று இரண்டு வருகிறதே என்று கேள்வி வந்தால் இவர்கள் என்ன சமாதானம் சொல்லுவார்கள்? 'பிரம்மாதான் ராமேசுவரன் என்ற பதத்திற்குக் கர்மதாரய ஸமாஸம் சொல்லியிருக்கிறாரே; ராமன்தான் ஈசுவரன், ஈசுவரன்தான் ராமன். இரண்டு பேரும் ஒன்றுதான் என்று அவர் சொல்லியிருப்பதுதான் அழகாக இருக்கிறதே' என்று சொல்லலாம்.

சரி, அது நன்றாக இருக்கிறது. வைத்துக்கொள்வோம். ஆனால் புராணங்களில் அவர்கள் சண்டை போட்டுக்கொண்டார்கள், ஒருவருக்கொருவர் சகாயம் செய்துகொண்டார்கள் என்பதாக எல்லாம் சொல்லியிருக்கிறதே. சண்டை போட்டுக்கொள்கிற இரண்டு பேர்கள் எப்படி ஒன்றாக முடியும்? 'எங்கள் ராமன் பரதத்துவம், ஈசுவரன் அவருடைய பக்தர்தான். சுவாமி இல்லை' என்று ஒருவர் சொல்கிறார்; அதற்குப் பதில் என்ன சொல்வது?

புராணங்களில் விஷ்ணுவுக்குத் தசாவதாரம் சொல்லியிருக்கிறதே. பத்து அவதாரங்களுக்குள் ராமாவதாரம் ஒன்று. பரசுராமாவதாரம் ஒன்று. அதனால் ராமன் வேறு, பரசுராமன் வேறு என்று சொல்வது உண்டா? இரண்டு பேரும் விஷ்ணுவினுடைய அம்சந்தானே.

ஸ்ரீராமன் சீதா கல்யாணத்திற்குப் பிறகு தம்முடைய தகப்பனார், பத்தினி எல்லாருடனும் தம்முடைய ராஜ்யமான அயோத்திக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். அப்போது அவர்களோடு ஒரு பூரிப்பிராமணனும் வந்துகொண்டிருந்தானாம். கல்யாணம் என்றால் பூரி கொடுப்பார்கள், வாங்கி வரலாம் என்று போனவன். கல்யாணம் ஆனவுடன் திரும்பி அவர்களோடேயே அந்தப் பிராமணன் வந்துகொண்டிருக்கிறான்.

க்ஷத்திரியர்களுடைய பூண்டையே அடியோடு ஸம்ஹாரம் பண்ணிவிடுவது என்கிற சங்கல்பத்தை எடுத்துக்கொண் டிருந்த பரசுராமர் கோடரியைத் தூக்கிக்கொண்டு ராமன் எதிரில் வந்து, ''என்னடா, உளுத்துப்போன சிவதனுசை உடைத்துவிட்டோம் என்கிற அகம்பாவத்தோடு கல்யாணம் பண்ணிக்கொண்டு வருகிறுயா? வா, என்னேடு சண்டை போட'' என்று யுத்தத்திற்கு வந்துவிட்டார்.

''சிவனும் விஷ்ணுவும் சண்டை போட்டுக்கொண்டதாக வந்திருப்பதனுலே சிவன் வேறுதான், விஷ்ணு வேறுதான்'' என்று சொல்லிக்கொண் டிருந்த ஒரு பேர்வழியிடம் இந்தப் பூரிப் பிராமணன் மெள்ளச் சொன்னுனும். ''ராமனும் பரசு ராமனும் சண்டை போடுகிருர்களே, சண்டை போட்டுக் கொள்வதனுல் ராமன் வேரு? பரசுராமன் வேரு?'' என்கிற பிரச்னையைக் கிளப்பிவிட்டானும்.

''இவர்கள் இரண்டு பேரும் சண்டை போட்டுக்கொள்வ தனுலே வேருக ஆகிவிடமாட்டார்கள். இரண்டு பேரும் ஒரே பரமாத்மாவின் அம்சம்தான். இது எல்லாம் ஒரு வேஷம், ஒரே பரம்பொருள்தான் ராமனுகவும் பரசுராமனுகவும் இரண்டு வேஷம் போட்டுக்கொண்டு சண்டை போடுகிறதுபோல விளை யாடுகிறது'' என்று அவர் சொன்னுர். அவர் சொன்னுரோ சொல்லவில்லையோ; அவதார தத்வத்தை அறிந்தவர்கள் இப்ப டித்தானே சொல்லியிருக்கவேண்டும்.

விஷ்ணுவும் சிவனும் சண்டை போட்டதனுலே விஷ்ணு வேறு சிவன் வேறுதான் என்று ராமாயணத்தில் சொல்லியிருக் கிறதே என்ருல் ராமன் பரசுராமனேடு சண்டை போட்டிருப் பதும் ராமாயணத்தில்தானே வருகிறது? சண்டை போட்டுக் கொண்டதனுல் இவர்கள் வேருகப் போய்விட்டார்களா? இல்லை.

சண்டை போட்டுக்கொள்கிறது, சகாயம் பண்ணிக் கொள்கிறது என்பதனுல் எல்லாம் சுவாமி வேருகப் போகவில்லை. ஒரே பரமாத்மாதான் ஓரோர் ரூபத்திலே ஓரோர் விதமாக அநுக்கிரகம் பண்ணுவதற்குத் தம்முடைய மாயா சக்தியினுலே ஆவிர்ப்பாவம் செய்திருக்கிருர். எந்த எந்த அநுக்கிரகத்தைப் பெறவேண்டுமென்று விரும்புகிருேமோ அந்த அந்த அநுக்கிர கத்தைச் செய்யும்படியான மூர்த்திகளை உபாசிக்கவேண்டும். முடிவில் எல்லாம் ஒன்றுதான் என்கிற ஞானம் நமக்கு இருக்க வேண்டும். 'பேதங்கள் எல்லாம் காரியத்திற்காகப் போட்டுக் கொள்ளும்படியான வேஷம், இவை எல்லாம் பரமாத்மாவின் விளையாட்டு' என்கிற உண்மையை நாம் கிரகித்துக்கொள்ள

வேண்டும். மூன்று அவஸ்தை, மூன்று குணங்கள் என்று எல்லாம் மூன்ருக இருப்பதனுல் அந்தப் பரம்பொருளும் மூன்று ரூபமாக இருந்து நமக்கு அநுக்கிரகித்துக்கொண் டிருக்கிறது.

பிரம்மா, விஷ்ணு, சிவன் இந்த மூன்று மூர்த்திகளும் மூன்று குணங்களோடு கூடிய ஆவிர்ப்பாவம். சத்துவ குணம், ரஜோ குணம், தாமச குணம் என்பதாக மூன்று குணங்களின் பெயர் களைக் கேள்விப்பட்டிருப்போம். ஆனுல் அர்த்தம் தெரியாமல் இருக்கலாம். தெரிந்தாலும் சரியாகப் புரியாமல் இருக்கலாம்.

சத்துவம் என்பதுதான் வெளுப்பு. ரஜஸ் என்பது மஞ்சளும் சிவப்பும் கலந்த பொன்நிறம், தமஸ் என்பது ஒரே கறுப்பு, இருள். ஒன்று சாந்தம், ஒன்று இருட்டு, ஒன்று வேகம் என்று பொதுவாக வைத்துக்கொள்ளலாம். வெளுப்பு, கறுப்பு இந்த இரண்டுக்கும் நடுவில் இருக்கும்படியான நிறத்தைத்தான் ரஜஸ் என்று சொல்வது. பிரம்மாதான் இந்த ரஜோகுணத்தைச் சேர்ந்தவர்; மஞ்சளும் சிவப்பும் கலந்த ஸ்வர்ண நிறம் உடையவர்.

விஷ்ணு என்ன காரியம் செய்கிருர்? லோக பரிபாலனம் செய்கிருர். பரிபாலனம் செய்வது சத்துவ குணம்தானே? லோகத்தை ஒரேயடியாகச் சம்ஹாரம் பண்ணுவது தாமஸ குணத்தைச் சேர்ந்தது. சிவன்தான் சம்ஹாரமூர்த்தி. அதனுல் தான் விஷ்ணுவைச் சத்துவ குணமாகவும், சிவனைத் தாமச குணமாகவும் சொன்னுர்கள். பிரம்மா ரஜோகுணத்தைச் சேர்ந் தவராகப் போய்விட்டார்.

பாகவதத்திலே ஒரு சுலோகம் வருகிறது:

**श्रेयांसि तत्र खलु सत्त्वतनोर्नृणां स्युः ।**

**ஸ்ரேயாம்ஸி தத்ர கலு ஸத்வதனோர்ந்ருணும் ஸ்யு: ।**

ஜகத்திற்கு அநுக்கிரகம் பண்ணுவது, ஜகத்தை ரட்சிப்பது என்பது சத்துவ குணத்தைச் சேர்ந்தது. மனிதர்களுக்குச் சிரேயஸ் கிடைக்க வேண்டுமானுல் சத்துவ குண மூர்த்தியைத் தான் ஆசிரயித்து அநுக்கிரகத்தைப் பெறவேண்டும். ஒரே பரமாத்மாதான் லோக சிருஷ்டியில் மூன்று விதமான குணம் உடையவர் என்ருலும் இந்த மூன்றிலும் சத்துவ குண மூர்த்தி யைத்தான் நாம் உபாசித்து அநுக்கிரகம் பெறவேண்டும் என்று சொல்லியிருக்கிறது.

'சத்துவகுண சம்பன்னன் யார்? விஷ்ணுதானே? அவர் லோக பரிபாலனம் பண்ணுகிருர். அவரைத்தான் உபாசிக்க வேண்டும்' என்பதாக விஷ்ணு பக்தர்கள் விஷ்ணுவை ஆராதித் திருக்கிருர்கள்.

நாம் யாரிடம் போகிறோமோ அவர் எந்தக் குணம் உடையவராக இருக்கிறாரோ அந்தக் குணம் உடையவராக நாமும் ஆகிவிடுகிறோம். யாரோ ஒருவரைப் பார்க்க ஒருவன் போகிறான். போகும்போது சாந்தமாகத்தான் போனான். ஆனால் அவன் போன வேளை, அவர் ஒரே கோபமாக இருக்கிறார். அதனால் திரும்பி வரும்போது, 'என்னவோ பெரிய மனிதன் என்று அவனிடம் போனால், முகம் கொடுத்தே பேசாமல் இருக்கிறானே. கிடக்கு!' என்று அவன் கோபமாக வந்துவிடுகிறான். நமக்குக் காரியம் ஆக வேண்டுமென்றால் ஒருவன் எந்த மாதிரியான நிலையில் இருக்கும்போது போக வேண்டும்? சாந்தமாக, கோபம் இல்லாமல், உற்சாகமாக ஒருவன் இருக்கும் நிலையில் போனால் தான் நம் காரியம் சித்தியாகும். இப்படி இருக்கிறவர் யார்? விஷ்ணுதான். அவர் கோபம் இல்லாமல் லோகத்தை எல்லாம் பரிபாலித்துக்கொண் டிருக்கிறார். இது பாகவதம் முதலிய விஷ்ணு சம்பந்தமான புராணங்களின் நிரூபணம்.

இதே மாதிரி ஸ்காந்தம் என்ற சிவ சம்பந்தமான புராணத்தில் என்ன சொல்லியிருக்கிறது என்றால், 'நாம் ஸ்ரேயஸை அடையச் சத்துவ குணம் உடையவனைத்தான் உபாசிக்க வேண்டும். சிவன்தான் சத்துவ குணம் உடையவன். சிவனை உபாசித்தால் தான் மாயை விலகும்; பாசம் விலகும். சிவன் பாசத்தை விலக்குவதனால்தான் அவனுக்குப் பசுபதி என்று பெயர். சிவன்தான் சத்துவ குணம் உடையவன். ஆதலால் சிவனை உபாசித்தால் தான் நமக்கும் சத்துவ குணம் ஏற்படும்' என்று சொல்லியிருக்கிறது. இந்த மாதிரியாக ஸ்காந்தத்தில் சூதசம்ஹிதையில் சொல்லியிருக்கிறது. இதற்கு வியாக்கியானம் வித்யாரண்யர் காலத்தில் ஏற்பட்டிருக்கிறது. 'சில புராணங்களில் சிவனைத் தமோகுணம் உடையவராகவும், பிரம்மாவை ரஜோகுணம் உடையவராகவும், விஷ்ணுவைச் சத்துவகுணம் உடையவராகவும் சொல்லப்பட் டிருக்கிறதைத் தலைகீழாக மாற்றி, சிவன் தான் சத்துவகுணம் உடையவர்; பிரம்மாதான் ரஜோகுணம் உடையவர், விஷ்ணுதான் தமோகுணம் உடையவர்' என்று சூதசம்ஹிதையில் நிரூபணம் பண்ணப்பட் டிருக்கிறது.

சந்தேகப்படுகிறவர்களுக்கு, 'உருவத்தைப் பாரேன்; என்னை ஏன் கேட்கிறாய்? சத்துவகுணம் என்பது வெளுப்புத் தானே? சிவன் ஒரே வெளுப்பாக இருக்கிறார். உடம்பிலும் ஒரே வெளுப்பான திருநீறு. அவர் இருக்கும் இடமான கைலாசமும் வெளுப்பு. வாகனமான ரிஷபமும் வெளுப்பு. சுத்தஸ்படிக சங்காசராக அவர்தாமே இருக்கிறார்?

'இப்படிப்பட்ட உருவத்திலிருந்தே இவர்தாம் சத்துவ குணம் உடையவர் என்பது தெரிகிறதே. விஷ்ணு என்ன நிறம்? கறுப்பு. கறுப்பு எந்தக் குணத்தைச் சேர்ந்தது? தமோ குணத்தைச் சேர்ந்தது. அவர் இருக்கும் நிலை என்ன? தூக்கம். தூக்கமும் தமோகுணத்தைத்தானே சேர்ந்தது. ஆகவே விஷ்ணு தமோகுணத்தைச் சேர்ந்தவர்தாம். சிவன்தாம் சத்துவகுண ஸ்வரூபி. அவரைத்தான் ஆசிரயிக்க வேண்டும்' என்று நிரூபிக் கிறது.

'ஆனால் அந்தப் புராணத்தில் அப்படிச் சொல்லியிருக் கிறதே. விஷ்ணுதானே லோக பரிபாலனம் செய்கிறார்? பரிபாலன காரியம் கருணை அல்லவா? பரிபாலன காரியத்தில் கருணை இருக்கிறதே. இருக்கட்டும். சிவன் கூத்தாடுகிறார். சிவன் கூத்து எதைச் சேர்ந்தது? ஆனந்தத்தைச் சேர்ந்தது. இவர் நிறமும் வெளுப்பு. இவர் இருக்கும் நிலையும் ஆனந்தக் கூத்து. விஷ்ணுவின் நிறமும் கறுப்பு. நிலையும் தூக்கம். ஆகை யால் சிவன் சத்துவ குணத்தைச் சேர்ந்தவர். விஷ்ணு தமோ குணத்தைச் சேர்ந்தவர். சிவனைத்தான் ஆசிரயிக்க வேண்டும்' என்றனர் சிவபக்தர்கள்.

பாகவதத்திலே சத்துவகுண ஸ்வரூபியைத்தான் ஜனங்கள் உபாசிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறது.

சிவனுடைய ஸ்வரூபம், நிலை இரண்டும் சத்துவ குணம். செய்கிற காரியமோ தமோகுணத்தைச் சேர்ந்த சம்ஹாரமாக இருக்கிறது என்று தோன்றுகிறது. விஷ்ணுவினுடைய ஸ்வரூ பம், நிலை இரண்டும் தமோகுணத்தைப்போல இருக்கிறது. ஆனால் செய்கிற காரியமோ சத்துவகுணத்தைச் சேர்ந்த லோக பரிபாலனமாக இருக்கிறது என்று தோன்றுகிறது. ஆகவே இரண்டு பேர்களிடமும் சத்துவ குணக் கலப்பு இருக்கிறது.

ஒருவருக்குக் காரியத்திலே சத்துவம். ஒருவருக்கு ஸ்வரூபத்திலே சத்துவம். காரியத்திலே சத்துவம் உடையவர் ஸ்வரூபத்திலே தமோகுணம் உடையவராகத் தோன்றுகிறார். ஸ்வரூபத்திலே சத்துவம் உடையவர் காரியத்திலே தமோகுணம் உடையவராகத் தோன்றுகிறார். ஆகவேதான் இந்த இரண்டு மூர்த்திகளையுமே அடியார்கள் வழிபடலானார்கள்.

ஒன்று, இரண்டு, மூன்று என்றாலும், மூன்று இரண்டு ஒன்று என்றாலும் இரண்டு நடுவில்தான் இருக்கிறது. எப்படிக் கணக்குப் பண்ணினாலும் பிரம்மா ரஜோகுணத்தைச் சேர்ந்தவ ராகத்தான் இருக்கிறார். இரண்டாவதாகத்தானே இருக்கிறார். சத்துவ குண சம்பந்தம் இவருக்கு உருவத்திலேயும் இல்லை.

தொழிலிலேயும் இல்லை: சிவனும் விஷ்ணுவுந்தான் சத்துவ குணத்தை ஒவ்வொரு முறையில் மாற்றி மாற்றிப் பரிமாறிக் கொள்கிறார்கள் போலும். அதனால்தான் பிரம்மாவுக்குக் கோயில்கள் இல்லை. பக்த கோஷ்டிகள் இல்லை. பூஜை, ஆராதனை எதுவும் இல்லை. அவரை மத்தியஸ்தராகவே தள்ளிவிட்டார்கள்.

சிவனுடைய தொழில் சம்ஹாரமாக இருந்தாலும் அதுவும் ஒரு வகையில் சத்துவந்தான்; அதுவும் கருணைதான் என்றும் சமாதானம் சொல்லியிருக்கிறார்கள்.

ஆழ்வார் ஒருவர் பெருமாளைப் பார்த்துப் பாடுகிறபோது 'நீதான் முனி. நீதான் பிரம்மா. நீதான் முக்கண்ணன்' என்று சொல்கிறபோது, 'முனியே நான்முகனே முக்கண்ணப்பா!' என்று சொல்கிறார். முக்கண்ணனைச் சொல்ல வருகிறபோது தான் அப்பா என்கிற அடைமொழியைப் போட்டு, 'முக்கண் அப்பா!' என்று சொல்கிறார்.

அப்பாவுக்குத்தானே குழந்தைகளிடத்தில் தனியாகக் கருணை இருக்கும்? ஓடியாடி ரொம்பச் சிரமப்பட்ட குழந்தையைப் பார்த்து, 'அப்பா, கொஞ்சம் தூங்குடா. வேலை செய்தது போதும்' என்று சொல்கிற கருணை அப்பாவுக்குத்தான் உண்டு.

அவரவர்கள் செய்கிற பாவம், புண்ணியம் இவற்றை அநுசரித்து விஷ்ணு பலனைக் கொடுத்துக்கொண்டு லோக பரிபாலனம் பண்ணுகிறார். பிரம்மா லோகத்தைச் சிருஷ்டி பண்ணிக் கொண்டே இருக்கிறார். சிவன் என்ன பண்ணுகிறார்? பிரளயத்தை உண்டுபண்ணுகிறார். பிரளயத்தில் இருக்கும்படியான கருணை வேறு ஒன்றிலும் இல்லையே.

पुनरपि जननं पुनरपि मरणम्

புநரபி ஜநநம் புநரபி மரணம்

என்று ஆசாரியாள் குறிப்பிட்டிருப்பதுபோல், பாப புண்ணியங்கள் ஒழியாமல் பிறப்பு இறப்பிலேயே உழன்றுவரும் ஜீவராசிகளைப் பார்த்து, 'அப்பா, போதுமடா சுற்றினது. நீ எத்தனை காலம் இப்படிச் சுற்றினாயோ அத்தனை காலம் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்' என்று பிரளயத்தைக் கருணையோடு உண்டு பண்ணுகிற அப்பா சிவன்தான்; முக்கண்ணன்தான். அதனால் தான், 'முக்கண்ணப்பா!' என்று சொல்லியிருக்கிறார்.

பொதுவாகப் பிரளயம் என்று சொன்னாலும் அதிலே மூன்று விதம் உண்டு. ஒன்று நித்தியப் பிரளயம், ஒன்று மகாப்பிரளயம், ஒன்று ஆத்யந்திகப் பிரளயம்.

ராத்திரி ஆகிவிட்டால் ஒவ்வொரு நாளும் தூங்குகிறேமே. பகலில் எத்தனை துக்கத்தை அநுபவித்து இருந்தாலும், அந்தத் துக்கம் எல்லாம் மறக்கும்படி ஒரு தூக்கத்தைக் கொடுத்து ஒவ்வொரு நாளும் கொஞ்சம் ஆனந்தம் அடையும்படியாகச் செய்கிறவன் ஈசுவரன்தான். இதற்கு நித்தியப் பிரளயம் என்று பெயர். சகல துக்கமும் நிவிருத்தியாகிவிடுகிறது தூக்கத்திலே. 'நன்ருகத் தூங்கினேன்' என்று காலையில் எழுந்திருக்கும் போதுதான் அது தெரிகிறது.

மகாப்பிரளயம் வரும்போது ஜகத் முழுவதும் அழிந்து போகிறது. மறுபடியும் பிரம்மா சிருஷ்டிக்கிருர். மறுபடியும் சிருஷ்டியாகும்போது அவரவர்கள் அவரவர்களுடைய கர்மாவுக்கு ஏற்ப ஜனனம் எடுக்கிருர்கள்.

ஆத்யந்திகப் பிரளயம் என்பது இரண்டு, மூன்று என்று வேறுபாடாகத் தோன்றுகிற பேத ஞானங்களை ஒழித்து, எல்லாம் ஒன்று என்கிற அத்வைத ஆனந்த அநுபவத்தை.அளித்து மோக்ஷத்தைக் கொடுப்பது. இப்படிப்பட்ட பிரளயங்களை எல்லாம் ஈசுவரன் உண்டுபண்ணுவதே கருணையினுல்தான். சதா துக்கப்பட்டுக் கொண்டிருக்கிற சமஸ்தப் பிரபஞ்சமும் ஒவ்வொரு நாளும் தூங்கி, இன்பத்தை அடையும்படியாகவும், தன் ஸ்வரூபத்திலே அவை எல்லாவற்றையும் ஒடுக்கிக்கொண்டு, ஓய்வு எடுத்துக் கொள்ளும்படியாகவும், பேத ஞானத்தை ஒழித்து, அபேத தரிசிகளாக ஆக்கி நிரந்தரமான மோட்சத்தை அடையும்படியாகவும் செய்கிறவன் ஈசுவரன்தான். அந்தக் காரியங்கள் தாமசத்தைச் சேர்ந்தவை ஆகா. அப்பாவின் கருணை நிரம்பிய கிருத்தியத்தை அவன் செய்வதால்தான் அவர், 'முக்கண்ணப்பா!' ஆகிருர். விஷ்ணுவினுடைய நிலை தூக்கம்போல இருந்தாலும் அது யோகநித்திரைதான். நித்திராமுத்திரையினுலே அவர் லோகத்தை ரட்சித்துக்கொண் டிருக்கிருர்:

निद्रामुद्रां निखिलजगतीरक्षणे जागरूकाम्

நித்ராமுத்ராம் நிகிலஜகதீரக்ஷணே ஜாகரூகாம் ||

விஷ்ணுவின் நிறம் கறுப்பாச்சே? அதற்கென்ன சொல்வது? நிறம் கறுப்பாய் இருந்தால் என்ன? கறுப்பு, வெளுப்பு இரண்டும் ஒன்றுதான். விப்கியார் (Vibgyor) என்று சொல்லப்படுகிற ஏழு வர்ணங்களிலே கறுப்பு, வெளுப்பு இரண்டையும் நிறம் இல்லை என்று தள்ளிவிட்டார்கள்.

ஊன்றிப் பார்த்தால் சிவனிடத்தில் தமோகுணமாய்த் தோன்றும் சம்ஹாரமும் விஷ்ணுவினிடத்தில் தமோகுணமாய்த்

தோன்றும் நித்திரையும் பிசுபிசுத்துப் போய்க் கருணைமயமான சத்துவமாகவே முடிகின்றன.

'அரன் அதிகன் உலகளந்த அரிஅதிகன் என்றுரைக்கும்
அறிவிலோர்க்குப்
பரகதிசென்று அடைவுஅரிய பரிசு'

என்று பெரிய கவி கம்பன் சொல்லியிருக்கிருன். 'அரியும் சிவனும் ஒண்ணு அறியாதவன் வாயில் மண்ணு' என்று ஒரு சின்னக் குழந்தைகூடச் சொல்லிவருகிறது.

எவன் தூங்கிக்கொண்டே பதினாலு லோகங்களையும் ஆட்டி வைத்துப் பரிபாலனம் செய்கிருனே மோக்ஷத்தை அடையாமல் பாபிகளாகவே உள்ள எண்ணிறந்த ஜீவன்களும் ஒன்ருகிச் சகல துக்கங்களையும் மறந்து எவனிடத்தில் ஒடுங்கி நிற்கின்றனவோ அவ்விருவரும் பரமாத்மாவின் சுத்த சத்துவ ஸ்வரூபங்களே என்ற இப்படிப்பட்ட ஆதாரமான உயர்ந்த தத்துவம் இல்லை என்ருல் இந்தக் குழந்தை வாக்கு இத்தனை காலம் வந்து கொண்டே இருக்காது.

நூறு வருஷத்திற்கு முந்தி இருந்த மனிதர்கள் இப்போது இல்லை. மரங்கள் இல்லை. வீடுகள் இல்லை. கருங்கல் விமானங்கள் இருக்கின்றன. எது உறுதியானதோ அதுதான் காலத்தைக் கடந்து நிற்கும். அப்படி இந்தக் குழந்தைகளுடைய வாக்கும், சாரம் இருப்பதனுல், தத்துவம் இருப்பதனுல் வழக்கில் இருந்து கொண்டிருக்கிறது.

புராணங்களில் சிவன் உயர்த்திபோலும், விஷ்ணு உயர்த்தி போலும் பேசப்பட்டிருப்பது அந்த அந்தச் சமயத்தில், கதைகளுக்கு ஏற்ற வேஷத்தில். இப்படிப் பல விதமான ரூபங்கள், நாமங்கள் எல்லாவற்றையும் அந்த ஒரு பரம்பொருள் பெற்றிருப்பதே மாயையினுல்தான். மாயா என்பதை யாமா என்று திருப்பி எது இல்லாததோ அதுதான் மாயை என்று சொல்வர். இல்லாதது இருப்பதுபோலத் தோன்றுவதற்குக் காரணம் நம்முடைய மருள். குழந்தை, பண்ணுருட்டிப் பொம்மைக்காரன் செய்யும் மண் பலாக்காயைப் பார்த்தால் உள்ளே பலாச்சுளை இருக்கிறது என்றே நினைக்கும். இது குழந்தைகளுக்கு மாத்திரம் தோன்றும் மாயை. மண், பெண், பொன் இவற்றைப் பார்த்து மாயையில் சிக்குவது எல்லோருக்கும் ஏற்படும் மருள். பூமாலையைப் பார்த்துப் பாம்பு என்று தோன்றும் மருள் இருட்டில் சரியாகக் கவனிக்காதவனுக்குத் தோன்றும் மருள். இது எல்லாம் பொய் என்று அறிந்துகொள்ள வேண்டும். வேதாந்த சாஸ்திரப் படிப்பினுல் இவ்வித அறிவு ஏற்படலாம். அறிவு

மாத்திரம் வந்தால் போதாது; அவன் அருளால் கிடைக்கும் அநுபவமும் வேண்டும்.

ஓர் ஊருக்குப் போய் இது கிழக்கு, இது மேற்கு என்று திசைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்டாலும் திடீரென்று எது கிழக்கு என்று நமக்கே சந்தேகம் வந்துவிடும். அறிவு இருந்தும் அநுபவம் இல்லாததால் இந்தப் பிரமம் உண்டாகிறது. இதற்கு, 'திக்பிரமம்' என்று பெயர். அநுபவபூர்வமாகத் தெரிந்து கொண்டுவிட்டால் சிவன் வேறு, விஷ்ணு வேறு என்கிற பேதம் நமக்குத் தோன்றவே தோன்றாது. ஆகவே யார் உயர்வு, யார் தாழ்வு என்ற எண்ணத்தை விட்டுவிட்டு, அவரவர் பரம்பரைத் தெய்வத்தைப் பரதேவதையாக வழிபட்டு நமது தெய்வமே ஏனை யோரும் வழிபடும் மூர்த்திகளாக அருள் புரியா நிற்கிறது என்ற அபேத அநுபவத்துடன் அழியாத சாந்தத்துடன் இருப் போமாக.

முற்றும்